சிவமயம்.

ஸ்ரீ மஹாகணபதயே நம:

# ஸ்ரீ அப்பய்யதீக்ஷிதசுவாமிகளால்

திருவாய்மலர்ந்தருளப்பட்ட

# சித்தாந்த லேச சங்கிரகம்.

இது

கோவிலூர் மடாலயம்

திருக்கொண்டைவென்றையம்

ஸ்ரீ வீரசேகர ஞானதேசிகர் பாதசேகரராகியும்

வேதாந்தபாஸ்கரராகியும் நியாயசந்திரராகியும்

இலங்காநின்ற,

## ஸ்ரீ சுப்பய்யசுவாமிகளவர்களால்

மொழிபெயர்க்கப்பட்டு

திருவொற்றூர்

ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி சுவாமிகள் மடாலயம்

ஸ்ரீ சி. சுவாமிநாத சுவாமிகளவர்களால்

சென்னை ஜீனா “ஆட்லிட்” பிரஸில்

பதிப்பிக்கப்பட்டது.

1917.

சிவமயம்.

ஓம் மஹா கணபதயே நம:

# முகவுரை.

அறிவின்மிக்க பெரியீர்!

அகண்ட சிவாகார விருத்தியொன்றினாலே சர்வதுக்கங்களினின்றும் நீங்கிச் சுகமாயிருக்கலாமென்பது வேதத்துணிபன்றோ. அதனையறிவுறுத்தற் பொருட்டே உபநிடதவியாக்கியான பூதமாகிய வேதாந்த சூத்திரங்களும் அதன் பாடியமும், விவரண முதலிய இலக்ஷக்கணக்கான கிரந்தங்களுமெழுந்தனவாகும். அத்துணைக்கிரந்தங்களையும்சிரவணிப்பதெனின் சாமானிய மதியுடையவர்க்கு முடியாத காரியமெனக்கருதி, உலகமுழுவதும் புகழ்ப்பெற்றவர்களும், ஸ்ரீமத் பாடிய வியாக்கியான வியாக்கியானத்திற்கு வியாக்கினமே முதலாக 104 அரும்பெருஞ் சாஸ்திரங்கள் செய்தவர்களும், சிவரகசிய நவமாங்கிசத்தில் "சங்கோதாகவம்சஜனைகத்தீக்ஷிதனென்பவனாகிய சைவசிகாமணி, சிவபக்த அக்ரகண்ணியனாய்ப் பாசுர ஆசாரநிரதனாய், அதிமதியுடையோனாயவதரிப்பன் என ஸ்ரீமன்மகாதேவரானே ஸ்ரீ பார்வதிதேவியாருக்கு விதந்து ஓதியருளப்பெற்றவர்களும், மற்றுமநேகஞ் சிறப்புவாய்ந்தவர்களுமாகிய ஸ்ரீமதப்பய்யதீக்ஷித சுவாமிகள் சர்வ வேதாந்த சாஸ்திரங்களையுந் திரட்டிச்சர்வ வேதாந்த சாஸ்திர சித்தாந்த லேசசங்கிரகமென்னுமிந்நூலைச் செய்தருளினார்கள். இதன்கண்ணே முக்கியமாக அதிகாரிகட்குத்தெரியவேண்டிய 45 விடயங்கள் விசாரிக்கப்பட்டிருக்கின்றன. விசாரித்தற்பொருட்டு ஸ்ரீமத் பாடியம், வார்த்திகம், பஞ்சபாதிகை, விவரணம். பாமதி, சங்

க்ஷேபசாரீரகம், பிரகடார்த்தம், கௌமுதி, பதார்த்ததத்வநிர்ணயம், வேதாந்தசித்தாந்தமுக்தாவலி, பிரகடார்த்த விவரணம், தத்துவவிவேகம், நைஷ்கர்மிய சித்தி, பஞ்சதசி, திருக்குத் திருசிய விவேகம், கற்பதரு, தத்துவசுத்தி, நியாய சந்திரிகை, தத்துவப்பிரதீபிகை, நியாயசுதை, விவரணவார்த்திகம் சாஸ்திர தீபிகை, நியாயரத்நமாலை, அத்வைத வித்யை, விவரண உபந்யாசம், நியாய நிர்ணயம், வேதாந்த கௌமுதி, சாஸ்திர தர்ப்பணம், சித்சுகி, அத்வைத தீபிகை, நியாயமகரந்தம், என்பன முதலிய அநேகம் அருமையிருந்த அத்வைத நூல்கள் கொள்ளப்பட்டிருக்கின்றன. ஆகையினால் இவ்வொரு நூற்படிப்பதானேஎல்லாவேதாந்த முக்கியநூல்களும் படித்ததாகுமென்பது யாம் கூறுமலே வெளியாம். இத்தகைய அறியநூல் தமிழிலில்லாதகுறையை நீக்கும்பொருட்டு; வேதாந்தபாஸ்கரரும், நியாய சந்திரருமாகி யிலங்காநின்ற, ஸ்ரீவீ. சுப்பய்ய சுவாமிகள் அவர்களால் செந்தமிழ் நடையில்மொழிபெயர்க்கப் பட்டுத் திருவாரூர் ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி சுவாமிகள் மடாலயாதிபதிகளாகிய ஸ்ரீ சின்னசுவமிநாதசுவாமிகளால் அச்சுவாகன மேற்றபட்டிலவுகின்றதுஇது ஒவ்வொருஞானஅதிகாரிகரத்திலும் சிந்தாமணிபோவிலங்க வேண்டிய இன்றியமையாததேயாம்.

சுபம்! சுபம்!! சுபம்!!!

ஸ்ரீ சுவாமிநாத சுவாமிகள்
ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி சுவாமிகள் மடம்
மடப்புரம்
திருவாரூர்.

இங்ஙனம்,
சி. மூர்த்திசுவாமிகள்
ஆனந்தாசிரமம்
வியாசர்பாடி
பெரம்பூர் பாரக்ஸ் ரோட்டு
சென்னை.

உ

ஓம்மகாகணபதயேநம:

# சித்தாந்த லேச சங்கிரகம்.

---

## மங்கலம்.

கருக்கிளர் துயரையறுக்குனர்க்கருளக்கருணை செய்வலம்புரிக்களிற்றைக், குருக்களென்றுரைக்க விருக்குமெய்க்குகனைக்குமரியா மமுதவல்லியினை, யெருக்கணிபாரிஜாத வீச்சுரனை யெந்தையைப் பந்தவேரறுப்பான், றிருக்களருறையும் வீரஞானேச தேசிகன்றனைத் தினம்பணிவாம்.

## ஞானபாடிய நல்வாழ்த்து.

திருமகள் கொழுநன்றிருப்பதத்தெழுந்த திவநதி மகிப்பிரிவாற்போர், லருமை முற்குரவரணி பொருவடைந்திங்காயிரம் வகைபிரிந்துணர்த்துங், கருமருவணியாகியே பகவற்கமூலனற்றிருமுகமறையில், வருமொருபிரம வுயிரொருமையினைவழங்குநூல் வாழிநீடூழி.

ஓதுசிவவொருமையின்றன்றுணிவதனிற் பரமா
யுறு கருத்தராமுதியர் விவகாரந்துணிந்த,
மாதுமுதல் விடயமதிலாதரவில்லவராய்
மருவுபலவகை முறைகள் மன்னவழங்கினரால்

தாதசரணத்துரையின் மொழியினுணர்ந்திய தாங்
தன்மூலமாகிய பற்பல துணிபு முடிவின்,
பேதமதையிவணைநாயிழைமறுகியுந் தெளிவான் [யே.
பேசுவனுணனிதொகுத்துப் பெருமனிருந்துணை
சொலுமவற்றினுட் சொற்றிட விழைந்ததேயான
பலவின் பக்கங்கடமைப் பெரும்பான்மையுமதிதா
னுலவளவினிலுத்தி கொண்டுணர்வுறவுரைத்தே,
மெலவுரைகுவல்வித்தரமின்றியேமேலாய்.

## 1-வது விதித்திரய நிரூபணம்.

ஆண்டுமுதலில் "ஆன்மா வேஹைமைத்திரேயி! காணத்தக்கது கேட்கத்தக்கது கருதத்தக்கது" என அங்கசகிதந்தன் வேதமோதியவனும், மறைச்சிரங்களானே தொடக்கத்தே யடைவுற்ற பிரஹ்மான்மாவின்கண்ணே இனிதெழுந்த உணரும் வேட்கையனும் ஆயவனுக்கு அவ்வுணர்வுறுவான் மறைச்சிரச்சிரவணத்தே புலப்படாநின்ற விதி எத்தகையதெனச் சிந்திக்கப்பெறும்:—அபூர்வவிதி, நியமவிதி, பரிசங்கியாவிதியுமென விதியின் விதங்கடாம் மூன்றென்ப. ஆண்டு முக்காலத்
எவ்வாற்றானு தினும் எங்ஙனமுமடைவுறாததன் அடைவாம் பயனுடைய விதியாதியதாம்; "நெற்களைத் தெளிக்கின்றான்" என்பதே போலும். இவண் நெற்களைத் தெளித்தலாகிய சமஸ்கார
எவ்வாற்றாய் கருமத்திற்கு விநியோகமின்றி அயலளவையானே யாங்ஙனமும் அடைவின்றாம். பக்கத்தே யடைவுற்றதற்கு அடைவுறா அங்கிச பரிபூரணப்பயனுடை விதி யிரண்டாவதாம்; "நெற்களைக்குத்துகின்றனர்" என்பதேபோலும். ஈண்டு விதியின்றேனும் புரோடாசத்தின் பகுதிப்பொருள்களாய நெற்கட்குத்தண்டுலமாயுறுந்தருக்கத்தானே குத்துதலினடைவுண்

டாமெனு, அதனடைவின் பொருட்டிவ்விதி யென்பதின்றும்; மற்றேு, தருக்கித்தலானே குத்துதலடைவுறுங்கால் அஃதொப்பவே உவகறிந்த காரணத்தன்மைச் சிறப்பின்மையின் உகிராற்போழ்தலாதியும் பக்கத்தேயடைவுறும் எனக் குத்துதலின் அடைவுறு அங்கிசஞ் சம்பவித்தலின், அவ் வங்கிச பரிபூரண பயனுடையதாம். இரண்டங்கிகட்கு ஓரங்கத்திற்காதல் ஓரங்கியின்கண்ணே இரண்டங்கங்கட்காதல் நீங்காவடைவாகவே வேறங்கிக்காதல் வேறங்கத்திற்காதல் நீக்கப்பயனுடைய விதிமூன்றுவதாம். எங்ஙனம் அக்கினிசயனத்தே, "உண்மையினிக்குசையைக்கவர்ந்து எனப்பரியின் குசையைப்பற்றுவன்" என்பதாம். எங்ஙனந்தான்:—சாதுர்மாச சம்பந்தமாயதனுட்கிடந்த இஷ்டி விசேடமாய கிரகமேதீயத்தில், "ஆஜ்யபாகங்கள் வேட்கப்படுகின்றன" என்பதாம். அக்கினி சயனத்தின்கண் பரிக்குசைக்கவர்ச்சிகரக்குசைக்கவர்ச்சியென்னுமிரண்டுமனுட்டிக்கத்தக்கதாம். ஆண்டுப்பரிக்குசைக்கவர்ச்சியின்பால் "இதைக்கவர்ந்து" என்னுமந்திரம் குறியினுனே கயிற்றின் கவர்ச்சியையொளிர்விக்கும் ஆற்றல் வடிவதாதலின் எப்போழ்தும் எய்துமெனு அஃதை யெய்துவானுதல் அதனெய்தாத அங்கிசத்தை நிறைவிப்பானுதல் விதியல்லவாகும்; மற்றேு, குறியின்றால்லியத் தானே நீள் செவியனது கயற்றின் கவர்ச்சியின்கண்ணு மந்திரமடைதலாகுமெனு அஃதை நீக்குவானுமெனக. அங்ஙனமே, கிருகமேதீயத்திற்குத்தரிச பூரணமாசப் பகுதியுடைமை யுண்மையின் அஃதொக்கவாற்றுக வென்பதானே ஆச்சிய பாகங்கள் எஞ்ஞான்றும் அடைவுபெறுமெனு ஆண்டு விதியதனை யடைவிப்பானுதல் அதனை நியமிப்பானுதல் அல்லவாம்; மற்றேு, அஃதொக்கவாற்றுகவென்பதனுனே பிரயாஜாதிகளுமடை

மடைத்து

வுறுகவென அஃதை நீக்குவானும். கிருகமேதீயாதிகரண பூர்வ பக்கமுறையானே இவ்வுதாகரணமும் யாண்டேனுமொருதலத்தே உதாகரிக்கத்தக்கதாமென வுதாகரித்தனம். நியமவிதியின்கண்ணும் பக்கத்தடைவுற்ற குத்துதலின் அடைவுறு அங்கிச நிறைவினைச் செய்யுங்கால் அதனாற்றடைப்படுதலானே மற்றொரு பக்கத்ததாயடைவுற்ற மறுசாதனமாய உகிராற்போழ்தலாதியின் நீக்கமும் நேருமென அயனீக்கப் பயனுடைமையொப்ப நிற்றலின் நியமபரிசங்கியைகளின் விவேகம் பயனானே பற்றுறுதாமெனப் பகராற்க; விதியினானே குத்துதலினியமமின்றித் தருக்கித்துக்கிடைத்ததாய உகிராற்போழ்தலாதிகளை நீக்குதற் கேலாமையானே அடையப்படா அங்கிசத்தைநிறைவித்தல் வடிவநியமத்திற்கு முதன்மையுண்மையினானும் விதிக்கற்பாலதாய குத்துதற்குள்ளடங்கலினானே இனிதடைவுறுதலினானும் அதற்கே நியமவிதிப்பயனதாம் பான்மையுடன்படுதலின், அதன் பின்னருளதாவதாயதும் விதிக்கற்பாலதல்லாததனுள்ளடங்கினமையானேசெய்மைத்தாய அயனீக்கத்திற்கு அண்மைத்தாய பயனுறவே பயனதாம் பான்மை தகுதியல்லாமையின். இவ்வாறு பிரிவுற்ற மூவகைத்தனுள் எவ்விதத்ததாக அச் சிரவணவிதியாதரிக்கப்பெறும்.

## 2-வது சிரவண விதிக்கு அபூர்வ விதித்தன்மை முதலியவற்றின் விசாரம்.

பிரகடார்த்தக்காரர் ஆதியராயசிலர் கூறுவதாவது:—

இஃதபூர்வ விதியாம், அடைவுறுத் தன்மை யுண்மையின், மறைமுடிக் கேள்வி பிரஹ்மத்தை நேரே காண்பானேதுவென உடன்பாடெதிர்மறை யளவையின்றன்றே. உலகத்

னும் தன்முயற்சி மாத்திர வாயிலாயமறைமுடியாராய்ச்சிக்கும் சத்தையின்றுணிபு வடிவப்பிரஹ்ம சாக்ஷாத்காரப்பொருட்டதாந்தன்மையினுனே பக்கத்தேயடைவுறுங்காற் குருமுக அதீன சிரவணநியம விதியுளதாகுக "அதனை யுணர்வான் அவன் குருவையே சென்றடைக" எனக் குருவினடைவு விதியினுனே குருவின்றிய விசார நீக்கந்துணியப்பெறுதலின் பயனற்றதாம் நியமவிதியெனச் சங்கிக்கத்தக்கதன்றும்; குருவினடைவு கேள்வியினங்கமாதலினுனே கேள்வி விதியில்லாக்கால் அவ்விதியேயிலதாகுமன்றே, அதனுனே அதற்குப்பயனின்மைபற்றுருதாம். மாருயினே அத்தியயன அங்கவடிவமாகிய உபகமனவிதியினுனேவரைந்தபாடமுதலியவற்றின் விலக்காமெனை அத்தியயன நியமமும் பயனற்றதாம். அல்லது அத்வைத ஆன்ம பரமாயபாஷைப் பிரபந்தக் கேள்விக்குப் பக்கத்தே அடைவுண்மையினுனே வேதாந்தக் கேள்வியில் நியமவிதியுளதாகுக. "மிலேச்சத்தகைமையையடையற்க" என்பதாதி நிடேதத்தானே அதனடைவின்மையாமென்றறையாதொழிக; சாத்திரவிற்பத்தி மந்தத்தன்மையானே மறைமுடிக் கேள்விமுடியாத காரியம் எனப் புருடார்த்த நிடேதத்தைத் தாண்டியும் பாடைப்பிரபந்தத்தானே அத்வைதமறியும் வேட்கையனுக்கு ஆண்டுமுயல்கை சம்பவித்தலினுனே நியம விதிக்குப்பயனுடைமை கூடலின். அங்கீகரிக்கவும் படுகின்றதன்றே கர்த்திருஅதிகரணத்தின்கண்:—புருடார்த்தத்தில் பொய்ம்மொழி மொழிதல் நிடேதிக்கப்பட்டிருந்தபோதினும் தரிச பூரண மாசத்திடையில் யாதேனுமோரேதுவினுனே அங்கீகரித்த நிடேதத்தைத் தாண்டியவனும் கெடுதலொன்றுமிலாது மகத்துணிபையவாவினனும் ஆகியோனுக்குப் பொய்ம் மொழியின்பால் முயல்கையுண்

திற் கேள்வியாற்றிஞேனுக்கும் பெரும்பான்மையாய் அஃது உளதாகாமையின் கேள்வியாற்ருத கருவிலுற்றவாம தேவருக்கு அஃது உதயமாதலின் இருபாலும் பிறழ்ச்சியாமென்க. கேள்வி மாத்திரமே கேட்கப்படும்பொருட் சாக்ஷாத் கார ஹேதுவென வேறு நூற்கேள்வியில் கவரப்பெற்றது பொது நியமமென்பதுவுமின்ரும்; எதஞனே ஈண்டுச்சிறப்பித்து ஏதுத்தன்மைக்கவர்ச்சியின்றேனும் பொதுவாயிலானே ஏதுத்தகைமையடைவுறுமெனக்கடாக்கிளப்புலாமோ. காந்தருவாதி நூற்கேள்விஷட்ஜ முதலியவற்றை நேரே காண்பான் காரணமாமென வுடன்படினும் கருமுகாண்டாதியவற்றின் கேள்வியானே அவற்றின் பொருளாறுமுதலியவற்றை நேரே காணக்காரணமைமயினுனே பிறழ்தலின். ஆகையாலபூர்வவிதியேயிதுவாம். (பல புகழ்படைத்த)பாடியத்தேயும் "சஹகாரியந்தர விதிபக்கத்தான்மூன்ருவதஃதுடையார்க்கு விதியாதிபோலும்" என்னுமதிகரணத்தே வித்தையின் சகாரியாய மௌனத்திற்குப் பாலியபாண்டித்தியம்போலும் விதியேகோடற்பாற்ரும். அபூர்வதன்மையானே யென்பது, பாண்டித்திய பதத்தாற் பகரப்பெற்ற கேள்வியின்கண்ணபூர்வவிதியே யங்கீகரிக்கத்தக்கதென்பதாம். மறைமுடிக் கேள்விக்கு நித்திய அபரோக்ஷப்பிரஹ்ம சாக்ஷாத்காரஹேதுத்தகைமை அடைவுருததன்ரும்; அபரோக்ஷவத்து விடயப் பிரமாணத் தன்மையின் வரைவானே சாக்ஷாத்காரஹேதுத் தன்மையின் அடைவு, சாத்த அபரோக்ஷவாதத்தில் விரித்து நிலைபெறுத்தப்படுதலின். அதன் பொருட்டேயன்ரே அதனை விரித்துரைத்தல். இத்துணையானே, பிரஹ்மப்பிரமாணத் தன்மையாற்ருெடக்கதரிசன சாதாரண பிரஹ்ம சாக்ஷாத்காரஹேதுத்தன்மையடைவுறினும் அவித்தையைபகற்றுவான் அவா

வப்பெற்ற சத்தைத்துணிபுவடிவ அதன் சாக்ஷாத்காரஹேது
த்தகைமை கேள்விக்கு அடைவுறுமெனை அறையற்க; ஆரா
ய்த் தக்கதைத்துணிதற் கேதுத்தகைமை ஆராய்வு மாத்தி
ரைக்கும், பிரஹ்ம சாக்ஷாத்காரஹேதுத்தகைமை பிரஹ்மப்
பிரமாணத்திற்கும் அடைவுறுங்கால் ஆராய்ந்த அருமறைச்
சிகரச்சத்துவுணர்வு வடிவமாய கேள்விக்கு அதனோடுத்தன்
மைபடைவுறுதலின். கூறிய இருவகையானும் பிறழ்கின்றதெ
ன்னற்க; சககாரியின் சிதைவானே உடன்பாட்டுப்பிறழ்ச்சி
குற்றமாகாதாம்; ஜாதி நினைவினருக்கு முற்பிறப்புக்கேள்வி
யானே பயன்பற்றுதலின் எதிர்மறைப் பிறழ்ச்சியின்றாம்;
அன்றாயினும் பிறழ்ச்சியானே ஹேதுத்தன்மை பாதிக்கப்
படின் மறையினும் அதன் சாதனத்தன்மை ஞானம் சம்ப
வியாமையின். குடத்தை நேரே காண்பதில் விழிக்கு வேறுத
த்துவக்குப்பொறிபோலும் பிரஹ்மத்தை நேரேகாண்பதின்
கண் கேள்விக்கயலாக மற்றோருபாயம் உளதாமென்னுங்கடா
நிகழ்ந்த வழி எதிர்மறைப் பிறழ்ச்சியும் ஏதுமாகாதாம். அங்
ஙனமாகவே அடைவுறுதலின் அபூர்வ விதியன்றாம். அத
னானே, “பன்முறைப்பலவாய்ப் பகர்ந்தமையானே” என்னு
மதிகரணபாடியத்திற்கண் கண்ட பலத்தனவாய கேள்வி முத
லியவை முறைப்படுத்தப்படுவனவாய்க் காட்சிமுடிவுடை
வனவாம், குத்துதல் முதலியவை தண்டுல வெளிப்பாட்டு
முடிவையுடையனவாதலாலேபோலும். பிரஹ்மக்காட்சிப்பய
ன்கண் கண்டபயனுடைமையின் கேள்விக்குத் தரிசபூரணமாசத்
தூற்ற குத்துதனியாய அடையில் முறைபடுமுபதேசமாம். அ
பூர்வ விதியாயினும் பொருந்தாதாம். சர்வ ஔடதங்களைக்குத்
துதலேபோலும். அக்கினி சயனத்தின்கண் “எல்லா ஔடத
ங்களையும் நிறைத்துக்குத்துகின்றனர் பின்னிது கோட்படு

கின்றது" என உபதேயமாய் உரற்சமக்காரப்பயனதாக விதிக்கப்பெற்ற சூத்துதற்குக் கண்கண்ட பயன் காணுமையானே முறைப்படுதலின்றென்பதே தந்திர இலக்கணத்தி விருப்பதாகும். ஆகையால் நியமவிதியேயிதுவாம். அஃதில்லாத வழி, வத்துவொன்றை விழியாற்காண்பவனுக்கு ஆண்டு தான் கவராத சூக்குமமாய வேறு விசேடத்தை வேறொருவன்கூறுவானுயின் அஃதையுணர்வான் அவ்விழியையே மீண்டும் ஒருமையோடுகூட வியாபாரத்தே யேவுவன்; இங்ஙனமே மனத்தானேயானெனக்கவரப்பட்ட ஜீவனிடத்தே அத்தியயனத்தாற் கவரப்பட்டமறைமுடிகளானே உபதேசிக்கப்பட்ட நிர்விசேட பிரஹ்மசைதன்ய வடிவத்தகைமையைக் கேட்டு அஃதையுணர்வான் ஆண்டு ஒருமையோடும் மனத்தையே தியானத்தின்கண்ணொருகால் புருடன் முயல்விப்பன் என மறைமுடிக் கேள்வியில் முயல்கை பக்கத்ததாகும் "அடைவுரு து மனதோடும்" என்னும் வேதம், "மனத்தானே தொடர்ந்து காணத்தக்கது காணப்படுகின்றதேயாகும் சூக்குமமதியான்" என்பதாகவும் கேட்கப்படுதலின் ஒருமையற்ற மனவிடயமாகுமெனச்சங்கை சம்பவித்தலின். அல்லது "போற்றப்பட்ட அயலாய ஈசனைக்கண்ட போழ்து அவ்வீசனது மகிமையையடைவன் சோகமற்றவனுமாவன்" என்றற்றொடக்கத்தனகேட்கப்படுதலின் பின்ன ஆன்மஞானத்தானே முக்தியெனமயல் சம்பவித்தலின் முக்தி சாதனஞானப்பொருட்டுப் பின்ன ஆன்ம விசார வடிவ வேறுநூற்கேள்வியின் கண்ணும் பக்கத்தே முயல்கைகூடும் என அத்வைத ஆன்மபரமாய வேதாந்த சிரவண நியமவிதியிஃதாகுக. ஈண்டான்மசப்தத்திற்கு "இவ்வியாவும் எவ்விவ்வான்மா" என்பதாதியவாய பிரகாணப்பெருமாராய்வானே அத்விதீய ஆன்மபரத்தன்மை

யுண்மையின்உண்மையாகச்சாதனமபலமைடவுற்றதன்மாட்டே
நியமவிதியாமென்பதுங் குலதருமமன்றாம். எதனுனே, மறை
முடிக்கேள்வி நியமத்தின் பயனுடைமைக்காக நியம அதிட்
டத்தாலாகிய தன்றடைக்களங்க நீக்கமாயிலாய் மறைமுடி
யொன்றுனே சாதிக்கத்தக்கதாயசத்தையின்துணிபு வடிவப்
பிரஹ்ம சாக்ஷாத்காரத்தை யுடன்பட வேண்டியிருத்தலின்.
ஆண்டுண்மையாகவே வேறு சாதனமின்மையின் நியம விதி
பொருந்தாதாம் எனச்சங்கிக்கலாமோ. மற்றுயாண்டு வேறு
சாதனமாகச் சம்பவிக்கத்தக்கதிற்குப்பக்கத்தே அடைவுரு
தலின் விதிப்பான் வேட்ட வேறு சாதனத்தின் பக்கத்ததாய
அடைவின்மையை நீக்குதற்கேலாதாமோ ஆண்டுநியம விதி
யாம்; அத்துணையானே அதன் பயனாகிய அடைவுறு அங்கிச
நன்னிறைவு நண்ணுதலின். அல்லது, குருமுக அதீனத்
தானேபோலும் நிபுணனுக்குத் தன் முயற்சியாத்திர சாத்தி
யமாயவேதாந்த விசாரத்தானும் சத்தா நிச்சய வடிவை பிரஹ்
ம அபரோக்ஷஞானம் சம்பவிக்கும்; மற்று, குருமுக அதீன
வேதாந்த வாக்கியக்கேள்வி நியம அதிட்டம் அவித்தையின்
நீக்கப்பொருட்டுக்களங்கங்கழித்தலானே கருவுமாமென அஃ
தின்மையினுனே தடையுற்றதாய அவித்தையை யகற்றுது
பரோக்ஷ ஞானம்போலும் நிற்பதாகும். ஞானம் உதயமா
யின் அஞ்ஞானம் நீக்கமின்மை கூடாதாமென்னற்க; தடை
யின்மையாண்டும் அமைவுபெறுதலின் பிரத்தியக்ஷ விசேட
தரிசனமிருந்த போதினும் உபாதியானே தடைப்படுதலின்
பிரதிபிம்பமயனீக்க மின்மைபோலும் அதனீக்கமின்மைகூட
லின் அதன்பொருட்டுக்கேள்வி நியமமாம். இங்ஙனமாகவே
எழுதிய பாடமுதலியவற்றானும் தனதத்தியாயக்கார்ச்சிய
டைவுறுங்கால் குருமுக அதீன அத்தியயன நியம விதிபோ

னும் தன்முயற்சி மாத்திர வாயிலாயமறைமுடியாராய்ச்சிக் கும் சத்தையின்றுணிபு வடிவப்பிரஹ்ம சாக்ஷாத்காரப்பொரு ட்டதாந்தன்மையினுனே பக்கத்தேயடைவுறுங்காற் குருமுக அதீன சிரவணநியம' விதியுளதாகுக "அதனை யுணர்வான் அ வன் குருவையே சென்றடைக" எனக் குருவினடைவு விதியி னுனே குருவின்றிய விசார நீக்கந்துணியப்பெறுதலின் பயன ற்றதாம் நியமவிதியெனச் சங்கிக்கத்தக்கதன்றும்; குருவின டைவு கேள்வியினங்கமாதலினுனே கேள்வி விதியில்லாக் கால் அவ்விதியேயிலதாகுமன்றே, அதனுனே அதற்குப்பய னின்மைபற்றுறுதாம். மாறாயினே அத்தியயன அங்கவடி வமாகிய உபகமனவிதியினுனேவரைந்தபாடமுதலியவற்றின் விலக்காமெனை அத்தியயன நியமமும் பயனற்றதாம். அல் லது அத்வைத ஆன்ம பரமாயபாஷைப் பிரபந்தக் கேள்வி க்குப் பக்கத்தே அடைவுண்மையினுனே வேதாந்தக் கேள்வி யில் நியமவிதியுளதாகுக. "மிலேச்சத்தகைமையையடைய ற்க" என்பதாதி நிடேதத்தானே அதனடைவின்மையாமெ ன்றறையாதொழிக; சாத்திரவிற்பத்தி மந்தத்தன்மையானே மறைமுடிக் கேள்விமுடியாத காரியம் எனப் புருடார்த்த நிடேதத்தைத் தாண்டியும் பாடைப்பிரபந்தத்தானே அத் வைதமறியும் வேட்கையனுக்கு ஆண்டுமுயல்கை சம்பவித் தலினுனே நியம விதிக்குப்பயனுடைமை கூடலின். அங்கீ கரிக்கவும் படுகின்றதன்றே கர்த்திருஅதிகரணத்தின்கண்:-- புருடார்த்தத்தில் பொய்ம்மொழி மொழிதல் நிடேதிக்கப் பட்டிருந்தபோதினும் தரிச பூரண மாசத்திடையில் யாதே னுமோரேதுவினுனே அங்கீகரித்த நிடேதத்தைத் தாண்டிய வனும் கெடுதலொன்றுமிலாது மகத்துணிவையவாயினனும் ஆகியோனுக்குப் பொய்ம் மொழியின்பால் முயல்கையுண்

டாம் எனமீண்டும் மகப்பொருட்டதாந்தன்மையானே தரிச பூரண மாசப்பிரகரணத்திற் "பொய்ம்மொழி புகலற்க" என் னும் நிடேதமாம் என மகப்பொருட்டதாந்தன்மையானே நிடேதத்திற்குப் பயனுடைமை விரித்துரைக்கப்பட்டது. அல்லது "மந்திரங்களானே மந்திரப்பொருணினைவு சாதிக்க த்தக்கது" என்னும்நியமமாம். மந்திரத்தை மூலமாகவுடைய கற்ப சூத்திரவடிவகிரகண வாக்கிய முதலியவற்றிற்கும் பக்கத்தேயடைவிருத்தலின்; அவ்வாறே மறைமுடிபை மூல மாகவுடைய இதிகாசபுராண பௌருஷேயப்பிரபந்தங்கட் கும் பக்கத்தே அடைவு சம்பவித்தலின் இது நியாயமாகுச; எல்லாவகையானும் நியமவிதியேயிஃதாம். "சஹகாரியந்தர விதி" யென்னும் அதிகரண பாடியத்தே அபூர்வத்தன்மைக் கூற்றே நியமவிதித்தன்மையின் கண்ணுமாம். பக்கத்ததாய அடைவின்மை இருத்தலின் அதன் கருத்தெனு அதன் கண் ணே பக்கத்தாலென, பக்கத்ததாய அடைவின்மையைக்கூற விழைந்து சூத்திர பதச்சேர்க்கையினுனே வெளிப்படையா க்கப்பட்டது என விவரணத்தை யனுசரித்தவர் விளம்பா நிற்பர்.

கேள்வியின்ருனுக்கு முதலிற் சத்தத்தான் ஐயப்பாடி ன்றிய பரோக்கஞானமே யுளதாம், சத்தத்திற்குப் பரோக்க ஞானத்தைப்பயக்கும் இயற்கைப்பான்மையுண்மையானேமு ற்றுப்பெற்ற ஆற்றலைத்தாண்டாமையின் என்பதாம். பின் கருதல் தெளிதல் பயின்ருனுக்குச் சிறந்த சககாரி சிவணியவ ழி அதனினின்றே அபரோக்க ஞானமுண்டாம். அதுவெ னும்பான்மையினங்கிசங்கவரும் ஞானத்தைப்பயக்கும் ஆற்ற லற்றதாயபொறிக்கும் அதனுற்றலுற்ற சமஸ்காரசகாயத்

தானே பிரத்தியபிஞ்ஞானத்தை யுளதாக்குந் தன்மையுறுவ தொப்பத்தானே அபரோக்க ஞானத்தைப்பயக்கும் ஆற்றலற்றதாய சத்தத்திற்கும் விதுரனு லினிதுபாவிக்கப்பட்ட காமினியின் சாக்ஷாத்காரத்தலத்தில் அதனுற்றற்றன்மையுண்மையானே முற்றுற்றபாவனைக்குழுவின் உதவியான் அபரோக்க ஞானத்தைப் பயக்குந்தன்மை கூடும். அதனுனும் சத்தத்திற்குத்தானே தன்விடயத்தில் பரோக்கஞானத்தைப்பயக்குந்தன்மையினதூஉம், பாவனைக்குழுவினுதவியுற்ற ஞானகரணத்தன்மையின் வரைவானே விதுரனந்தக்கரணம் வியப்ப அபரோக்க ஞானத்தைப்பயக்குந்தன்மையினதூஉம் அடைவுறுந்தன்மையுண்மையின்; முற்போல் நியம விதியென அதனேகதேசியரறைவர்.

வேதாந்தக்கேள்வியானே பிரஹ்ம சாக்ஷாத்காரமின்றும் மற்றே, மனத்தானேயாம். "மனத்தானே பின்றொடர்ந்து காணத்தக்கதாம்" என்னும் மறையிருத்தலினுனும், நூற்குரவனுபதேசசமதம முதலியவற்றுனே சமஸ்காரிக்கப்பட்ட (தூய்மையாக்கப்பட்ட) மனம் ஆன்ம தரிசனத்தின்கண்ணேகரணமாம் என்னும் ஸ்ரீகீதாபாடியவசனத்தானும் என்க. கேள்வியோ, ஐயப்பாடற்ற பரோக்க ஞானப்பொருட்டாமென அதன் பொருட்டதாந்தன்மையினுனே நியம விதியென்பர் சிலர். அபரோக்க ஞானப் பொருட்டதாந் தன்மையினுனே கேள்விநியம விதியாம். காணத்தக்கது என்னும் பலகீர்த்தனமாதலின். அதன் பொருட்டதாந்தன்மையும் அதற்குக்கரணவடிவ மனத்தின் சககாரித்தன்மையினுனேயாம்; சாத்த அபரோக்கஞான முடன்படாமையின் அதற்கவ்வடிவத்தானே அதன் பொருட்டதாந்தகைமை அடை-

வுமுறதென அபூர்வவிதி வழக்காமென்னற்க; செவிகொள்வன வாயஷட்ஜ முதலியவற்றே இனிதாரோபிக்கப்பட்ட பரஸ்பர அவிவேக நீக்கப்பொருட்டதாய காந்தருவ வேதக் கேள்வி யுதவி பெற்ற செவியால் பரஸ்பரங்கலப்பிலாத அதனுண் மையான அபரோக்கத்தன்மை காணப்பெறுதலின்; ஒளிரா நின்ற வத்துவின் கண்ணாரோபிக்கப்பட்ட அவிவேக மகற்றற் பொருட்டாய சாத்திர முளதாயவழி அதன் கேள்வி அதன் சாக்ஷாத்காரத்தைப்பயக்கும் பொறியுதவிப்பான்மையானே இனிதுபொருந்தும் என்பதாக இதற்கு முற்றுப் பெற்றதாந் தன்மையுண்மையின் என்பர் மற்றையர்.

மறைச்சிகர வாக்கியங்கட்கு அத்விதீயப்பிரஹ்மத்தின் கட்கருத்தின்நிண்ணய அநுகூலநியாய விசாரவடிவமாயகேள் விக்குப்பிரஹ்மத்தின் பரோக்ஷஞானமேனும் அபரோக்ஷஞா னமேனும் பலமாகாதாம்; அதற்குச்சத்தாதிப்பிரமாணபலத் தன்மையுண்மையின் கூறிய வடிவ விசாரத்தாணிண்ணயித்த தாற்பரியவிசிட்ட சத்தஞானமே கேள்வியாகுக; அதற்குப் பிரஹ்ம ஞானம் பலமாகப் பொருந்தும் என வியம்பற்க; ஞானத்தில் விதி கூடாமையினானும் கேள்வி விதிக்கு விசார ஞ்செயயற்பாலதாந்தகமையை விதிக்கும் அறியும் வேட்கை ச்சூத்திர மூலத்தன்மையையங்கீகரித்திருத்தலினானும், தள் ளல் கொள்ளல் வடிவமானசக்கிரியை ரூப ஆராய்ச்சிக்கே கேள்வித்தன்மை தக்கதாதலின் ஆராய்ச்சிக்கும் கருத்தின் நிண்ணய வாயிலாகவாதல், அதனானுளதாய, கருத்து மயக்க முதலிய புருட அபராதரூபத்தடையின், நீக்கவாயிலாகவா தல் பிரஹ்ம ஞானம் பலமாயாகுக வெனப்பகரற்க; கருத் துணர் விற்குச்சாத்த ஞானத்தின்கட் காரணத்தன்மையங்கீ

கரியாமையினுனும் காரியத்தின்கண்யாண்டும் தடையின்மைக்குக் காரணத்தன்மையை யங்கீகரியாமையானும் அவற்றிற்கு வாயிற்றன்மை கூடாமையின் என்க. பிரஹ்ம ஞானத்திற்கு ஆராய்ச்சி வடிவ வேறு காரணமுடைமையேலாயின் அதன் பிரமாண மாதற்குப்பிறிதாற்பெறப்படுதலினடைவாதலுமாம். ஆகையால் கருத்தின்நிண்ணய வாயிலாய்ப்புருட அபராத நீக்கப்பொருட்டதாந் தன்மையானே ஆராய்ச்சி ரூபசிரவணத்தில் நியமவிதியாம். பார்க்கத் தக்கதென் பதோ தரிசனத்தகுதித்தகைமையானே துதிமாத்திரம் கேள்விப்பயனைக் கிளத்துவதன்றும் எனச் சம்க்ஷேபசாரீரக அனுசாரிகள் சாற்றுவர். பிரஹ்ம ஞானப்பொருட்டு மறைமுடிக்கேள்வியில் முயன்றானுக்கு, சிகிச்சை புணர்ச்சியின் பொருட்டு சரகசுசுருதமுதலியவற்றின் கேள்வியில் முயன்றானுக்கே போலும் இடையிடையே வேறு வியாபாரத்தின் மாட்டும் முயற்சி முற்றல் கூடுமென அதை நீக்கும்பயனையுடையகேட்கத்தக்கதாமென்பது பரிசங்கியா விதியென்ப. பிரஹ்மத்தினணிநிலைத்தான்பேரமுதெய்துவானே'' என்னும் சாந்தோக்கியத்தில் அயல் வியாபார மின்மையை முக்தியுபாயமெனத்திரப்படுத்துதலின்; நணியென்பதை முன்புடைத்தாய நிலைத்தலுக்கு முடிபைமொழியுந் தன்மையுண்மையானே, பிரஹ்மத்தினணிநிலைத்தன்மொழியான் மொழியப்பெற்றதாய பிரஹ்மத்தில் முடிபுறுதற்கு அனன்னிய வியாபார ரூபத்தன்மையுண்மையின், ஆன்மாவாய "அஃதொன்றையேயறிமின் அயன் மொழியாவையும் விடுமின்" என அதர்வணத்தின்கண்கண்டத்தானே வேறு வியாபாரத்தை விலக்கியுண்மையானும் "துயிலுந்துணையுயிர்விடுந்துணை, காலத்தைவேதாந்த சிந்தையானே கழிக்குக"என்பதாதிமிருதியினு

னும்காண்க. பிரஹ்மஞானத்திற்குபயோகமற்றவேறுவியாபா ரத்திற்கு ஒரே சாத்தியத்தின்கண் கேள்வியோடும் ஒருங்கு கூட்டியடைவின்மையின் அதனீக்கப்பொட்டுப் பரிசங்கியா விதி பொருந்தாதாமெனப் புகலற்க; "சககாரியந்தர விதி" என்பதாதிசூத்திரத்தினும், "எதனுனே பக்கத்திற் பேதகரி சனப் பெருமையினுற் பிராப்த மாகாதோ, அதனுனியம விதி" யென்னும் அதன் பாடியத்தினும், கேள்வி முயன்றவை னும், சாத்தவுணர்வு மாத்திரையானே முடிக்கற்பாலது முடி-ந்ததாந்தகைமைய யெண்ணியவனும், ஆகியோனுக்கும் அவித்தையகற்றுவதாகிய சாக்ஷாத்கார உபயோகியாம் நிதித் தியாசனத்தின் மாட்டுமுயற்சி முற்றுமெனை அசாதனபக்க அடைவு மாத்திரையானே நிதித்தியாசனத்தின்கண் நியம விதியையுடன் படுதலினுன் அங்கீகிகொண்டே அசாதனத் தை யொருங்கு கூட்டியடையுறுவதினும் அதனீக்கப்படுவு டைய பரிசங்கியாவிதி சம்பவித்தலின் என்பதாம். "நியமம தேனும் பரிசங்கையேனும் நெறிவியர்த்தமாய் நிகழுகவீ ண்டு, எதனுலனுன்மவிவை காணுமே எழிற்பரமான் மனை யினிதுணர்வேமோ" என்னும் வார்த்திகவசன அனுசாரிகள் சிலர் அறைகின்றனர்.

"ஆன்மாக்கேட்கத்தக்கது" என மனனுகிடமானும் ஆன் ம விடயத்தன்மையானே கட்டுப்பட்டதாய்க்கேள்வி, ஆகம ஆசிரியருபதேசத்தாலுளதாய ஆன்மவிடயஞ்செய்யும் ஞா னமேயாம் தாற்பரிய விசார ரூபமன்றும்.என ஆண்டியாதொ ரு கோதுமின்றும். அதனுனேசமன்வயசூத்திரத்தில் ஆன்ம ஞானவிதி நிராகரணத்தின் பின்னுயபாடியம் "யாதின் பொரு ட்டனவாமாயின் ஆன்மாஉரனுகமைத்திரேயி! காணத்தக்கது

கேட்கத்தக்கது என்பாதியவிதி நிழல்களாய வசனங்கள் இயற்கையாகவே இயையும் முயற்சி விடயத்திரும்புகையைச் செய்தற் பொருட்டனவாம் என இயம்புவேம்'' என்பதாதியாம். வேதாந்த தாற்பரியவிசாரம் கேள்வியாமேலாயின் அதற்குத் தாற்பரிய நிண்ணயவாயிலாகவேதாந்த தாற்பரியமயல் ஐயவடிவத்தடை நீக்கமே பயனுமன்றி வேறுதடையிலக்கேனும்பிரஹ்மவுணர்வேனும் ஆகாதாம். அப்பயனுடைமையும் அதற்கு உலகத்தானே அடைவுறும் வேறுசாதனத்தையும்சிறிது விகற்பித்தேனும் ஒருங்குகூட்டியேனும் அடைவுறுதாமென ஆண்டு மூவிதிக்கும் அவகாசமின்றாகும். விசாரவிதியின்றேனும் விஞ்ஞானப்பொருட்டாக விதிக்கப்பட்டதாய ஆசிரியரடைவு, திருஷ்ட வாயிலாய்ச்சம்பவிக்குங்கால் அதிருஷ்டகற்பனை கூடாமையின் குருமுக அதீன வேதாந்த விசார வாயிலாகவே விஞ்ஞானப்பொருட்டு முடிவு பேறடைகின்றது என்பதாம். அதனானே தன் முயல்வானே சாதிக்கப்பெற்ற விசார விலக்காம். அத்தியயன விதியிலதாயினோ விதிக்கப்பெறுவதாய அடைவு அக்கா அடைவின்பொருட்டதாந்தன்மையானே விதிக்கப்பெறுததன்மையதாய் அதன் பொருட்டுக் குருமுகத்தா லுச்சரிக்கப்பட்ட பின்னுச்சரிக்கப்படும் அத்தியயனத்தை வாயிலாயாக்காதாம் என வரைந்த பாடமுதலியவற்றின் விலக்கந்துணியப்பெறுமையின் அத்தியயனத்திற்பயனுடையதாம் நியமவிதியென்றறிக. தாற்பரியாதிமயனீக்கப்பொருட்டு வேதாந்த விசாரம்விழைந்தார்க்கு ஒருகால் துவைத சாத்திரத்தின் கண்ணும் முயல் வுண்டாம் ஆண்டும் அதற்கொப்ப முடிந்த சேர்க்கையினானே வேதாந்த விசார இருப்புண்மையின் என அத்வைத ஆன்மபரமாய வேதாந்த விசார நியமவிதி பயனுடைத்தாம் எனப்பகரற்க;

தானாகவே தாற்பரியமயலேது வாதலின் அதற்கு அதை நீக்குந்தன்மையின்மையின் வேறுசாதனப் பிராப்தியின்மையின். அதை நீக்குந்தன்மைமயலானே ஆண்டும் ஒருவனுக்கு முயல்வுண்டாம் என்னும் இத்துணையானே கேட்கத்தக்கது என நியமவிதியினங்கீகாரமாம் என்பதுமின்றாம். பரசிவன்றிருவருளாற் பலிப்பதாய அத்வைத விசுவாசம் அற்றவனுக்குக்கேட்கத்தக்கது என்னும் வாக்கியத்திலும் மற்றையர் பற்றும் ஒற்றுமையானே துவிதீயமுற்ற ஆன்ம விசாரவிதிபரப்பான்மைமயல் சம்பவித்தலானேமயற்புகுத்திய மற்றிடத்தின் முயற்சியை விதிமுகத்தானும் மாற்றமுடியாமையின். வேறு வியாபார விலக்கற்பொருட்டாம்பரிசங்கையென விளம்பற்க; சந்யாசியரல்லாதவர்க்கு வேறு வியாபார விலக்கங்கூடாமையின் சந்யாசியர்க்கு அதன் விலக்கமோ, பிரஹ்மத்தின்கணிநிலை பெறுதலோடு சந்யாசத்தை விதிப்பதாய "பிரஹ்மத்தினணிநிலைத்தோன்பேரமுதெய்துவானே" என்னும்வேறு மறையானே துணியப்பெறுதலின் சந்யாசத்தை விதிப்பதாய வேறுமறையைக்குறித்துக் கேட்கத்தக்கது என்னும் வாக்கியத்தானே அவர்க்கு வேறு வியாபார விலக்க வுபதேசம் வீணாதலின். விசார விதியசம்பவமாயினும் விசார விடயமாயவேதாந்தத்தில் நியம விதி சம்பவிக்கலாம், பாடைப்பிரபந்த முதலியவற்றின் நீக்க மிருத்தலின் எனச்சங்கியாதொழிக; சந்நிதானத்தானே வேதாந்த நியமம் கிடைக்கப்பெற்றிருத்தலின் விதி விடயத்தன்மை கூடாதாம், "தன் வேதமோதத்தக்கதாம்" எனப்பொருளறியும் பொருட்டாய நியம விதி வலுமையானே அத்தியயனத்தாற் கவரப்பெற்ற வேதமுண்டாக்கிய வேதப்பொருளுணர்ச்சி பல முடிவு பேறுடையதாம் வேறுகாரணை முண்டாக்கியதன்றாம் என இப்பொருள்

கிடைத்தலினுனே வேதார்த்தமாகிய பிரஹ்மம் மோக்ஷத்தின் பொருட்டு அறியக்கிடந்தவழி பாடைப்பிரபந்தாதிகளின் அடைவின்மையானும் என்க. "சககாரியந்தரவிதி" யென்னு மதிகரணத்தின்கண் பாலிய பாண்டித்தியமௌன மென்பவற் ருலியம்பப்பட்ட கேள்வி கருதல் சிந்தித்தலின்பால் விதியங்கீ கரிக்கப்பட்டதாம் என அறையற்க; விசாரத்தில் விசாரிக்கத் தக்கதின் ருற்பரிய நிண்ணய ஹேதுத்தன்மைக்கும், வத்து சித்தியினனுகூலமாயயுத்தியனுசந்தானவடிவமனனத்தின் மாட்டும் அதன்ருேற்றப்பயில்வு வடிவ நிதித்தியாசனத்தின் மாட்டும் வத்துவுணர்வின்றடைபின்மையேதுத்தன்மைக்கும், உலகசித்தத்தன்மையுண்மையானே அவற்றின்கண்ணே விதி யவாவப் பெருமையின் விதி நிழலர்த்தவாதத்திற்கேபோ லும்புகழ்ச்சி வாயிலாய் முயற்சியதிசயத்தைச் செய்விக்குந்த ன்மைமாத்திரையானே ஆண்டு விதி விவகாரங்கூடலின், இவ் வாருகவே கேள்வி விதியின்மையின் கருமகாண்ட விசாரங்க் டுப்ப ப்பிரஹ்மகாண்ட விசாரமும் அத்தியயன விதிமூலமென ஆசார்ய வாசஸ்பதிபக்கத்தையனுசரித்தவர் வழங்குவர்.

## 3-வது பிரஹ்ம இலக்கண விசாரம்.

விசாரிக்கத்தக்கதாய பிரஹ்மத்திற்கும் உலகுதிதிலய காரணத்தன்மைஇலக்கணம்இயம்பப்பட்டது "எதனினின்றுந் தானிவையாவையுமெழும்பும்" என்பதாதி மறையானே இய ம்பப்பட்டதாம். உலகுதிதிலயங்களுள்ளும் ஒவ்வொருகார ணத்தன்மையும் அயலிற் புகுதாமையின் இலக்கண மாதற்குத் தகுதியதேயாகும் எனின்? உண்மையே,இவையொன்றையொ ன்றவாவாதனவாய் மூன்றிலக்கணங்களேயாகும் அதனுனே, "அயில்பவன் சராசரங்கவர்தலின்" என்பதாதியதிகரணங்களி

ல் சர்வசம்ஹாரத்தன்மை முதலியவைதனித்தனி பிரஹ்மலி
ங்கமாகஉபந்யசிக்கப்பட்டது என்பர்கௌமுதீகாரர்.

மற்றையரோ, பிறப்பின்காரணத்தன்மையும் இருப்பின்
காரணத்தன்மையும் நிமித்தப்பொதுவதாதலின் உபாதானத்
தன்மையை யுணர்த்துவான் உலகிற்குப் பிரஹ்மத்தின்கண்
ணிலயம் காண்பிக்கப்பட்டது. பிரஹ்மம் உலகுபாதானமா
யுளதாகுக, அதன் பிறப்பின்கண், குடப்பிறப்பிற்குலாலன்
போலும், அதன் இருப்பின்கண், இராஜ்யபாலனத்தின்கண்
ணரசனைப்போலும், உபாதானத்தினும் அயலாகவே நிமித்தம்
அமையும் என விறுதலை விலக்கற்காக அதற்கே, உலகுதய
ஜீவன நியாமகத்தன்மையுரைக்கப்பட்டது. அன்னணமாகவே
இவ்வொரேயிலக்கணம் அபின்னநிமித்த உபாதானமாக அத்
விதீயப்பிரஹ்மத்தைக் குறிப்பிடுகின்றது என்பர். அத்வி
தீயகூடத்தசைதன்யரூபமாகிய பிரஹ்மத்திற்குபாதானத்த
ன்மையும் பரமாணுக்கட்கே போலும் தொடங்குந்தன்மை
வடிவமன்றும், பிரகிருதிக்கேபோலும் பரிணமித்தன்மை
வடிவமுமன்றும்; மற்றே, அவித்தையினுடனே விண் முதலி
யவிசுவவடிவமாகவிவர்த்தமானபான்மையிலக்கணமாம். வஸ்
துக்கட்கு அதன் சமசத்தையுற்ற மாற்றுப் பெற்றி பரிணாமம்,
அதன் அசமசத்தையுறன் விவர்த்தமெனவேனும்; சலக்கணமா
விலக்கணமாற்றுப்பெற்றிபரிணாமம், அதன் விலக்கணம்விவ
ர்த்தமெனவேனும்; காரண அபின்னமாய காரியம் பரிணாமம்,
அதனைப்பேதமின்றியே அதனின் அயலாகத் தோன்றுவதா
யகாரியம் விவர்த்தம் எனவேனும் விவர்த்தபரிணாமங்களின்
விவேகமாம்.

## 4-வது பிரஹ்மத்தின் காரணத்தன்மை விசாரம்.

இனி, தூயபிரஹ்மம் உபாதானமென வுடன்பாடா? ஈசுரவடிவமா? ஜீவவடிவமா? இதன்கண்ணே சம்க்ஷேபசாரீரக அநுசாரிகள்சிலர் கூறுவதாவது:—தூயதே யுபாதானமாம்; உபாதானத்தன்மையை ஞேயப்பிரஹ்ம இலக்கணம் என ஜன்மாதி சூத்திர அதன் பாடியங்கள் கூறுதலின். இன்னணமாகவே, "ஆன்மாவினின்றும் ஆகாசமுண்டாயது" என்பதாதி காரண வாக்கியங்களில் சபலத்தைச்சாற்றுவனவாய ஆன்மாதி சுப்தங்கட்குத்தூயதின் பாலிலக்கணையே யாம்.

விவரண அநுசாரிகளோ, "யாதுயாவற்றையும் விசேடமாயும் சாமானியமாயு மறிகின்றதோ எதனது ஞானமயம் தவமோ, அதனினின்றும் இவ்விரணிய கருப்பரும் நாமரூபங்களும் அன்னமும் உண்டாம்" என்னும் மறையானே சர்வஞ்ஞத்தன்மை முதலிய விசிஷ்டமாய மாயாசபல ஈசுர ரூபமாய பிரஹ்மமேயுபாதானம். அதனானே பாடியத்தில் "உள்ளத்தன்மோபதேசத்தான்" "யாண்டும் பிரசித்த வுபதேசத்தான்" என்பதாதியதிகரணங்களில் "அதுவே இருக்கு, அது சாமம், அது உக்தம், அது யஜுர், அது, பிரஹ்மம், சர்வ கருமம், சர்வ காமம், சர்வ கந்தம், சர்வ ரசம்." என்பதாதி சுருதிகளாற் கூறப்பட்ட சர்வ உபாதானத்தன்மையினானேயவதாய சர்வான்மகத்தன்மை ஜீவனை விலக்கும் ஈசுரக் குறியாமென இனிது வருணிக்கப்பட்டது, ஜீவ ஈசுர்களிற்றொடர்ந்து நின்ற சைதன் யமாத்திரத்திற்குச்சர்வ உபாதானத்தன்மையாயினோ அது ஜீவனை விலக்கும் ஈசுரக்குறியாகாதாம். சம்க்ஷேபசாரீரகத்தில் சுபல உபாதானத்தன்மை நிராகரணமும், மாயா

விசிஷ்ட வுபாதானத்தன்மை நிராகரணக் கருத்ததாம்.

சாரஈசுரரூபசைதன்ய உபாதானத்தன்மை நிராகரணபர
மன்ரும், ஆண்டே முதலத்தியாய முடிபில் உலகுபாதானத்
தன்மையைத் தற்பதார்த்த விருத்தித்தன்மையானே கூறியி
ருத்தலின். இங்ஙனமாகவே ஈசுரரிடத்திருப்பதாயினும் கார
ணத்தன்மை, அதிற்றொடர்ந்து நிற்கும் அகண்டசைதன்ய
த்தைச் சாகைநுனியில் மதியுளதுஎன்பதொப்பத்தடத்தமாக
க்குறிப்பிடுவான் கூடியதாகும், ஆகவேயதற்கு ஞேயப்பிர
ஷ்ம இலக்கணத்தன்மையின் கூற்றுமென எண்ணுகின்றனர்.

விண் முதலிய பிரபஞ்சம் ஈசுரரைப்பற்றிய மாயை
யின் பரிணாமமென ஆண்டீசுரர் உபாதானமாவர். அந்தக்
கரணாதிகளோ ஈசுரரைப்பற்றிய மாயையின் பரிணாமமாகிய
மகாபூத உப சிருஷ்டமான ஜீவ அவித்தை செய்த பூத சூக்கு
மகாரியமென ஆண்டு இரண்டிற்குமுபாதானத்தன்மையாம்.
அதனானே "இன்னணமே இஞ்ஞானியின் புருடனையிடமாய்
ப்பெற்றனவாகிய இவ்வீரெண்கலைகள் புருடனையடைந்தே
அத்தமடையும்" என்னும் மறையின்கண்ணே கலைச்சப்தவாச்
சியங்களாகிய பிராண மனமுதலியவற்றிற்கு அறிஞனதுவி
தேககைவல்லிய சமயத்தில் வித்தையா னீக்கப்பெறுவதாய
அவித்தையின் காரிய அங்கிசக்கருத்தானே வித்தையானே
வீழ்த்தப்படல் காட்டப்பட்டது. "சென்றனகலைகளீரே
ழொன்றுடன் சிவணியன்றே" என்னும் மறுமறையின்மாட்டு
அதனலகலாதமாயையின் காரியமகாபூதபரிணாமரூபப்பற்று
க்கோட்டினங்கிசக்கருத்தானே அவற்றிற்குத் தத்தம்பகுதிக
ளில் இலயம் காட்டப்பட்டது என்பதாக மாயையவித்தைக
ளின் அபேதவாதிகள்.

எங்ஙனம், விண்முதலிய விசுவம் ஈசுரரைப்பற்றியமாயையின் பரிணாமமென ஆண்டு ஈசுரர் உபாதானமாவரோ அங்ஙனமே அந்தக்கரணாதிகள் ஜீவனைப்பற்றிய அவித்தையின் மாத்திர பரிணாமமென ஆண்டு ஜீவனே உபாதானன். அந்தக்கரணாதிகளில் மாயையின் காரிய மகாபூதங்களினதூஉம் உட்புகுதலில்லாக்கால் உதாகரித்த மறையிரண்டன் விவத்தைதமருவாதாமெனமயங்கற்க; கலை கட்கு வித்தையில் வீழ்ச்சி விளம்பும் சுருதி தத்துவவித்தின்றிருஷ்டிவிடயமாம். "சென்றன கலைகள்" என்னும் சுருதியோ தத்துவவித்திறந்தபோது அண்மையிலிருப்பவர் உடைந்த குடமொக்க அவனது ஆகமுதலியவற்றிற்கும் பூமியாதியின்கண்ணே இலயத்தையெண்ணு நிற்பர் என்பதாகத்தடத்த புருடவிளக்க விடயமாய் விவத்தை, கலைப்பிரளய அதிகரண பாடியத்தில் வெளிப்படையாயிருத்தலின் என்பர்கள் மாயையவித்தையபேதவாதிகளுள் ஏகதேசிகள்.

அவ்வபேதவாதிகளுள்ளும் சிலர் விண் முதலிய வுலகிற்குஈசுரர் உபாதானர், என்றாலும் அந்தக்கரணமுதலியவை ஜீவதாதாத்மியமாகப்புலப்படுதலின் ஜீவனேயுபாதானன். அதனானே யத்தியாச பாடியத்தின்கண்ணே அந்தக்கரணாதிகட்கு ஜீவனிடத்திலேயுபாதானங்காட்டப்பட்டது. விவரணத்தின்கண்ணும் பிரதிகரும விவத்தையில் பிரஹ்மசைதன்யத்திற்கு உபாதானத்தன்மையானே குடமுதலியவற்றின் சங்கித்தன்மையும், ஜீவசைதன்யத்திற்கு அவற்றின் அசங்கித்தன்மையிருப்பினும் அந்தக்கரணாதி சங்கித்தன்மையும் வருணிக்கப்பட்டதென்றறைவர்.

“இதனினின்று மெழுவனவாகும் எழிலுயிர்ப்புள்ளமெ
லாப்பொறிகளுமே, கங்காலொளி நீர்சண்டிடுமுலகைத் தங்க
வைக்கும் பிருதிவியென்ப” என்பதாதி சுருதியானே விவகா
ரிகப் பிரபஞ்ச முழுமைக்கும் பிரஹ்மமே யுபாதானமாம்;
ஜீவனே பிராதிபாசிகமாகிய கனாவுலகிற்காவன். “முற்றினும
டைவாம் நிரவயத்தன்மைச் சத்தகோபமேனுமாம்” என்னு
மதிகரணத்தின்கண்ணே பிரஹ்மத்திற்குலக உபாதானத்தன்
மையில் அதற்குமுற்றினு உலகாகாரமாகப்பரிணாமமேல் விகா
ரத்திற்கு வேருகப்பிரஹ்ம பாவமேனும், ஏகதேசமாகப்பரி
ணாமமேல் நிரவயவத்தன்மை மறை முரணேனும் அடை
றும் எனப்பூர்வ பக்கம் பொருந்தியவழி “தன்னிடத்துமிங்
ஙனமே விசித்திரங்களுமாமே” என்னுஞ் சூத்திரத்தால் விவர்
த்த வாதக்கருத்தைக்கொண்டு கனாக்காண்போனாகிய ஜீவான்
மாவின்பால் வடிவத்திற்குக் கெடுதலிலதாகவே அநேகாகாரக
னாப்பிரபஞ்சசிருட்டிபோலும் பிரஹ்மத்தின்பால் விண் முத
லியவற்றின் சிருட்டிகூடும் எனச் சித்தாந்தப்படுத்தியிருத்த
லின் என்பர் மற்றையர்.

ஜீவனே, கனாக்காண்போன் போலத்தன்பால் ஈசாத்தன்
மைமுதலிய சர்வகற்பகத்தன்மையானே சர்வகாரணன் என்
பதாகவும் சிலர் கூறுவர்.

## 5-வது மாயையின் காரணத்தன்மை விசாரம்.

இனி “மாயையைப் பகுதி யென்றே மதிக்க.” என்னும்
மறையினானும், மாயையின் ஜாட்டியத்திற்குக் குடமுதலியவ
ற்றே தொடர்ச்சி காணப்படுதலினானும் மாயை உலகுபாதா
னமெனப்புலப்படுகின்றதன்றே, யாங்ஙனம் பிரஹ்ம உபாதான

ம். ஈண்டுப்பதார்த்தத்வநிர்ணயக்காரர் கூறுகின்றதாவது:-பிரஹ்மம் மாயையென்னுமிரண்டும் உபாதானமாமென இரண்டு சுருதிகளும் பொருந்துகின்றதன்றிச்சத்தை ஜாட்டிய ரூப் உபயத்தன்மைத்தொடர்ச்சியின் பொருத்தமுமாம். ஆண்டுப்பிரஹ்மம் விவர்த்தமாக உபாதானமாம் அவித்தை பரிணாமமாகவாம். விவர்த்த அதிஷ்டானத்தின் கண்ணே பாரிபாஷிகம் உபாதானத்தன்மையாகும் எனப்பகரற்க; தன் வடிவில் காரியத்தைப் பயக்குமேதுத்தகைமையாய உபாதான இலக்கணத்திற்கு ஆண்டும் துல்லியமாதலின் என்பதாம்.

சிலர், கூறிய பிரக்கிரியையே பற்றிவிவர்த்த பரிணாம உபாதானமென்னுமிரண்டிற்கும் பொதுவாகிய வேறிலக்கணம் விளம்புவர்:—தன்னினும் பின்னமிலாத காரியத்தைப் பயக்குந்தகைமை உபாதானத்தகைமையாம். விவர்த்தமான சத்துருவைப் பிரஹ்மத்தோடும் பரிணாமியாயஜட அஞ்ஞானத்தோடும் உலகிற்கபேதம் உளதேயாகும். குடமிருக்கின்றது, குடம்ஜடம் எனச்சமானாதி கரணத்தகைமை யனுபவமிருத்தலின். "அதனினும் அனன்னியத்துவமாம் ஆரம்பண சப்தாதிகளானே" என்னுஞ் சூத்திரத்தில். அனன்னியத்தகைமை வேறுபிலாமையாம். "அனன்னியத்தன்மையென அபேதம் நனிநவிலுவேமல்லேம்; மற்றோ வேற்றுமையைமாற்றுவேம்" என்னும் பாடியபாமதி நிபந்தனங்களால் உலகிற்குப்பிரஹ்ம அபேத நிடேதத்தானே அபேதத்தையங்கீகரிக்கில் அபசித்தாந்தமாமென அறையற்க; அவற்றிற்குப் பிரஹ்மரூபதர்மிசமான சத்தைதனையுடைய அபேத நிடேதத்திற் கருத்திருத்தலின்இப்பிவெள்ளிகட்கேய்ப்பப்பிராதீதிகஅபேத அங்கீகாரமிருப்பினும் மூரணின்மையின் எனவுறிக.

சம்க்ஷேபசாரீரக நூலுடையாரோ, பிரஹ்மமேயுபாதா னம், கூடத்தனுக்குத்தானே காரணத்தன்மை கூடாமையின் மாயை வாயிலாய்க்காரணமாம். அகாரணமாயினும் வாயில் காரியத்தின்கண்ணே செல்கின்றது. மண்ணேமானும் அதன் கண்ணே நண்ணும் பசையுடைமை முதலியவையும் குடத் திற் செல்லுதல் காண வருதலின் என்பர்.

வாசஸ்பதிமிசிரரோ:— ஜீவனைப்பற்றியிருக்கும் மாயை விடயீகரித்த பிரஹ்மம் தானுகவே ஜாட்டியத்திற்குப்பற்றுக் கோடாய உலகாகாரமாக விவர்த்தமாயுபாதானமென மாயை சககாரிமாத்திரமாம், காரியத்திற்றொடர்ந்தவாயிற் காரண மன்றுமென்பர்.

சித்தாந்த முக்தாவலிநூலுடையாரோ:—மாயா சக்தி யேயுபாதானமாம், பிரஹ்மமல்லவாம்;"அவ்விட்பிரஹ்மம் அபூ ர்வம் அனபரம் ஆம் அதற்குக்காரியமும் காரணமுமின்றும்" என்பதாதி சுருதியினுன். உலகுபாதானம் ஆகிய மாயை யின் அதிஷ்டானத் தன்மையானே உபசாரத்தாலுபாதான மாம். அத்தகையஉபாதானத்தன்மையே இலக்கணங்களாலிய ம்ப இச்சிக்கப்பட்டதாகுமென்பர்.

6-வது ஜீவாசுவரவடிவ நிருடணம்.

இனி ஈசுரர் யாவர்? ஜீவன்றுனி யாவன்? ஈண்டுப்பிரக டார்த்த விவரணத்திற்கூறப்பட்டது:—அநாதி யநிர்வசனீய மாய பூதப்பிரகிருதியென்னும் சின்மாத்திர சம்பந்தி மாயை யாம். அதன்கண்ணே சிற்பிரதிபிம்பம் ஈசுரராம். அதனதே யாய பரிச்சின்ன அனந்தப்பிரதேசங்களிலிருக்கும், ஆவரண

விக்ஷேப சக்தியுடையனவாய அவித்தைகளென்பவற்றிற் சிற்பிரதிபிம்பம் ஜீவனாகும் என்பதாம்.

தத்துவ விவேகத்திலோ:—முக்குணவடிவமாகிய மூலப்பகிருதிக்கு "ஜீவஈசுரர்களைப்போலியாய்ச்செய்கின்றதுமாயையாகவும் அவித்தையாகவும் தானேயாகின்றது" என்னும்சுருதி துணிந்த இருவடிவங்கள் வேறாயிருப்பனவாம். இரஜதமங்களான் மறைபடாத சுத்தசத்துவப் பிரதான மாயை, அவற்றான் மறைபட்டமலினசத்துவ அவித்தை. என மாயையவித்தைகளின் வேறுபாட்டையினிது கற்பித்து மாயையாற் பிரதிபிம்பர்ஈசுரர், அவித்தையாற் பிரதிபிம்பன் ஜீவன் என இயம்பப்பட்டது.

ஒரே மூலப்பகுதி விக்ஷேபப் பிரதானத்தானே மாயை என்னும் ஈசுர உபாதியாம். ஆவரணப்பிரதானத்தானே அவித்தையஞ்ஞானமென்னும் ஜீவ உபாதியாம். அதனானேயதற்கு ஜீவ ஈசுர சாதாரண சின்மாத்திர சம்பந்தித்தன்மையிருப்பினும் ஜீவனுக்கே அஞ்ஞனாயிருக்கின்றேன் என்னும் அஞ்ஞான சம்பந்த அனுபவமாம் ஈசுரருக்கின்றாம் என்பதாக ஜீவஈசுரர் வேற்றுமை ஓரிடத்துரையாடப்பட்டுளது.

சம்க்ஷேபசாரீரகத்தின்கண்ணோ:— "காரியவுபாதியிச் சீவனாவன், காரணோபாதி கடவுளாமே" என்னும் மறையைப் பின்பற்றிஅவித்தையின்கண்ணேசிற்பிரதிபிம்பம்ஈசுரராவர் அந்தக்கரணத்தில் சிற்பிரதிபிம்பம்ஜீவனாவன். அந்தக்கரண ரூபமாகிய திரவியத்தானே குடத்தானாகாயத்திற்கே போலும் சைதன்யத்தின் அவச்சேதஞ்சம்பவித்தலின் அதனவச்சின்னமாகிய சைதன்யமே ஜீவனாகுகவென அறையற்க. ஈண்டும்

ஆண்டும் ஜீவபாவமாக அவச்சேத்திய சைதன்யப்பிரதேசம் பேதமாயினோ இயற்றியதிற்கின்றியியற்றுததற்கெய்தும் என்னும் வழக்காம். பிரதிபிம்பமோ உபாதிக்கு வரவுபோக்குறுவதாயினும் அவச்சேத்தியம்போல வேற்றுமைப்படாதாம் எனப்பிரதிபிம்பபக்கத்தில் இத்தோடமின்றாமென இயம்பப்பட்டது. இன்னணமியம்பப்பெற்றனவாய ஜீவாசுரர்களின் பிரதிபிம்ப விசேடத்தன்மைப்பக்கங்களில் யாதுபிம்பத்தானத்துற்ற பிரஹ்மமோ அது முக்தராலடையப்பெற்றதாகிய தூயசைதன்யமாம்.

சித்திரதீபத்தில், "ஜீவனீசுர விசுத்தமாய சித்து" என மூவிதமாகிய பிரக்கிரியை விடுத்து, கட அவச்சின்ன ஆகாசம் கட ஆகாசம், அதைப்பற்றி நின்ற நீரிற் பிரதிபிம்பித்த எழிலியுடுவோடு கூடிய ஜலாகாசம் அநவச்சின்னமகாகாசம், மகாகாசநாப்பண்ணிகழும் மேக மண்டலத்தில் மழைவடிவ காரியங்கொண்டு கருதப்படும் நீர்வடிவ அதனவயவங்களாகிய துளிகளுள் பிரதிபிம்பித்த மேகாகாசம் எனவுண்மையாயேகமாகிய ஆகாயமும் நால்வகைப்படும். அங்ஙனமே, தூல சூக்கும தேகமிரண்டன் அதிஷ்டானத்தன்மையானே நிகழா நின்ற அதனவச்சின்ன சைதன்யம் கூடங்கடுப்ப நிர்விகாரத்தன்மையானேயிருப்பதாய்க்கூடத்தமாம், ஆண்டுக்கற்பிதஅந்தக்கரணத்தில் பிரதிபிம்பித்த சைதன்யம் சமுசார சம்பந்தியாய ஜீவனாகும், அநவச்சின்னமாகிய சைதன்யம் பிரஹ்மமாம், அதனைப்பற்றிய மாயையாகிய தமத்தில் இராநின்ற சர்வப்பிராணிகளின் மதிவாதனைகளில் பிரதிபிம்பிதமாகிய சைதன்யம் ஈசுரராம் எனச்சைதன்யத்திற்கு நால்வகைப்பான்மையை நனி கற்பித்து அந்தக்கரணமதி வாதனையோடு

கூடிய அஞ்ஞான உபாதி வேற்றுமையானே ஜீவ ஈசுர விபாகம் காட்டப்பட்டது. அயலொன்றுமிதுவுமதன் கண்ணறையப்பட்ட விசேடமாம்:—நால்வகைத்தாய சைதன்யங்களுள் ஜீவன்யானெனவொளிர்பவன், அவித்தையினுன் மறைபட்ட அசங்க ஆனந்த வடிவவிசேட அங்கிசத்தோடு கூடிய கூடத்தத்தின் கண்ணிப்பியில் வெள்ளியே போலும் அத்தியஸ்தனுவன். அதனுனே இதந்தை இரஜதத்தைகட்கேயென்ன அதிஷ்டான சாமானிய அங்கிச அத்தியசித்த விசேடாங்கிச ரூபங்களாகிய தானுந்தன்மை யானுந்தன்மைகட்கு, "யான்முன் செய்தேன்" என்பதாதியில் ஒருமித்தொளிர்தலுண்மையின். யானுந்தன்மையோ அத்தியசித்த விசேடாங்கிச ரூபமாம்; மற்றையனுக்கு மற்றையன் மாட்டியானென்னும் விவகாரமின்மையின்விலக்கப்பட்டதாந்தன்மையுண்மையின். வேறுந்தன்மையின் எதிர்மறையாகிய தானுந்தன்மையோ அதிஷ்டான சாமானிய அங்கிச ரூபமாம்; தேவதத்தன்முன் சென்றனன் என மற்றையன் மாட்டும் விவரிக்கப்படலானே தொடர்ந்து நிற்றலின். இவ்வாறு பாஸ்பர அத்தியாசத்தானே இலௌகிகர்கட்குக்கூடத்த ஜீவர்களின் அவிவேகமாம். அவற்றின் விவேகமோ பிருகதாரண்யகத்தில்:—"பிரஞ்ஞானகனமே, இவ்வாகாதிகளினின்றும் ஒக்கக்கிளம்பி அவற்றையேபின்பற்றியழிகின்றது" என ஜீவஅபிப்பிராயத்தானேஉபாதியழிவின் பின்னழிவையுரையாடலானும் "அவிநாசியாகும் அரேயிவ்வாத்துமா" எனக்கூடத்த அபிப்பிராயத்தானே அவிநாசத்தை யறைதலானும் வெளிப்படையாம். யானெனும் பொருளாய ஜீவன் அழிபவனுயின் அவிநாசியாய பிரஹ்மத்தோடபேதமியாங்ஙனங்கொல்? இஃது பேதத்திற் சாமானுதிகரண்யமன்றும்; மற்றே, வாதையின்

மாட்டாம், 'எக்குற்றியிம்மகன்' என மகன்மைபுணர்ச்சியா னே குற்றிப்பான்மை மதி நீங்குவதேபோலும். 'யான்பிரஹ்மமாயிருக்கின்றேன்' எனக்கூடத்தப் பிரஹ்ம வடிவத்தகைமை புணர்வினுனே அத்தியஸ்தமாய அகம்பொருள்வடிவத்தகை மைநீங்கும். "எவ்விக்குற்றி இம்மகன்என்னும்மகன்மதிகுற்றிமதியேபோலும், பிரஹ்மம் யானென்னும் பெருமதியானே எஞ்சலின்றியானெனும்மதிநீங்கும்" என்னும் நைஷ்கர்மியசித்திவசனத்தானென்ப, விவரணுதிகளிலோதிய நீதியாக இஃதபேதத்திற் சாமானுதிகரண்யமாயின் ஜீவவாசகமாகிய அகஞ்சத்தத்திற்கு இலக்கணையானே கூடத்தபரத்தன்மை யுளதாகுக. அத்தியஸ்தமல்லாத அதற்குப்பிரஹ்ம அபேதத்தகுதியுண்மையின். மேகாகாய துல்லியமாக மதிவாதனைப் பிரதிபிம்ப ஈசுராகயாவர் கூறப்பெற்ருரோ அவ்விவர்" துயிலின்கண்ணேகீபூதராய்ப்பிரஞ்ஞானகன ரேயாவர் ஆனந்தமயர்ஆனந்தமயில்பவர்" எனமாண்டூக்கியமறை துணிந்த துயிலுற்ற ஆநந்தமயர். ஆண்டேயதன்பின்னர்"இவர் ஸர்வேசுவரர் இவர்சர்வஞ்ஞர், இவர் அந்தரியாமி, இவர் காரணர், பூதங்களினுதயலயகாரணமாதலின்" என்னும் சுருதியினுனே சர்வைத்து விடயசகலப்பிராணிமதிவாதனையுபாதியையுடைய அவாது சர்வஞ்ஞத்தன்மை, அதனுனே சர்வகர்த்திருத்தகைமை முதலியவைகட்கும் பொருத்தமிருத்தலின் என்க. நம்மனோர் தமமதிவாதனையுபரிதனவனுக்கும் முற்றறிவுண்மையனுபவிக்கப்படவில்லையே யெனநவிலற்க; வாதனைகட்குப்பரோக்கத் தன்மை யுண்மையானே அதனுபரிதனுக்கும் பரோக்கத்தன்மையுண்மையின்.

பிரஹ்மானந்தத்தின்கண்ணே துயிற்கை போகத்தான் மாண்டூக்கிய மலர்ந்த ஆனந்தமயன் ஜீவன் எனக்கூறப்பட்டு

ளது. நனு முதலியவற்றில் போகத்தைத்தருவதாகிய கரும த்திற்கு அழிவு வந்தவழி நித்திரைவடிவமாக ஒடுங்கிய அந்தக்கரணம் மீண்டும் போகத்தையீயும் கருமவயத்தானே பிரபோதத்திற்கணமாம் அஞ்ஞான்று அதனையுபாதியாகவு டைய ஜீவன் விஞ்ஞானமயன் எனவியம்பப்படுவென், அவனே முன்னர்த்துயிற் சமயத்தில் ஒடுங்கிய அவத்தையையுபாதி யாகவுடையவனாக ஆனந்தமயனென அறையப்பெறுவன் அவனேமாண்டூக்கியத்தில் "துயிலிடத்தில்" என்பதாதியா னே காண்பிக்கப்பட்டவன், இவ்வாறாகவே அவனுக்குச்சர் வேசுரத்தன்மை முதலிய வசனம் யாங்ஙனம் பொருந்தல் கூடும்? இவ்வாறாகவே, பரமான்மாவிற்கு அதிதைவதமாக வும் அத்தியான்மமாகவும் விசேடத்தோடுகூடிய மூன்று ரூபங் கள் உள்ளனவாம். அவற்றுள் அதிதைவதமாயமூன்றும் தூய சைதன்யமும் என நான்கு வடிவங்கள் சித்திரபட திருட்டாந் தத்தானே சித்திரதீபத்தில் நிகழ்த்தப்பெற்றன- தானக வெள்ளாடை தவுதமெனவும், கஞ்சியால் விளைந்து கட்டிதமெ னவும், மைவடிவுற்றோ லாஞ்சித மெனவும், நிறந்தானிரம்பி ரஞ்சிதமெனவும், நான்கவத்தைகளை ஓரே சித்திரவத்திரம டையும்; அவ்வாறே, மாயை யதன் காரிய உபாதியற்றதாய்ப் பரமான்மா சுத்தமாம், மாயோபகிதமா யீசுரராம், அபஞ்சீகி ருதபூதகாரிய சமஷ்டி சூக்ஷ்ம சரீரவுபகிதமாயிரணியகருப்ப ராம், பஞ்சீகிருத பூதகாரிய சமஷ்டி தூலசரீர வுபகிதவிராட் டுப் புருடராம், என நான்குவத்தைப் பேதமும் ஓரே பரமான் மாவிற்காம். இச்சித்திரவத்திரத்தானத்திலிருக்கும் பரமான் மாவின்கண்ணே சித்திரத்தானம் பெற்றன தாவரஜங்கம வடிவ அகிலப்பிரபஞ்சங்களாம். சித்திரத்துற்றமனுடர்களுக்குச் சித் திர ஆதாரமாயவத்திரமொத்த வத்திரப்போலிகள் எழுதப்

படுகின்றன; ஆங்கே பரமான்மாவிலத்தியஸ்தமாய தேகி கட்கு அதிஷ்டான சைதன்யத்திற்கொப்பாய சிற்போலிகள் கற்பிக்கப்படுகின்றன. அவைகள் ஜீவர்களெனப் பெயரியனவா ய்ச்சம் சரித்துழலும். அத்தியான்மமோ, விசுவ தைஜசபி ராஞ்ஞபேதத்தானே மூன்றுருவங்களாம். ஆண்டுத்துயி லின்கண்ணே, அந்தக்கரணமிலயமுற்றவழி அஞ்ஞானமாத் திர சாக்ஷி பிராஞ்ஞனும்; எவ்விடத்தீண்டானந்தமயமென வியம்பப்பட்டதோ. கனவின்கண்ணே வியஷ்டிசூக்ஷ்ம சரீர அபிமானிதைஜசனும் நனவின்கண்ணே வியஷ்டி தூலசரீர அ பிமானி விசுவனும். ஆண்டுமாண்டூக்கியசுருதி, யானென்னும னுபவத்தில் ஒளிராநின்ற ஆன்மாவிற்கு விசுவதைஜசப்பிரா ஞ்ஞதுரிய அவத்தைவேற்றுமைவடிவமாகிய நாற்பாதத்தை "அவ்விவ்வான்மா நாற்பாதமுடையது" என நனிவைத்து, முன்முற்பாதத்தையிலயப்படுத்தும்வாயிலாய் நிஷ்பிரபஞ்சப் பிரஹ்மான் மகத்துரியபாதவுணர்ச்சி யினிதுண்டாவான் தூல சூக்கும சூக்குமதர உபாதி சாமியத்தானே விராட்டு முத லியவற்றை விசுவன் முதலியவற்றிலடக்கி, "நனவையிட மாகவுடையவன் வெளிப்பிரஞ்ஞன்" என்பதாதியானே விசு வமுதலிய பாதங்களை நிரூபித்தது. ஆதலின், பிராஞ்ஞனெ ன்னும் ஆனந்தமயனிடத்தில் அவ்வியாகிருதமாகிய ஈசுரனது உள்ளடக்கத்தையுரைக்கவிழைந்து அதற்குச் சர்வேசுரத்த தைமைமுதலிய அத்தருமவசனமென்பதாம். இன்னணமே ஸ்ரீமத் பகவத்பாத பாடியக்காரரால் கௌடபாதீய விவரணத் தில் இயம்பப்பெற்றதாகுமென்க. திருக்குத்திருசிய விவே கத்தின்கண்ணே சித்திரதீபத்திற்செவ்வனுரையாடிய கூடஸ் தரைச்சீவகோடியிலுள்ளடக்க மூவிதச்சித்தின் பிரக்கிரியை யேபற்றப்பெற்றதாமெனச்சிறப்பாம். கூடஸ்தக்குமிபுதி முறை

யானேமேன்மேற் கற்பனையானே ஜீவர் மூவகையரென ஆண்டே அறையப்பட்டது:—பாரமார்த்திகன் வியாவகாரிகன் பிராதிபாசிகன்என;, அவருள் அவச்சின்னன் பாரமார்த்திக ஜீவனுவன். அவன்பால் அவச்சேதகங் கற்பிதமாயினும் அவச்சேத்தியமாயஅவன்கற்பிதனல்லனுதலின், பிரஹ்மத்தோடும் அபின்னனுவன்அவனை மறைத்திருக்கும் மாயையில்கற்பிக்கப் படுமந்தக்கரணத்தில் சித்தின் போலியாயந்தக்கரணதாதாத்மிய அடைவினுனேயானென அபிமானிப்பவன் வியாவகாரிகனுவன். அவனுக்கு மாயிகத்தன்மையிருப்பினும்விவகாரம்வரைதொடர்ந்து நிற்பன் கனவின்கண்ணே அவனையும் மறைத்து நின்றமாயையின் அவஸ்தாபேதவடிவமான நித்திரையானே கற்பிக்கப்பட்ட கனுத்தேகங்களில்யானெனும் அபிமானிபிராதிபாசிகனுவன். கனுவுக்கோடுகூடவே அதனைக்காணும் ஜீவனுக்கும் நனவில் நீக்கம் நோக்கலின். இவ்வண்ணம் பிரதிபிம்ப ஈசுரவாதிகளின் இப்பக்ஷ பேதங்கள் காட்டப்பட்டன.

விவரண அனுசாரிகள் விளம்புவதோ:—"ஜீவேசுரபேதஸ்திதியின் பிரயோஜகமாகியஅஞ்ஞானம் முற்றினுமொழிந்தவழி" என்னும் ஸ்ருதி ஒரேயஞ்ஞானத்திற்கு ஜீவேசுரவிபாக உபாதித் தகைமையைப்பிரதி பாதித்தலின்பிம்பப்பிரதிபிம்பபாவத்தானே ஜீவேசுரர்களின்விபாகமாம், இருவருக்கும் பிரதிபிம்பபாவத்தானன்றும். இரண்டுபாதியில்லாமல் இருவருக்கும் பிரதிபிம்பத்தன்மை கூடாமையின். ஆண்டும் பிரதிபிம்பன் ஜீவன்ஆவன்,பிம்பத்தானத்திலிருப்பவர் ஈசுரர். அவ்வாருகவேதான் இலௌகிகபிம்பப்பிரதிபிம்ப திருஷ்டாந்தத்தானேசுவாதந்திரியம் ஈசுருக்கும் அவர்பாரதந்திரியம்ஜீவனுக்கும்பொருந்தும்."பதிவிம்பத்துற்றபல நேர்கோணல்,மு

தலியதொழில்களைமுதன் கண்ணுற்று, ஆடலேபோல வசங்க ப்பிரமமுங்கூடுமுயிருறுங்குறவினைபலவே." எனக், கற்பதருக் கழுறியமுறையே "உலகிற் போலவேலீலைகைவல்லியமாம்" என் னுஞ்சூத்திரமும் நன்குபொருந்தும். அஞ்ஞானப் பிரதிபிம்பித மாகியஜீவனுக்குஅந்தக்கரண ரூப அஞ்ஞானபரிணமபேதம்வி சேடமாக விளங்கற்கிடனும் யாண்டும்பரவிய மார்த்தாண்ட னொளிக்கு ஆடியேபோலும். ஆதலின் அதற்கு அதனுபாதியு டைமை விவகாரமுமாம். இத்துணையானே அஞ்ஞானோபா தியின் விடுகையின்றும். அந்தக்கரண உபாதிபரிச்சின்னமே யாய சைதன்யத்திற்கு ஜீவத் தன்மையாமேலோயோகிக ட்குக்காயவியூக அதிஷ்டானங்கூடாமையின். யோகமகிமை யானே யோகிகளின் அந்தக்கரணம் காயவியூகமில்க்கத்தகுதி யதாகிய விரிவை யெய்தும் என அதனவச்சின்னத்திற்குக் காய வியூக அதிஷ்டானம் பொருந்துமெனப்புகலற்க; "பிரதீ பம்போலும் ஆவேசம், அங்ஙனமன்றே காட்டுகின்ற." தெனச்சாத்திர ஈற்று முன்னதிகரணபாடியங்களில் காயவியூ கத்தின்கண்ணே தேகந்தோறும் விழிமுதலியவைபோலும் வேறாய அந்தக்கரணத்திற்கேயோக மகிமையானே சிருஷ்டி யை மிக வருணித்திருத்தலின், பிரதிபிம்பத்தில் பிம்பத்தி னின்றும் பேதமாத்திரத்திற்கு அத்தியஸ்தத்தன்மையுண்மை யானேசொரூபமாகவே அதற்குச் சத்தியத்தன்மையுண்மையி ன்பிரதிபிம்பரூபஜீவனுக்கு முத்தியன்வய அசம்பவமின்றமெ னஅவனினும் அயலாக முக்தியின் சேர்க்கைக்காக அவச்சின்ன ரூபவேறு ஜீவனையேனும், பிரதிபிம்ப ஜீவனினும் வேறாகிய ஜீவேசுர விலக்கண கூடஸ்தமென்னும் வேறு சைதன்யத் தையேனும் கற்பிக்கவேண்டியதின்றெனக. "அவிநாசியாகும ரேயிவ்வாத்துமா" என்னுங்கேள்வி, ஜீவனுக்கவனுபாதி நீங்

குங்கால் பிரதிபிம்பப்பெற்றி நீங்கியபோதினும் வடிவம் அழி வுறுதாம் என்னும் இக்கருத்ததாயிலங்குமன்றி அவனினுமய லாய கூடஸ்தமென்னும் வேறு சைதன்யக் கருத்ததாயன்றும். ஜீவ உபாதியான அந்தக்கரணாதியானே அவச்சின்ன சைத ன்யம் பிம்பூதமாகிய ஈசுரரேயாம். "யாவர் விஞ்ஞானத்தி லிருந்து" என்பதாதி சுருதியினானே ஈசுரருக்கே ஜீவசந்நிதி யிலெய்திய அதனந்தரியாமித்தன்மையானே வேறு விகார இ ருப்புக்கேட்கப்படுதலின்.

மற்றையரோ, உருவமற்றதன் பிரதிபிம்பம் ஒவ்வாதா ம், ஒருதலையாயுரு வமற்றதன்மாட்டும். விண் வித்தரத்தை வியாபித்து விளங்கும் விண்மணியின் கிரணமண்டலம் விம லஜலத்திற் பிரதிபிம்பித்தவழி விண்ணின் பிரதிபிம்பத்தன் மை விவகாரம் மயன் மாத்திர மூலமன்னியதாகு மெனக்க கனப்பிரதிபிம்ப உதாகரணமும் கதுவாதாம் தொனியின் பால் வர்ணப்பிரதிபிம்ப பாவமும் வயங்காதாம்; பிரகாசி ப்பிக்கும் பெற்றியானே சந்நிதான மாத்திரத்தான் தொனியி ன்றன்மங்களாகிய உதாத்தாதிசுரங்கட்கு வர்ணங்களில் ஆரோபங்கூடலின். தொனிக்கு வர்ணப்பிரதிபிம்பத்தைக்கவ ருந்தன்மையைக் கற்பிப்பதில் அளவையின்மையின் பிரதித் தொனியும் முன்னோசையின் பிரதிபிம்பமன்றும்; பஞ்சீகர ணப்பிரக்கிரியையானே படகபயோநிதி முதலியவற்றின் சப் தங்கட்கு மண்ணீர் முதலியவற்றின் சப்தத்தன்மையானே, பிரதித்தொனியே ஆகாச சப்தமாதலின் அதற்கன்னிய சப்த ப்பிரதிபிம்பத்தன்மை பொருந்தாமையின் என்க. வர்ண வடிவப்பிரதி சப்தமும் பூர்வ வர்ணப்பிரதிபிம்பமன்றும்; வர் ணத்தை யிலக்குவதாய தொனியை நிமித்தமாகவுடைய பிர தித்தொனிக்கு மூலத்தொனிபோலவும் வர்ணத்தை வயக்குந்

தன்மையினுனே பொருத்தமிருத்தலின். ஆதலின் கடாகா
சங்கடுப்ப அந்தக்கரணுவச்சின்னசைதன்யம்ஜீவனுகும். அத
ன் அநவச்சின்னம் ஈசுரராம். இங்ஙனமண்டத்துட்பட்ட
ஸ்சைதன்யம் அவ்வவ்வந்தக்கரண உபாதிகளானே முழுவடி
வாற் சீவபாவமாக வரையப்பெறுதலின் அதனுல் வரையப்
பெருதசைதன்ய வடிவ ஈசுரருக்கு அண்டத்தினும் வெளியி
டத்தே இருப்பாதலேனும் என "யாவர் விஞ்ஞானத்திரு
ந்து" என்பாதியில் அந்தரியாமி பாவமாக விகாரத்துள்ளே வீ
ற்றிருக்குங் கேள்வி விருத்தப்படும், பிரதிபிம்பபக்கத்திலோ
நீருள்ளிருக்கும் இயற்கையாய ஆகாயமிருப்பவே பிரதிபிம்ப
ஆகாச தரிசனமாதலின் ஓரிடத்தே இரட்டிப்பாய இருப்பு
இயையுமென வியம்பற்க; பிரதிபிம்ப பக்கத்தினும் உபாதியி
ன்கண்ணடங்காத சைதன்யத்திற்கே, ஆண்டுப்பிரதிபிம்பங்
கூறல் தகும். நீர்நிலா நியாயத்தானே முழுப் பிரதிபிம்ப மின்
ரும் அதனுள்ளடங்கிய பாகத்திற்கு ஆண்டுப்பிரதிபிம்பங்
கூடாமையின். மேகாவச்சின்ன ஆகாசத்திற்கேனும் ஆலோ
கத்திற்கேனும் நீரிற் பிரதிபிம்பம் போனும் நீரினுள்ளடங்கிய
தற்கும் ஆண்டுப்பிரதிபிம்பம் காணப்பெறுவதின்றன்றே. வெ
ளியிலிருக்கும் சடமொப்ப நீரின்கண் மூழ்கிய போதும் வத
னமுதலியவற்றின் பிரதிபிம்பந்தானும் உளதாவதின்றன்றே.
ஆதலின் நீர்ப்பிரதிபிம்பப்பொருட்டு மேகாகாசாதி கட்
கே போனும் அந்தக்கரணுதியுபாதிப் பிரதிபிம்பப்பொரு
ட்டு அதனுள்ளடங்காததற்கே பிம்பத்தன்மையாம் எனப்
பிம்பபூதத்திற்கு விகாரத்துள்ளடங்கியிருத்தல் கூடாமையி
ன் ஈசுரரிடத்தே அந்தரியாமிப்பிராஹ்மணை நலமுடைத்தாத
லின்மைசமமேயாம். இதனுனே, அவச்சின்னன் ஜீவனுவனே
ல், தார்ந்திருபோக் திருக்காலங்களில் ஆண்டாண்டு அந்தக்

காரணாவச்சின்ன சைதன்யப்பிரதேசம் வேறுபடுதலின் இயற்றியதற்கின்றியியற்றுதற்கொன்று மென்னும் வழக்குண்டாமென்பது நீக்கப்பட்டதாம். பிரதிபிம்பபக்கத்திலும், தனக்குட்படாது தன் முன்னிலைப்பட்ட சைதன்யப்பிரதேயத்திற்கு அந்தக்காரணத்தில்பிரதிபிம்பமாமென நுதலவேண்டுதலின் ஆண்டாண்டந்தக்கரணஞ் செல்லின் பிம்பபேதத்தானே அதன் பிரதிபிம்பத்திற்கும் இன்றியமையாது பேதமியைதலின் தோடந்துல்லியமன்றோவாம். அந்தக்கரணப்பிரதிபிம்பன் ஜீவன் எனும் பக்கத்தில் தோடந்துல்லிய மாயினும் அவித்யாப்பிரதிபிம்பன் ஜீவன் ஆவன், அவனுக்கும் ஆண்டாண்டுச் செல்லுமியிற்கைவாய்ந்த அந்தக்கரணம், ஜலாசய வியாபியாய மகா மேகமண்டலப்பிரதிபிம்பத்திற்கு ஜலாசயத்தின் மீது கமனசீல்மேய ஒள்ளொளியொப்ப ஆண்டு விசேட விளக்கஹேது வென்னும் பக்கத்தில் இத்தோஷமின்றாம். அந்தக்கரணத்திற்கே போல அவித்தைக்குக்கதியின்மையினானே பிரதிபிம்ப பேதம் பொருந்தாமையின் எனப்புகலற்க; அவ்வாறேயவச்சேதபக்கத்திலும் அவித்தையவச்சின்னன் ஜீவன் என உடன்படல் ஒவ்வவின்னும் ஆண்டும் ஒரு ஜீவனுக்கொருபாற் கர்த்திருத்தகைமையும் மற்றொருபாற் போக்திருத்தகைமையும் என விங்ஙன் இயற்றியதிற்கின்றென்பதாதி தோஷ நீக்கப்பொருட்டுண்மையாக ஜீவைக்கியத்தை யாதரிக்கவேண்டியிருத்தலின். அம்முறையாக அந்தக்கரணவுபாதி பக்கத்தும் உண்மையாகச் சைதன்ய ஒருமைக்கு அதன் அவச்சேதகமாகிய உபாதி யொருமை சாதகமாமென உடன்பட்டிருத்தலின் அத்தோட நிராகரணஞ்சம்பவித்தலின்றானும் என்க. அவச்சேதபக்கத்தில் "இவ்வொளியிரவியொன்றெனினும் பலபல, செவ்விய நீரிற் றெரிந்து பலவாம், அக்

வணமிவ்வஜவாத்துமவொளிதான், றிவ்வியமாய கேத்திரங்சு ளிலே, ஒவ்வுமுபாதியாலுறும் பலவேறே." "அதனுனேயுமுவ மைபிரவி முற்போலும்" என்னும் சுருதி சூத்திரங்களோடு முரணுறுதலில்லையாம்."அம்பே போலக்கவர்தலின்மையினே அவ்வாருகுந்தகைமையதின்ரும்" என உதாகரித்த சூத்திரப் பிற் சூத்திரத்தானே, எங்ஙனம் உருவமுடைய இரவிக்குப் பிரதிபிம்ப உதயத்தகுதி அதனினும் வேறுதேயத்திருக்கும் உருவமுடைய நீர் கவரா நிற்குமோ, அங்ஙனம், யாண்டுமிரு க்கும் ஆன்மாவிற்குப்பிரதிபிம்ப உதயத்தகுதி யொரு சிறிது மின்றன்ரே அதனினும் வேறுதேயத்திருப்பதெனப் பிரதி பிம்ப அசம்பவங்கூறி "வளர்தலுங்குறைதலும் வயங்கப்பெறு மேஉள்ளிருத்திலினுலுபய மும்நலமாம்,ஆதலினுனேயவ்வாரு கும்." எனஅதன் பிற்சூத்திரத்தானே நீரிற்பதிவிம்பித்த சூரி யன் நீர்பெருகிற் பெருகுவதே போலவும், நீர்குறுகிற் குறுகு வதேபோலவும், நீர் சலிக்கிற் சலிப்பதே போலவும், என அதற்குக் கற்பிதமாகிய நீரைப்பின்பற்றிய வளர்தல் குறைதல் முதலியவை வயங்குவதே போல ஆன்மாவிற்கு அந்தக்கரணு தியவச்சேதத்தானே உபாதியுள்ளடக்க முண்மையின் கற்பித மான அதனைப்பின்பற்றிய வளர்தல் குறைதன் முதலியவற் றைச்சேவித்தலேலும், என்பதாக உபமானஉபமேய நலமு டைமையின் முரணின்ருமெனச் சூத்திரக்காரர்தாமே அவச் சேதபக்கத்தில் அவற்றிற்குக் கருத்துரைத்திருத்தலின். "கட மடைககனங் கடமகன்றிடினும், இடமகலாதே கடமகன்றிடல் போல், திடவுயிர் விசும்பைத்திண்ணமாயொக்கும்" "அங்கிசம் பலவாயருளினமையினுன்" எனச்சுருதி சூத்திரங்களானேஅவ ச்சேதகபக்கமே இனிது கவரப்பட்டமையினுனுமெனக; என வே எங்குமிருக்குஞ் சைதன்யத்திற்கு அந்தக்கரணுதியானே

அவச்சேதம்இன்றியமையாதடைவுறும் எனஇன்றியமையாத தாந்தன்மையுண்மையின் அவச்சின்னன் ஜீவன் என்னும் பக்கத்தைப் பகராநிற்பர்.

வேறுசிலரோ:— ஜீவன் பிரதி பிம்பனுமல்லன் அவச்சின்னனுமல்லன்; மற்றோ, கவுந்தேயனுக்கே இராதேயத்தைமை போலும் நிர்விகாரமாகிய பிரஹ்மத்திற்கே அவித்தையினுனே ஜீவ பாவமாம் வேடகுலத்தில் விருத்தி செய்யப்பட்ட மன்னன் மகனுவமையினுனே "பிரஹ்மமே தனதவித்தையினுனே தொடுபடுகின்றது தனது வித்தையினுனே விடுபடுகின்றது" எனப்பிருகதாரண்யகபாடியத்திற் பகர்ந்திருத்தலின். "மன்னவன் மகற்கே மருவிடுன் நினைவோ, மன்னிய வேடத்தன்மையதேகும், அன்னவாறே அஞ்ஞுவாத்துமா, மன்னியதத்துவமசி முன் மொழிகளான்" என்னும், வார்த்திகக்கூற்றுனும் என்க. இவ்வாருகவே தனத வித்தையினுனே ஜீவ பாவத்தையடைந்த பிரஹ்மத்திற்கே சர்வப்பிரபஞ்ச கற்பகத்தன்மையுண்மையின் ஈசுரரும் முற்றறிவுடைமை முதலிய தன்மங்களோடு கனவிற்ருேற்றும் தேவதை போலும் ஜீவகற்பிதரே என வியம்புவர்.

## 7 வது ஜீவ ஏகத்வ அநேகத்வ விசாரம்.

இனி யிச்சீவனொருவனு? பலவனு? என்பது: மேலே ஈற்றியம் பியபக்கம் பற்றியவர் சிலர் ஜீவ ஐக்கியம் பற்றிச்செப்புவதாவது:— ஜீவன் ஒருவனே, அதனுன் ஒரே சரீரம் ஜீவனோடு கூடியதாகும், மற்றவையோகனவிற் கண்ட காயங்களேபோலும் ஜீவனற்றவையாம். அகிலமுழுதும் அவனஞ்ஞான கற்பிதமாம். அவனது கனுக்காட்சி கடுப்ப அவித்தையிருக்குந்துணையும் எல்லா விவகாரமுமாம். பத்த

முத்த விவஸ்தையுமிலதாம்; ஜீவனேகனாதலின். சுகர் முக்தி முதலியவையும் கனவின் மற்றவன் முக்தி முதலியவற்றைப் போலும் கற்பிதமாம். ஈண்டுச்சம்பவிக்கும் சகல சங்கைப் பங்கத்தையும் கனாத்திருட்டாந்த சலிலதாரையினானே தண ரச்செய்வது தகுதியாம்.

மற்றையரோ, இவ்வேகதேச ஏக ஜீவவாதத்தில் விசுவா சம் கோடாதவராய், "அதிகமேயாம் வேற்றுமைக்கூற்றால்" "உலகமொக்க வேலீலைகை வல்லியம்" என்பன முதலிய ஜீவ னினும் அதிகமாகிய ஈசுரரே உலகைச் சிருட்டிப்பவரே யன்றி. ஜீவனல்லன். அவர் ஆப்தகாமராதலினானே பயனி லையேனும் கேவலம் லீலையாம் உலகின் சிருட்டி என்பன முத லியவற்றைப் பிரதிபாதிக்கும் சூத்திரங்களோடு முரண்படலை முன்னினோராய், ஹிரணியகர்ப்பன் ஒருவன் பிரஹ்மப்பிரதி பிம்பனாகிய முக்கிய ஜீவன், மற்றையரோ, அவன் பிரதி பிம்ப பூதர், சித்திர வத்திரத்தமைந்த மனுடதேகங்கட்கர்ப் பித்த வத்திரப்போலி போன்ற ஜீவப்போலியர், சமுசாராதியைச் சேவிப்பவர் ஆவர்; என்பதாக ஜீவனோடு கூடிய அநேக தேக ஏக ஜீவவாதத்தை அறையா நிற்பர்.

மற்றையரோ, ஹிரண்ய கருப்பன்கற்பந்தோறும் வேற் றுமையுறுதலின் எவ்விரணியகருப்பனுக்கு முக்கிய ஜீவத்தன் மையென்பதன் கண்ணே நியாமகமின்றாமென எண்ணினோ ராயொரே ஜீவன் எல்லாத்தேகங்களையும் சமமாய்ப்போற் றுவன். சரீர அவயவ பேதத்திற் போலவே சரீர பேதத்தி லும் பரஸ்பரசுகாதியனுசந்தானமுண்டாமென்னற்க; அயற்பி றப்பின் சுகாதியனு சந்தானங்காணாமையானே சரீரபேதத் திற்கு அதனனுசந்தானப்பிரயோஜகத்தன்மை யுணியப்

பெற்றிருத்தலின். யோகிகட்கோ காயவியூகசுகாதியனுசந்தானம் தடைப்பட்ட பொருளைக்கவர்வதே போல யோகப்பிரபாவ நிபந்தனமாகும் என அவ்வுதாகரணங் கூடாதாம். விசேடமின்றி அநேக தேக எக ஜீவவாதத்தை இனிதியம்புவர்.

வேறு சிலரோ, ஈண்டும், பந்தமுக்தி விவத்தையினபாவம் துல்லியமாதலின். "தேவர் தம்முள்ளே எவ்வெத்தேவர் ஆவப்பிரமந்தனையறிந்தனரோ, மேவுவரவரேமேலாமதனையே" என்பதாதி சுருதிகட்கும், "பிரதிஷேதத்தானெனிழே அன்றும் சரீரத்தான்" என்னுமதிகரணத்தில் சுகரின் முத்தத்தன்மையைப்பிரதிபாதிக்கும்பாடியத்திற்கும் நலமுடைமை நண்ணுதாமென நன்குமதிழாதவராயந்தக்கரணங்கட்கு ஜீவோபாதித்தன்மையை யங்கீகரிப்பதனுனே அநேக ஜீவவாதம் பற்றிப் பந்த முக்திவிவத்தையைப்பகரா நிற்பர்.

அவர்களுட் சிலர் இங்ஙனமறைவர்:— சுத்தப்பிரஹ்மத்தையாசிரயித்து விடயம் செய்வதாய ஒரே அஞ்ஞானம் உளது அதன் அழிவே மோக்ஷமெனினும், ஜீவன் முக்தியின்கண்ணே அஞ்ஞானலேச அனுவிருத்தியங்கீகாரத்தான் அஞ்ஞானத்திற்கு அம்சத்தோடு கூடியதாந்தன்மையுண்மையின் அதுவே சிலவுபாதியில் பிரஹ்ம ஞானம் பிறந்தவழி அங்கிசத்தானீங்கும், வேறு பாதிகளில் முன்போன்றே வேறங்கிசங்களால் தொடராநிற்கும் என்பதாம்.

மற்றையரோ, நையாயிக ஏகதேசி மதத்தில் பூதலத்தின் மாட்டுக்கடாத்யந்தா பாவத்தினது இருப்பின்கண் கடசம்யோக அபாவம் நியாமகமாம் எனக்கடசம்யோகமுடைய அநேக இடங்களில் சம்பந்தித்து நிகழும் கட அத்தியந்தாபாவம்

சில பால் கடசம்யோக உதயத்தானே அதன பாவம் நீங்கிய வழி சம்பந்தியாதாம்; இன்னணம், சைதன்யத்தின் கண்ணே அஞ்ஞானமிருப்பதில் மனம் நியாமகமாம் என மனவுபாதியி ஞனே சைதன்ய இடங்களிற் சம்பந்தித்து நிகழாநிற்கும் அஞ்ஞானம் சிலபால் பிரஹ்மதரிசன உற்பத்தியிஞனே "பேதிக்கப்பெறுமான் பெருமனமுடிச்சே" எனக்கூறிய முறையே மனம் நீங்கியவழி சம்பந்தப்படமாட்டாதாம் பிறவிடத்தேமுன்போன்றே நிலைபெற்றுநிலவும் அஞ்ஞானச ம்பந்தா சம்பந்தங்கள் உள் வழியே பந்தமோக்ஷங்களா மென்பர்.

வேறு சிலரோ, அஞ்ஞானம் தூய சைதன்யத்தைப் பற்றி நிற்பதொன்றன்றும், மற்றூ, ஜீவனைப்பற்றிப் பிரஹ்மத்தை விடயம் செய்வதாம், அதனுனே அந்தக்கரணப்பிரதிபிம்பரூப சர்வ ஜீவர்களிடத்தும் வியக்திகளில் ஜாதியிருப்பதே போலும் தனித்தனியே யிருப்புற்றிருப்பதாய் வித்தையினுதயம் பெற்ற வொருவனை விடுகின்றது. சாம்பியவியத்தியைச்சாதிவிடுவதேபோலும், அதுவே மோக்ஷமாம், மற்றையனைமுன்போலவேபற்றிக்கொண்டுநிற்கும் எனவிவுத்தையாமென்று விளம்புவர்.

மற்றையரோ, ஜீவன்றோறும் அவித்தையின் பேதத்தையங்கீகரித்தேஅதன்றொடர்பு தொடர்பின்மைகளானேபந்தமுக்தி விவஸ்தையை நிலை நிறுவுகின்றனர். இப்பக்கத்தில் எவ்வாறு அவித்தையிஞனே உலகமுண்டாக்கப்பட்டுளவுகின்றதெனின்? ஒரு பக்சம் நிறுவுமுத்தியின்மையிஞனே, எல்லா அவித்தையானுமியற்றப் பெற்றதேயாகும் அநேக நூற்களாலாரம்பிக்கப்பட்ட ஆடையேபோலும், ஒருவனுக்கு

முத்தி மேவில் அவனது அவித்தையழியவே, ஒரு நூலொழிய ஆடைக்கேபோலும் அவனது சாதாரணப் பிரபஞ்சம் அழியுங்கால் அஞ்ஞான்றே இராநின்ற வேறு நூற்களான் வேறுடைக்கே போலும் மற்றைய அவித்தை முதலியவற்றானே சகல இதர சாதாரணப் பிரபஞ்சமயலொன்றன் உதயமாகுமெனச் சிலர் கூறுவர். அவ்வவ்வஞ்ஞானத்தாலுளதாய பிராதிபாசிகவெள்ளிபோலும், நியாயமதத்தில் அவ்வவ்வபேக்ஷாமதியாலாய இருமையே போலும், அவ்வவ்வவித்தையானாக்கப்பெற்ற விண் முதலிய பிரபஞ்சம் புருடன்றோறும் வேறாம். இப்பிவெள்ளியின் மாட்டுன்றலெவ்வெள்ளி காணப்பட்டதோ அதுவேயென்றனும் என்பதேபோலும் ஒருமைப்பிரமமாத்திரமென்பர் மற்றையர். ஜீவனைப்பற்றிய அவித்தைக் குழுவினும் அயலாகிய மாயையே ஈசுரரைப்பற்றியதாய்ப் பிரபஞ்சத்தையுண்டாக்குவதாகும், ஜீவர்களினவித்தையோ ஆவரணமாத்திரத்தும், பிராதிபாசிகசுக்திரஜதாதி விக்ஷேபத்தும் தான் நனி நண்ணு நிற்கும் எனச்சிலர் கூறுநிற்பர்.

## 8 வது பிரஹ்மத்தினது கர்த்திருத் தன்மையைப் பிரதிபாதித்தல்.

முடிவுற்றது உபாதானத்தன்மையும் அதனடைவின் பினுற்ற அமைடவும். இனிக்கர்த்திருத்தகைமை எத்தகையது? சிலர் கூறுவதாவது:— "அது பார்த்தது அது விழைந்தது அது தன்னைத்தானே செய்தது" எனக்கேட்கப்படுதலின் நியாய மதத்திற்போலக் காரியானுகூல உணர்வு செய்யும் வேட்கை முயல்வுடைமை வடிவமென்பதாம்.

வேறு சிலரோ, செய்யும் வேட்கை முயல்வுகளின் கர்த்திருத்தகைமை நிர்வாகப்பொருட்டுச் செய்யும் வேட்கை

முயல்வுவேறு விரும்பில் வரம்பின்றியோடும் வழக்கு வருத லின்காரியானுகூல ஞானமுடைமையே பிரஹ்மத்திற்குக்கர்த் திருத்துவமாம். ஞானத்தின் கண்ணும் இவ்வழக்காமென் னற்க; அதற்குப்பிரஹ்மவடிவத்தன்மையுண்மையினனேகாரி யத்தன்மை பொருந்தாமையின். இவ்வாறுகவேவிவரணத்தில் ஜீவனுக்குச்சுகாதிகருத்திருத்தகைமைக் கூற்றும்; வீக்கணமா த்திர சாத்தியமாதலின் வியதாதிவீக்கிதமாம், ஹிரண்யகர்ப்ப வாயிலாக வீக்கண அதிக முயல்வினுனே சாதிக்கத்தக்கதாத லின்பௌதிகம் மந்தகாசமாம், என்னும்கற்பதருவின் கூற்றும் இனிது பொருந்தும் என வியம்பாநிற்பர்.

மற்றுஞ்சிலரோ, காரிய அனுகூல சிருஷ்டிக்கவேண்டிய ஆலோசனை வடிவஞானமுடைமை கர்த்திருத்தகைமையாம். இப்பி காரிய அனுகூலஞானமுடைமை மாத்திரம் அன்றும் இப்பி வெள்ளி கனுமயன் முதலியவற்றில் அத்தியாசானுகூல அதி ஷ்டான ஞானமுடைமையானே ஜீவனுக்குக்கர்த்திருத்தகை மை வழக்குண்டாதலின். இட்ட அடைவாம் “இனித்தேர் களையும் தேர்களிற் பூட்டுவனவற்றையும் நெறியையும் சிருட் டிப்பன் அவனே கருத்தா” என்பதாதி சுருதியினுனே ஜீவ னுக்குக் கனுப்பிரபஞ்சக் கருத்திருத்துவக் கூற்றுதலினென வியம்பற்க; ஸ்ரீமத்பாடியக்காரர் கலப்டை, தோ முதலியவ ற்றைக்காக்கின்றது என்பதேபோலும் தேர் முதலியவற்றின் ஹேற்ற நிமித்தத்தன்மையானே கர்த்திருத்தகைமையுபசார மாத்திரம் என வியாக்கியானித்திருத்தலின் என்றனைறனர். எல்லாவுலகங்களையுமியற்றுங் கர்த்திருத்தகைமையாய விதனு னேபிரஹ்மத்திற்கு முற்றறிவுண்மை பொருளாற் பெறப்ப டும்: இதுவே “சாத்திரயோனித்தன்மையானே” என்னுமதி

கரணத்தில் வேதகர்த்திருத்தன்மையானும் நிலைபெறுத்தப் பட்டதாம்.

## 9 வது பிரஹ்மத்திற்குச் சர்வ ஞ்ஞத்தன்மையின் நிலைபேறுத்துகை.

இனியாங்ஙனம் பிரஹ்மத்திற்குச் சர்வஞ்ஞத்தன்மை பொருந்தும்? ஜீவனுக்கென்ன அந்தக்கரணமின்மையினுனே ஞாதிருத்தகைமையே கூடாமையின்.

ஈண்டுச்சர்வவத்து விடய சகலப்பிராணிமதிவாதனை பொதிந்த அஞ்ஞான உபாதியையுடையவர் ஈசுரர். அதனு னே, அவருக்குச் சர்வவிடய வாதனையின் சாக்ஷித்தன்மையா னே சர்வஞ்ஞத்தன்மையாமென்னும் பாரதீ தீர்த்தாதி பக் கம் முன்னரே காட்டப்பட்டது.

பிரகடார்த்தக்காரர் கூறுவதாவது:— ஜீவனுக்குத்தன் னுபாதியாய அந்தக்கரணபரிணமங்கள் சைதன்யப்பிரதிபிம் பங்கவர்வனவாயுள்ளனவெனஅவற்றன் சம்பந்தத்தான் ஞாதி ருத்தகைமையாமாறு பிரஹ்மத்திற்கும் தன்னுபாதியாயமா யையின் பரிணமங்களாய சிற்பிரதிபிம்பங்கவர்வனவாயுள் ளனவென அவற்றுட்பிரதிபிம்பித்தவிளக்கங்களானே காலமூ ன்றினுமிருப்பனவாயவுலகத்தையும் காட்சிப்படவிடயீகரித் தலின் சர்வஞ்ஞத்தன்மையாமென்பதாம்.

தத்துவசுத்திக்காரரோ, கூறியமுறையாய்ப் பிரஹ்மத் திற்கு இராநின்ற நிகிலவுலகசாக்ஷாத் காரஞ்சம்பவித்தலின் அதனுனுண்டாய அதன் சமஸ்காரமுடைமையானே ஸ்மர ணம் பொருந்தலின் சென்ற சகல வஸ்துக்களின் விளக்கம் சித்தியாம்; சிருட்டிக்கு முன்புமாயைக்குச் சிருட்டிக்கப்படும்

நிகிலபதார்த்த விருத்திரூபமாகஜீவ அதிருஷ்டஅநுசாரத்தா
ன்பரிணமிக்குந்தன்மையுண்மையின் அதன் சாக்ஷியா யதனை
யுபாதியாகவுடைய பிரஹ்மத்திற்கும் அதன் சாதகத்தன்மை
துணியப்பெறுதலின் வரும் பொருள்களின் விஞ்ஞானம்
பொருந்தும் எனமுற்றறிவுண்மையை முற்றுறுத்துகின்றனர்.

கௌமுதிக்காரர் கூறுவதாவது:— சொரூபஞானத்தா
னே பிரஹ்மத்திற்குத்தன்பாற் சம்பந்தித்தயாவற்றையுமிலக்
குந்தன்மை சர்வஞானத்தன்மையாம். சென்றவருபவற்றிற்கு
ம்அவித்தையாகியசித்திரபித்தியின்கண்ணே மறைப்புற்று வெ
ளிப்படாதசித்தி ரம்போலச்சமஸ்காரவடிவமாயிருப்புண்மை
யின்அவற்றின் சம்பந்தமும் பொருந்துதலின், விருத்தி ஞான
ங்களானே அதற்குச்சர்வஞ்ஞத்தன்மையின்றாம், "விளங்காநி
ன்ற அதனையேபின்றொடர்ந்து யாவும் விளங்குகின்றன" என்
னுநிச்சயத்தோடுகூடிய சுருதிவிரோதம் வருதலினானும்; சிரு
ட்டிக்குமுன்பு "ஏகமேவ அத்விதீயம்" என்னும் நிச்சயத்தை
யனுசரித்துமகாபூதங்கட்கேபோலும் விருத்திஞானங்கட்கும்
பிரளயம் கூறவேண்டியிருத்தலின் பிரஹ்மத்திற்கு, அக்கால்
சர்வஞ்ஞத்தன்மையின் அபாவ அடைவானே முதலிலாம்
மாயாவிவர்த்த ரூபசக்கணத்தின் கண்ணும் அதன் வாயி
லாயாம் மகாபூதாதியின்கண்ணும் உளதாஞ்சிருஷ்டிகர்த்திருத்
தகைமையின் அபாவமுக்குண்டாதலினானும் என்க, இவ்வா
றாயின், பிரஹ்மத்திற்குச்சர்வவிஷய ஞானவடிவமுடைமையே
யாமன்றிச்சர்வ ஞானகர்த்திருத்தகைமை வடிவம் சர்வஞ்
ஞத்தன்மையாகாதாமெனின்? உண்மையே, சர்வவிஷய ஞா
னன்மகமே பிரஹ்மமாமன்றிச் சர்வஞானகர்த்திருத்தகைமை
வடிவமாய ஞாதிருத்தகைமையன்றாம். அதனானே, "வாக்

கிய அன்றுவயத்தா'' னென்னும் அதிகரணத்தில் விஞ்ஞாத் ருத்தகைகமைஜீவலிங்கமெனக்கூறப்பட்டதுபாடியக்காரரான். "யாது யாவற்றையுமுணர்கின்றதோ" என்பதாதி சுருதியும் அதற்கு ஞானரூபத்தன்மையின் அபிப்பிராயத்தானே கூட்டத்தக்கதாம். பிரஹ்மம் சொரூபசைதன்யத்தானே தன்பாற் சம்பந்தித்தயாவற்றையு மிலக்குவதே யாயினும் அதற்குச் சொரூபமாக அகாரியத் தன்மையிருந்தபோதினும் நிருசியாவச்சின்னரூபமாகப் பிரஹ்மகாரியத் தன்மையுண்மையின் "யாது யாவற்றையுமுணருமோ''என்பதாதி ஞானம் பயக்குங் கர்த்திருத்தகைகமைச் சுருதிக்கும் யாதொரு முரணுமின்றும் என்றுசார்ய வாசஸ்பதி மிசிரரறைவர்.

## 10 வது விருத்தியுபயோக விசாரம்.

அற்றேல், ஈசுரரைப்போல ஜீவனும் விருத்தியை விரும்பாமலே சொரூப சைதன்யத்தானே விடயங்களை விளக்காததென்னைகொல்?

இதன்கண் விவரணத்திற் கூறியதாவது:—'பிரஹ்மசைதன்யம் சர்வ உபாதானத்தன்மையினானே சர்வதாதாத்மியத்தையடைவுற்றதாய்த்தன்பாற் சம்பந்தித்த யாவற்றையுமிலக்குகின்றது, ஜீவசைதன்யம் அற்றன்றும். அதற்கு அவித்தையுபாதியாயிருத்தலினானே யாண்டு மிருப்புற்றிருந்தபோதினும் உபாதானத்தன்மையின்மையினானே சம்பந்தமற்றிருத்தலின். யாண்டுமிருக்கும் கோத்தன்மைப்பொதுமை இயல்பாகவே பரி முதலிய வியக்தி சம்பந்தமற்றிருந்தபோதினும் அலைதாடியுடைய வியக்தியிற் சம்பந்தித்திருக்கும். இங்ஙனமே, விடயாதிகளிற் சம்பந்தமற்றிருந்தபோதினும் ஜீவன்

இயல்பாகவேஅந்தகரணத்தோடு சம்பந்தியா நிற்கும். நிற்கவே
அந்தக்கரண விருத்திரூபப்பரிணமமங்பஞுதி வாயிலாகவெளி
ப்போந்துவிடயம்வரை விழியொளிவியப்ப விரைவினீட்சியா
ய்ப்பிரபையாகாரமாய்ப் பரிணமித்து விடயத்தை வியாபியா
நிற்கும்; அக்கால் அதன்மீதாரோகணித்து விடயத்தை விட
யீகரிக்கும். கேவல அழலானழற்றப்பெருதனவாயினும் அரு
ம்பு முதலியவை இரும்புப்பிண்டத்தேறிய அழலானேயழற்
றப்பெறுவனபோலும்; கேவலஜீவசைதன்யத்தானே யொளி
ரப்பெருதனவாயினும் குடமுதலியவை அந்தக்கரண விருத்
தியின்மீதாரோகணித்த அதனுலொளிரப்பெறல் தகுதியே
யன்ரு. அல்லது அந்தக்கரண உபாதித்தன்மையானே
ஜீவன் பரிச்சின்னனுதலின் சம்பந்தமின்மையின் குடமுதலிய
வற்றையொளிர்வியான் விருத்திவாயிலாய் அவ்வச்சம்பந்தத
விடயாவச்சின்ன பிரஹ்ம சைதன்ய அபேத வெளிப்பாட்
டிலோ அவ்விடயத்தை யொளிர்விப்பன். அல்லது ஜீவன்
யாண்டுமிருப்பவனுயினும் அவித்தையானே மறைபட்டவனு
தலின்தானும் ஒளிராதவனுய் விடயங்களை யொளிர்வியாமல்
விடயவிசேடத்தில் விருத்தியொன்றுமை முதலியவையுள்ளதா
ய வழி ஆவரண மறைப்பான் ஆண்டே வெளிப்பட்ட அவ்
விடயத்தையே யொளிர்விப்பன். இன்னணமாகவே, சிற்சம்ப
ந்தப்பொருட்டாதல், விடய சைதன்ய அபேத வெளிப்பாட்
டின் பொருட்டாதல், ஆவரணமறைப்பின்பொருட்டாதல், வி
ருத்தி வெளிப்பாட்டை விரும்பி அவனைச்சம்பந்தித்த விடய
மாத்திரத்தை விளக்குந்தன்மையுண்மையின் ஜீவனுக்கு அற்ப
அறிவுண்மையும் பொருந்தாநிற்கும் என்பதாம்.

## 11 வது விருத்தி விடய சம்பந்த நிரூபணம்.

ஈண்டு முதற்பக்கத்தில் யாண்டுமிருக்கும் ஜீவனுக்கு விருத்தியதீனவிடய சம்பந்தம்யாதாம்? விருத்தியினும் முன்றுணியப்பெற்றனவாய்க்கிரியை யற்றனவாய விடய சைதன்யங்கட்குத்தாதான்மியமேனும் சம்யோகமேனும் கோடல் சம்பவியாதாம்.

ஈண்டுச்சிலர் கூறுவதாவது:—விடயவிடயி பாவசம்பந்தமேயாம். மற்றையரோ விடயவிடயிபாவ மாத்திரத்தில் நியாமிகை விருத்தியாமேல் வெளிப்படாத பொறியாலாம்விருத்திக்கு அதன் நியாயமகத்தன்மைமேல்வழக்கை மேவவையாதாம் என அதன் வெளிப்போதலையுடன் படல்வாளாபோதலின் அஃதிட்டப் படத்தக்கதொன்றன்றும்; மற்றோ, விடய சமீபமுற்ற ஜீவசைதன்ய தாதாத்மியத்தையடைவுற்ற விருத்திக்கு விடய சம்யோக முளதாய வழி அதற்கும் அதன் வாயிலாய பாரம்பரைச்சம்பந்தம் கிடைக்கும் என அதுவே சிறசம்பந்தம் இட்டப்பட்டதாமென்றினிதுரையாடுவர்.

மற்றையரோ, சாக்ஷாதபரோக்ஷ சைதன்ய சம்சர்க்கத்தானே சுகாதிகட்குக் காட்சிப்பாடாதல் காண்டலின் அபரோக்ஷ விடயத்திற் சாக்ஷாத் சம்சர்க்கம் உடன் படத்தக்கதாம். ஆதலின் விருத்திக்கு விடயசம்யோகத்தில் விருத்தி ரூப அவச்சேதக இலாபம் வருதலின் அதன் வரைவானே அதனுபாதானமாகிய ஜீவனுக்கும் சம்யோகஜ சம்யோகம் சம்பவிக்கும்; காரணாகாரணசம்யோகத்தானே காரியா காரிய சம்யோகம் போலும் காரியா காரிய சம்யோகத்தானே காரணாகாரண சம்யோகத்தையும் ஊக வொப்பால் உடன்படல் கூடலின் என்பர்.

ஏகதேசியரோ, அந்தக்கரணோபகிதத்திற்கு, விடயத்தை விளக்கும் சைதன்ய, விடயதாதாத்மியத்தை யடைவுற்ற பிரஹ்மசைதன்ய, அபேதவெளிப்பாட்டின் வாயிலாக விடய தாதாத்மியத்தின் சம்பாதனமே சிற்சம்பந்தமென்ப திட்டமாம். யாண்டுமிருப்பதனுனே சர்வவிஷயங்களின் சமீபத்தை யடைவுற்ற ஜீவனுக்கு அவ்வடிவத்தானே விடயவிளக்க மொப்பில் அவனுக்குப்பொதுமையானே புருடவிசேஷ அபரோக்ஷ நன்னிலைபேறு பொருந்தாமையினுனே அவனுக்கந்தக்கரண உபகிதத்தன்மை வடிவத்தானே விடயத்தை விளக்குந் தன்மையுண்மையின் இவ்வாறுகவே விடயக்காட்சிப்பாட்டில் ஆத்யாசிக சம்பந்தம் நியாமகமென்னும் சித்தாந்தமும் நன்கு நண்ணும். இங்ஙனமா யினிரண்டாவது பக்கசாங்கர்யம் வருமென வியம்பற்க; ஜீவனுக்கு யாண்டு மிருக்குந்தன்மையில் முதற்பக்கமாம். பரிச்சின்னத்தன்மையில் . இரண்டாவது என்பதாகவே அவற்றின் வேற்றுமை யிருத்தலின் என வியம்புவர்.

## 12 வது அபேத அபிவியக்தி வடிவம்.

இனி இரண்டாவது பக்கத்தில் இவ்வபேத அபிவியக்தி யென்பது தானியாது கொல் !சிலர் கூறுவதாவது:—கால் வாய் வாயிலாயேரி வயல்நீர்கட்கேய்ப்பவிடய அந்தக்கரண அவச்சின்ன சைதன்யங்கட்கு விருத்திவாயிலா யொருமைப்பாடே அபேத அபிவியக்தியாம். இன்னணமாகவே விடயா வச்சின்னமாகிய பிரஹ்மசைதன்யமே விடயத்தை விளக்கி வைப்பதாம் என்றுலும் அதற்கு விருத்திவாயிலா யொருமைப்படுதலானே ஜீவத்தகைமை சம்பன்னமாமென ஜீவனுக்கு விடயத்தை விளக்குதலின் பொருத்தமாமென்ப.

மற்றையர் கூறுவதாவது:—பிம்பஸ்தானீய விஷயாவச்சின்னப்பிரஹ்மத்திற்குப்பிரதி பிரம்பபூத ஜீவனோடு ஒருமைப்படல் அபேத அபிவியக்தியன்றாம். விலக்குவதற்கிய உபாதிகள் கண்ணாடிபோலும் விழித்திருக்கும்போது அவற்றிற்கொருமை கூடாமையின் விருத்தியாலாக்கப்பட்ட அபேத அபிவியக்தியினானே விடயாவச்சின்னப்பிரஹ்மத்திற்கு ஜீவத்தன்மையடைவுற்ற வழி பிரஹ்மத்திற்கக்கால் அவ்விடயசம்சர்க்கமின்மையின் அதைக் காணுந்தகைமையிலதாகவே அதற்குச் சர்வஞ்ஞத்தன்மையினபாவ அடைவுண்டாதலின்; மற்றோ, விடயாவச்சின்னம் பிரஹ்மசைதன்யம் விடய சம்பந்தமாய விருத்தியின் நுனியில் விடயத்தை யொளிர்விப்பதாய பிரதிபிம்பத்தையர்ப்பிக்கும் அந்தப் பிரதிபிம்பத்திற்கு ஜீவனோடு ஒருமைபுறலாம். இவ்வாறாகவே, அந்தக்கரண அதன் விருத்தி விடயாவச்சின்ன சைதன்யங்கட்குப் பிரமாதுருப்பிரமாணப் பிரமேயபாவத்தானே சாங்கர்யமின்மையுங் கூடும். விருத்தியுபகித சைதன்யத்திற்கு விடயப்பிரமாத்தன்மையிருப்பில் அதற்கு, விஷயாதிஷ்டான சைதன்யத்திற்கே போலும் விடயத்தோடும் ஆத்யாசிக சம்பந்தமின்மையின் விடயக்காட்சியில் ஆத்யாசிகசம்பந்தம் தந்திரமன்றெனச் சாற்றற்க; விடயத்தால் வரையப்பட்ட விஷயாதிஷ்டான சைதன்யத்திற்கே விருத்தியின் கண்ணே பிரதிபிம்பித்த தன்மையுண்மையின் அதனபேதத்தான் அதன் சம்பந்தமே யதன் சம்பந்தமாதலின் என்றுணர்க.

வேறு சிலர் விளம்புவதாவது:— பிம்பபூத விடயாதிஷ்டான சைதன்யமே ஸாக்ஷாத்தாக ஆத்யாசிக சம்பந்தலாபத்தான் விடயத்தை யொளிர்விப்பதாமென அதற்கே

பிம்பத்தன்மை விசிட்ட வடிவமாய்ப் பேதமிருந்தபோதினும் அபேத அதனுபலக்ஷிதசைதன்ய வடிவமாயொருமையுறல் அபேத அபிவியக்தியாம். இங்ஙனமாயின் ஜீவப்பிரஹ்மசாங்கர்யமா மென வியம்பற்க; பிரஹ்மத்திற்கு முற்றறிவுண்மை முரணு மெனவும் மொழியற்க; பிம்பவடிவமாக அதற்கு முன்போ லவே நிலைபேறுண்மையின்.

## 13-வது ஆவரண அபிபவவடிவ நிருபணம்.

இனி மூன்றாவது பக்கத்தில் ஆவரண அபிபவமென்ப துயாதாம்? அஞ்ஞான அழிவாமெனின்? குடவுணர்வினோ அஞ்ஞான மூலமாய் வந்தவிந்த வுலகம் நீங்கவன்றோவேண் டுமெனின்? ஈண்டுச் சிலர் கூறுவதாவது:—சைதன்யமாத்தி ரத்தை மறைக்கும் அஞ்ஞானத்திற்கு விடயாவச்சின்னப் பிரதேசத்தில், மின்மினியின் ஒளியானே பேரிருட்கே போலும் ஞானத்தானே ஏகதேச அழிவாதல், பாய்போல் சுருண்டு கோடலாதல், பயந்த படன்போனீங்கலாதல், அபி பவமாமென்பர்.

மற்றையரோ, அஞ்ஞானத்தின் ஏகதேச நாசமாமேல் உபாதான மின்மையின் மீண்டும் 'ஆண்டுமறைப்புக்கூடல் கூடாமையின் ஒருகாலுணர்ந்ததில் மற்றொருகாலும் மறைப் பின்மைவழக்காதலின் கிரியையற்றதற்கு நீக்கலும் சுருளு தலுங் கூடாமையினானும் முற்கூறியபடியாய அபிபவம் சம் பவியாதாம். ஆதலின், சைதன்யமாத்திரத்தை மறைப்ப தாய அஞ்ஞானத்திற்கும் அவ்வவ்வாகார விருத்தி சம்பந் தித்த அவத்தையோடு கூடிய விஷயாவச்சின்னசைதன் யத்தை மறையாத இயல்பே அபிபவமாம். விடயத்தை மூடி நிற்கும் ஆடைபோலும் விடயசைதன்யத்தைப்பற்றி நின்ற

அஞ்ஞானத்திற்கு யாங்ஙனம் அதனை மறையாமை கூடல் எனக் கடாவாதொழிக; 'யானஞ்ஞன்' என்னும் பிரதீதியி ஞனே அகமனுபவத்தில் ஒளிராநின்ற சைதன்யம் பற்றுக் கோடாயிருத்தலினானே அதற்கு அதனை மூடுதலின்மை பொருந்துதலினெனப் புகல்வர்.

வேறு சிலரோ, குடத்தையறியேன் என்னும் குடஞான விரோதித் தன்மையானே, குடஞானமுளதாகவே குட அஞ்ஞானம் நீங்குமென அதனானீங்கப்படுவதாக அனுபவிக்கப்படுவது மூலாஞ்ஞானமல்லவாம். சுத்த சைதன்யத்தை விடயம் செய்வதும் அதன் ஞானத்தானே நீக்கப்படுவதுமாய அதற்கு அவ்வாறாந் தன்மைகூடாமையின்; மற்று, கடாவச்சின்ன சைதன்யத்தை விடயஞ் செய்வது மூல அஞ்ஞானத்தினது அவஸ்தாபேத ரூபமாகிய அயலஞ்ஞானமென அதன் நாசமே யபிபவமாம். இங்ஙனம் ஒரே ஞானத்தானே அதனழிவெய்தியவழி அதன் சமானவிடயமுடை வேறு ஞானங்கட்கு ஆவரண மறைப்பின்மையினடைவாம். எத்துணை ஞானங்களிருக்கின்றனவோ அத்துணையவற்றானீங்குவனவாய அஞ்ஞானங்கள் உள்ளனவென வுடன்பட்டிருத்தலின் என வியம்பாநிற்பர். இந்த அவத்தைவடிவ அஞ்ஞானங்கள் மூலாஞ்ஞானமொப்ப அஞ்ஞானத் தன்மையுண்மையின் அநாதிகள் எனச்சில ரியம்புவர். வியாவகாரிக உலக ஜீவரை மறைத்து கனவுலக ஜீவரைச் சிருட்டிக்கும் நித்திரை ஆண்டு ஆவரண விக்ஷேப சக்தி யோகத்தானே அஞ்ஞான அவஸ்தாபேத ரூபமாம், ஆங்கே, துயிலவஸ்தையும் அந்தக்கரணாதிகள் இலயமாயவழி "சுகமாக யானுறங்கினேன், ஒரு சிறிதுமறிந்திலேன்" என்னும் பராமரிசம் காணப்பெறுதலின், மூலாஞ்ஞானம் போலும் துயிலில்

அநுபவிக்கப்பட்ட அஞ்ஞான அவஸ்தை பேதரூபமேயாம். அடங் அவற்றிற்கோகனுப் போகத்தைக் கொடுக்கும் கருமம் அஃ கிய வழியே உற்பவமுண்மையின் ஆதியுடைமையாம். சாதி தொப்ப அவஸ்தாரூப அஞ்ஞானமாகிய மற்றையதும் யென்பர் மற்றையர்.

அற்றேல், அநாதித்வபக்கத்தில் கடத்தின்கண் முதலி லுண்டாய ஞானத்தானே எல்லா அதனஞ்ஞான நாசமுண் டாம். ஒரு பக்கம் நிறுவுமூகமின்மையின் அதனவச் சின்ன சைதன்யத்தை மறைக்கும் சர்வாஞ்ஞான நாசமாகாத வழி விடயவிளக்கங் கூடாமையினுனுமென்க. ஆதலிற் பின்னுண் டாம் ஞானங்கட்கு ஆவரணத்தை யொடுக்காமை ஆங்கேயன் றோ நிலை பேறடையும் எனின்? ஈண்டுச் சிலர் கூறுவதாவது:- ஞானமுன்னின்மைகள் அநேகங்களிருந்த போதினும் ஒரு ஞான முதயமாயின் ஒரே முன்னின்மை நீங்கும். ஐய முத லியவற்றையுண்டாக்கக் கூடியதாதலினுனே அதன் ஆவாண ரூபமாக வேறு முன்னின்மைக ளிருந்தபோதினும் விடய விளக்கமாம். அங்ஙனமே ஒரு ஞானமுதயமாகவே ஒரே அஞ்ஞானம் நீங்கும், வேறு அஞ்ஞானங்களிருந்தபோதினும் விடயவிளக்கமாம்.

மற்றையரோ, மறைபட்டதற்கு அபரோக்ஷ ஞானம்முா ணும். ஒரு ஞானமுதயமாகவே முன்னின்மை வேறிருப்பி னும் எல்லா விசேட தரிசனுபாவகூட ரூபமாகிய ஆவரணமா னது விசேஷ தரிசனத்தானே பிலதாமெண வெண்ணினோா பியம்புகின்றனர்:— எக்கால் எதனையஞ்ஞானம் மறையாநிற் கும் அக்கால் அதன் ஞானத்தானே அதற்கே நாசமாம் யாவ ற்றையும் எக்காலும் மறைப்பதில்லை; வீணுகலின். மற்றோ,

மறைக்கும் அஞ்ஞானம் விருத்தியினுனே அழிவுறும்போது அவ்விருத்தியுபரமமடையவே வேறஞ்ஞானம் மறைக்கும். இங்ஙனம் பிரஹ்மஞான உற்பத்திகாலத்தில் மறைக்காமலிருக்கும் அஞ்ஞானங்கட்கு அதனுனும் நீக்கமின்மையின் வழக்காம் என வாதாடற்க; அவைகட்கு நேராக அதன் பகைமையின்றேனும், அதனுல் நீங்குவதாகிய மூலாஞ்ஞான பாதந்திரமாயிருத்தலினுனே அஞ்ஞான சம்பந்தாதிபோலும் அதனீக்கத்தானே நீக்கங்கூடலின். இதன் பொருட்டே அவற்றிற்கு அதனவஸ்தாபேதரூபமாகஅதன் பாதந்திரமாக அங்கீகரிக்கப்படுகின்றதென்பதாம்.

மற்றையரோ, அஞ்ஞானத்திற்கு விடயத்தோடு கூடிய தாமியற்கையுண்மையின் பொதுவாக யாவற்றையு மெக்காலும் ஒரு தலையாய் மறைக்கும். விடய உற்பத்தியின் முன்னர் மறைக்கத் தக்கதின்மையினுனே மறைக்குந் தகைமை பொருந்தாதாம் எனப்புகலற்க. அக்காலும் சூக்கும வடிவமாக அதனிருப்புண்மையின் என எண்ணினவராய்க் கற்பிக்கின்றனர்:— எங்ஙனம்: அநேகர் ஒருங்கு குழுமிய விடத்தே ஒருவனது சிரத்தில் விழுந்த அசனியானது மற்றையரையு விலகியோடுமாறு செய்கின்றதோ; எங்ஙனந்தான் சந்நிபாதமென்னும் மகாரோகத்தைநீக்கும்மருந்தானதுஒருதோடத்தை நீக்குவதோடு வேறு தோஷத்தையும் சேய்மையதாகச் செய்யும். இங்ஙனம் ஓரஞ்ஞானத்தைக் கொல்வதோடு ஞானம் வேறஞ்ஞானங்களையும் திரஸ்கரிக்கும். திரஸ்காரமும், ஞானத்திதிவரை ஆவரணசக்திபின்றடையாம். அற்றேல் இங்ஙனமாயின் தாரையாய் ஞானமுண்டாகுமிடத்தே யிரண்டாவது விருத்திகட்கு ஆவரண மொடுக்காமை யுண்மையின் பயனின்மைபற்

றும். முதன் ஞானத்தாலே நீக்கதிரஸ்காரங்களான் ஆவரண
மாத்திரத்திற்கேயொடுக்க முண்மையின் எனின்?

ஈண்டுக் கூறுகின்றனர் :— விருத்தியாற்றிரஸ்கரிக்கப்
பட்ட அஞ்ஞானம், அஃதுபரமமாங்கான் மீண்டு மறைக்
கும் தீபத்தாற் றிரஸ்கரிக்கப்பட்ட தமத்தைப் போலும்
தீப உபரமமாய வழியும். விருத்தியுபரமசமயத்தில் வேறு
விருத்தியுதிக்கினே திரஸ்கரிக்கப்பட்ட அஞ்ஞானம் அவ்
வாறே நிலைபெறுகின்றது, தீபஉபரமசமயத்தில் தீபம் வேறுதி
க்கின் இருள்போலும். இவ்வாறாகவே எஃதிருக்குங்காற்பிற்
கணத்திலெதற்கிருப்பாமோ, எஃதில்லாக்காலிருப்பின்மையா
மோ, அது அதனாலாயதாம் என முன்னின்மையைப் பரிபா
விக்கும் சாதாரண இலக்கண அனுசாரமாயனுமாணமாய
இரண்டாவது முதலியவிருத்தி காரியத்தன்மைக்கும் வையர்த்தி
ருத்தலின் அதற்குப்பயனின்மையின்றென்றுணர்க.

நியாயசந்திரிகைநூலுடையாரோ இங்ஙனங் கூறுவர் :—
ஏதாவதொரு ஞானத்தாலே ஏதாவதொரு அஞ்ஞானத்
தினழிவேயாம். மறைப்பனவாய வேறஞ்ஞானங்கட்கும்
திரஸ்காரமென்பதின்றாம். இலதாகவே ஞானமைய விக்கும்
இரண்டாவது முதலிய விருத்திகட்கும் ஒவ்வொரு அஞ்ஞா
னநாசகத்தன்மையுண்மையானே பயனுடைமையாம். இவ்வா
றுஞானோதயத்திலும் ஆவரணம் சம்பவித்தலின் விடயவிளக்க
மிலதாமென்று வழக்காமென்னற்க; அதைத்தை வடிவங்க
ளாகிய அஞ்ஞானங்களோ அவ்வக்காலத்தே உபலக்ஷிக்கப்
பட்ட சொரூபத்தை மறைப்பனவாம். ஞானங்களும் தத்
காலோபலக்ஷித விடயத்தை மறைக்கும் அஞ்ஞானங்கள்
யாவற்றையும் அழிப்பனவாம்; ஆகவே இறுதி ஞானமுதய

மாயின் அக்காலத்திருக்கும் விடயத்தை மறைக்கும் அஞ்ஞானத்தின் அழிவானும், இராநின்ற வேறஞ்ஞானங்களோ வேறுகாலத்திருக்கும் விடயத்தை மறைப்பதாதலினானும், அக்காலத்திருக்கும் விடயவிளக்கத்தில் யாதொரு கூடாமையுமிலதாம். காரீரியாகத்தின் பலமாகிய மழையில் இட்டிமுடிந்த பிற்கணமாகிய அடைவுற்ற சமயத்திற்கென்ன அஞ்ஞான விடயமாய கடாதிகளிலும் அவ்வக்காலமுபலக்கணமாக நிற்றலின் விடயகோடியின் கண்ணே புகுத்தாமையான் சூக்குமமாய அவ்வக்கால வேற்றுமையை விடயம் செய்யாமலிருக்கும் தாராவாகிக இரண்டாவது முதலிய ஞானங்களான் அஞ்ஞானங்கட்கு நீக்கமுண்டான போதினும் யாதொரு பொருந்தாமையுமின்றாம்.

சிலரோ முதன்ஞானத்தான் நீக்கப்பட்ட அஞ்ஞானமே வடிவத்தைமறைப்பதாம். இரண்டாவதுமுதலியஞானங்களானீக்கப்பட்டவையோ தேசகாலாதி வேறுவிசேஷங்களான் விசிஷ்டத்தை விடயம் செய்வனவாம். அதனானே, சத்தையை நிச்சயிக்கும் வடிவதும் அஞ்ஞானத்தை நீக்குவதும் ஆகிய சைத்திர தரிசனமானது ஒருபொழுதுதித்த மாத்திரத்திற் சைத்திரனை யறிகின்றிலே னென்னும் சொரூப ஆவரணம் அனுபவிக்கப்படுவதில்லை; மற்றோ, இப்பொழுது அவன் யாண்டுளன் என்பதை யறிகின்றிலேன் என்பதாதி வடிவமாக விசிஷ்டாவரணமேயாம். மறதியை மணந்தானுக்குச் சிலபால் ஒருமுறை கண்டபோதினும் அறிகின்றிலே னென்னும் சொரூப ஆவரணம் காணப் பெறுகின்றதே யெனின்? ஆண்டவ்வாறுருக. பிறவிடத்தில் ஒருபொழுது காணின் விசிஷ்ட விடயங்களை யுடையனவே அஞ்ஞானங்க

ளும் ஞானங்களுமாகும். இவ்வாறாயின் தாராவாகிக இரண்டா
வது முதலியஞானங்கட்கு அஞ்ஞான நிவர்த்தகத் தன்மையு
ண்டாகாதாம் தூலகால விசிஷ்ட அஞ்ஞானத்திற்கு முதன்
ஞானத்தானே நீக்கமுண்டாதலின்பூர்வ அபர ஞானங்களால்
வேறுபடுத்தப்பட்டனவாய சூக்கும கால விசிஷ்ட அஞ்ஞானத்
திற்கு அதன் அவிடய இரண்டாவது முதலிய ஞானங்க
ளான் நீக்கங்கூடாமையின் என நிகழ்த்தற்க; தாராவாகிகத்
தலத்தில் முதலிலுண்டாகிய விருத்திக்கே அத்துணைக்கால
நிலைத்திருத்தல் சம்பவித்தலினானே விருத்தி பேத மங்கீகரி
யாமையின். அதனை யங்கீகரித்தபோதினும் நீடித்துநிற்பதாய
ஐந்து ஆறு விருத்தி ரூபத்வ சம்பவத்தான் பரஸ்பரம் விலக்
கப்பட்ட தூலகாலாதி விசேஷண பேத விஷயத் தன்மை
பொருந்துதலின். கணந்தோறு முதியாநின்ற அநேக விரு
த்தி சந்தான ரூபத் தன்மையை யங்கீகரித்தபோதினும்
இரண்டாவது முதலிய விருத்திகள் அறியப்பட்ட பொருளை
மாத்திரம் விடயம் செய்தலாற் பிரமாணமாதலின்மையினானே
ஆவரணத்தை நீக்காவிடினும் ஹானியின்றாமென்க; பாதிக்
கப்படாத விடயமாத்திரம் பிரமாணமாதலாகாதாம். முன்ன
றியப்பட்டதும்அறியப்படாததும் ஆகியமலை அதன்கண்ணே
யிருக்கும் தீக்களாகிய அனுமதி விடயங்கட்கும் பாதப்படா
மை சமமாயிருத்தலின்இரண்டிடத்தும் அனுமிதியின் பிராமா
ண்ய வழக்காம். இட்டந்தானென்னற்க; வன்னியின்கண்ணே
அனுமிதி பிரமாணமென்பதேபோல மலையின்மாட்டும் அனு
மிதி பிரமாணமென்னும் விவகாரங் காணாமையின் விவாணத்
தில், சாக்ஷி சித்தமாய அஞ்ஞானத்திற்கு அபாவத்தினின்றும்
விலக்கும் ஞானப்பயனுடைய அனுமானத்தி விஷயத்தன்மை
யிருந்தபோதினும் பிரமாண அபேக்ஷயத்வக்கூற்றுண்மையி

றாலும் என்க. எனவே இரண்டாவது முதலிய விருத்திகட்குப் பிரமாணமாதலின்மையின் உபாசனை முதலிய விருத்திகட்கே போலும் அஞ்ஞானத்தை நீக்கவொண்ணுத் தன்மையிருப்பினும் ஹானியின்றாம். பிரமாண விருத்திகட்கே அதன் நிவர்த்தகத்தன்மை யங்கீகரித்திருத்தலின் என்பர்.

அற்றேல், இந்நியமமும் ஏலாததே, பரோக்ஷ விருத்திக்கு வெளிப்போகாமை யுண்மையான் அஞ்ஞானத்தை நீக்காத தன்மையுண்மையின் எனின்? ஈண்டுச் சிலர்கூறுகின்றனர்;— விடயாவரணமாகிய அஞ்ஞானம் இருவிதமாம், ஒன்று இரஜ்ஜு முதலியவற்றோடு ஒன்றுபட்டு நின்று விக்ஷேப உபாதான பூதமாய் விடயத்தைப் பற்றியதாம், காரியத்தைக்கொண்டு கற்பிக்கத் தக்கதாம்; மற்றொன்று புருடனைப்பற்றியதாம், 'இதையானறிகின்றிலேன்' என அனுபவிக்கப் படுவதாம். புருடனைப் பற்றியதற்கு விடயத்தோடு விரவிய விக்ஷேப உபாதானத்தன்மை சம்பவியாமையின் விடயத்தைப் பற்றியதற்கு "இதை யானறிகின்றிலேன்" என்னும் சாக்ஷி ரூபப் பிரகாச சம்பந்தங் கூடாமையானே இருவகையுமின்றியமையாததேயாம். இவ்வண்ணம் பரோக்ஷஸ்தலத்தில் விருத்திக்கு வெளியே செல்லவில்லாமையின் சேய்மையிலிருக்குந் தருவின்கண் ஆப்த வாக்கியத்தானே பரிமாண விசேஷத்தை யறிந்திருந்தபோதினும் அதனினும் விபரீதபரிமாண விக்ஷேப விசேஷ தரிசனத்தானும் விடயகத அஞ்ஞானம் விலகாத போதினும் புருடகத அஞ்ஞான நீக்கம் உள்ளதேயாகும். சாத்திரப்பொருளை யறிகின்றிலேன் என அனுபவிக்கப்பட்ட அஞ்ஞானத்திற்கு அதனுபதேசத்தின் பின்னர் நீக்கமனுபவிக்கப்படுகின்றமையின் அதனானே அனுமேயாதி

களில் சுழுப்தி வியாவிருத்தி யென்னும் விவரணத்திற்கு அனுமேய விஷய அஞ்ஞான நிவிருத்தி பொருள் எனக் கூறப் பட்டது தத்துவ தீபனத்தில் என்பதாம்.

மற்றையரோ, நயனபடலம் போலும் புருடனைப்பற்றிய அஞ்ஞானமே விடயத்தை மறைப்பதாம் அதனினும் அய லாக விடயத்திற்கும் அஞ்ஞானத்தின் கண்ணளவையின்மை யின். புருடனைப் பற்றியதற்குவிடயத்துறும் விக்ஷேபபரிணாமி த்தன்மை சம்பவியாதாம், அதுசம்பவிக்கினும் சேய்மையிலிரு க்கும்தருப்பரிமாணத்தில்பரோக்ஷஞானத்தால்அஞ்ஞானம்நீங் கிய வழி விபரீத பரிமாண விக்ஷேபம் சம்பவியாதாம் எனச் சாற்றற்க; வாசஸ்பதி மதத்தில்சர்வப்பிரபஞ்சத்திற்கும் ஜீவ னைப்பற்றிய அஞ்ஞானத்தால் விடயீகரிக்கப்பட்ட பிரஹ்ம விவர்த்தத்தன்மை யுண்மையின் அஃதொப்ப இப்பி வெள்ளி முதலியவற்றிற்கும் புருடனைப் பற்றிய அஞ்ஞானத்தால் விட யீகரிக்கப்பட்டபிரஹ்ம விவர்த்தத்தன்மை கூடலினானும்பரோ க்ஷவிருத்தியானே ஓரவத்தை நீங்கப்பெறினும் அயலவத்தை யினானே விபரீதபரிமாண விக்ஷேபங் கூடலினானும் என்பர்.

மற்றுஞ் சிலரோ, சுக்திரஜதாதி பரிணாமப் பொருத்தல த்தால் விடயத்தை மூடிக்கொள்ளும் படம்போலும் விடயக தமேயாகிய அஞ்ஞானம் அதன் ஆவரணமாம். அங்ஙனமா யின் அஞ்ஞானத்திற்கு அந்தக்கரணோ பகிதசாக்ஷி சம் பந்தமின்மையினானே அதனால் ஒளிரப்படுதல் கூடாதாம், பரோக்ஷ விருத்தியானீங்கலும் சம்பவியாத தோடமுமா மென்னற்க; அவஸ்தாரூப அஞ்ஞானத்திற்கு அந்தக்கரண உபகிதசாக்ஷி சம்பந்தமின்றாயினும் அதனோடு சம்பந்தித்த மூலாஞ்ஞானத்திற்கே 'இப்பியையானறிகின்றிலேன்' என்

னும்பிரகாசங்கூடலின் இப்பி முதலியவற்றிற்கும் மூலஞ்ஞான விடய சைதன்யஅபின்னத்தன்மையானே அதன் விடயத் தன்மைக்கு அனுபவமுரணின்மையினுனும், விவரணுதிக ளில், மூலாஞ்ஞான சாதனப் பிரசங்கத்தின் கண்ணே ‘இதையானறிகின்றிலேன்’ எனப் பிரத்யக்ஷப் பிரமாணத் தை யினிது காண்பித்திருத்தலினுனும் என்க, ‘யான் அஞ் ஞன்’ எனப் பொதுவாக உண்டாம் அஞ்ஞான அனுபவமே மூலாஞ்ஞானவிடயமாம் ‘இப்பியை யானறின்கிறிலேன்’ என் பதாதி விஷய விசேஷத்தால் ஆலிங்கிக்கப்பட்ட அஞ்ஞான அனுபவமோ அவஸ்தாஞ்ஞான விஷயமாம் என்பதாகச் சிற ப்பாய்க் கோடினும் அவஸ்தையும் அவஸ்தையையுடையது மொன்ருதலினுனே மூலாஞ்ஞானத்திற்குச் சாக்ஷி சம்சர்க்க வாயிலா யேனும், சாக்ஷி விடய சைதன்யங்கட்கு உண்மை யாய ஒருமையானேனும், விடயத்திருந்தபோதினும் அவஸ் தாஞ்ஞானம் சாக்ஷி விடயமாகப் பொருந்தலின், பரோக்ஷ ஞானத்திற்கு அஞ்ஞான நிவர்த்தகத் தன்மையின்மையேனும் அதனுல் அதன் நிவிருத்தியனுபவம், சத்தா நிச்சயரூப பரோக்ஷ விருத்திப் பிரதி பந்தகத்தாலேவப்பட்ட அனுபவ காரணமயலாகப் பொருந்துதலின் அபரோக்ஷ ஞானமே அஞ் ஞான நிவர்த்தகம் என்னும் நியமத்தை யங்கீகரித்திருத்த லின் என வியம்புவர்.

அற்றேல், இந்நியமமும் இயலாதாம் அவித்தை யகங் கார இன்ப துன்ப முதலிய அதன்றருமக் காட்சியானது அஞ்ஞானத்தால் நீங்குமென உடன்படாமையின் எனின்? அற்றன்ரும், அவித்தை முதலியவற்றின் காட்சி சாட்சி வடிவமாதலினுனே விருத்திரூப அபரோக்ஷஞானம் ஆவர ணத்தை நீக்கும் என்னும் நியமம் நீங்காமையினென்க.

## 14-வது சாக்ஷி சொரூப நிரூபணம்.

இனிச் சீவனுக்கு வேறாக வழங்கும் இச்சாக்ஷி யாதென ஆராய்வாம்:—இவ்விடயத்திற் கூடத்த தீபத்திற் கூறப்பட்டுளதாவது. இருதேகங்கட்கும் அதிஷ்டான பூதமாய கூடஸ்த சைதன்யம் தன்னை வரைந்துகொள்ளும் இரு தேகங்களை நேரே காண்டலினாலும் விகார மற்றிருத்தலினாலும் சாக்ஷி யெனப்படும். உலகின்கண்ணும் உதாசீன உணர்ச்சிக்கே சாக்ஷித்தன்மை வெளிப்படையாம், ஜீவனது விருத்திகள் இருதேகங்களையும் விளக்குவனவா யுள்ளனவெனினும் யாண்டும்பரவியிருக்கும் தம்மால்வரைந்துகொள்ளப்பட்ட கூடஸ்த சைதன்யத்தாற் சிறிதுளஞ்ஞான்றுமிலங்கப்பெறுவனவேயாய இருதேகங்கள் ஜீவவடிவ சைதன்யப் பிரதிபிம்பத்தோடு கூடிய அந்தக் கரணத்தினின்றும் நின்று நின்று கிளம்பி வரும் விருத்தி ஞானங்களால் விளக்கப்படுகின்றன. இடைப்பட்ட காலங்களிலோ விருத்திகளின் அபாவங்களோடும் கூடஸ்த சைதன்யத் தானே விளக்கப்படுகின்றன. இது பற்றியே யன்றோ அகங்காராதிகட்கு, எக்காலும் பிரகாச சம்பந்தத் தானே சம்சயாதியின் அவிஷயத் தன்மையாதலு மியையும்; அயல் ஞானதாரை காலத்திருக்கும் அகங்காரத்திற்கு "இதுகாறும் இதனை யான் கண்டுகொண்டே யிருந்தேன்" என்னும் அனுசந்தான முமியையும். கூடஸ்தன் விளக்கியதில் யாங்ஙனம் ஜீவனுக்கு விவகார மிருதியாதிகள் எனச் சங்கியாதொழிக; அன்னியோன்னிய அத்தியாசத் தானே கூடஸ்தனுக்கு ஜீவ ஒருமையின் அடைவினானே ஜீவாந்தரங்கத் தன்மை யுண்மையின். ஜீவ சைதன்யமே சாக்ஷியாகுக கூடஸ்தனாலாவதென்னே யென்னற்க; இலௌகிக வைதிக வியவகார கர்த்தாவாய ஜீவனுக்கு உதாசீன

மாகக் காணல் கூடாமையின் "சாக்ஷி, சேதாவும் கேவலமும் நிர்க்குணமும் பரம்பொருளாம்" என்னும் சுருதி சொற்ற சாக்ஷித்வங்கதுவாதாம். "அவ்விருவருட் சீவன் பிப்பலமாகிய கருமபலத்தைச்சுவாதென உண்பன், கூடஸ்தன் உண்ணுனைய பரோக்ஷமாகவிளங்குவன்" எனக் கர்மபல போக்தாவாய ஜீவனினும் உதாசீனப் பிரகாசரூப சாக்ஷியைத் தனித்துக் கூறியிருத்தலினென்க.

நாடகதீபத்திலும் நடனசாலையிலிலங்கும் தீபதிருஷ்டாந்தத்தானே சாக்ஷி ஜீவனினும் வேறுபடுத்திக் காண்பிக்கப்பட்டுளது. அங்ஙனமன்றோ:—"நாடக கூடத்தில் நாட்டியிருக்குந்தீபம் பிரபுவையும் சபையோரையும் நடனமாதையும் சமமாயிலக்கும், அவர்களிலாதபோது மிலங்கும்." அங்ஙனமே சிதாபாச விசிஷ்ட அகங்கார ரூபனும், விஷயபோகசகலபாவ விகலபாவ அபிமானத்தாலுண்டாக்கப்பட்டமகிழ்ச்சிவாட்டமுடைமையின் நடன அபிமானியாகிய பிரபு துல்லியனும் ஆகிய ஜீவனையும், அவனைச்சுற்றிலுமிருக்கும் மகிழ்ச்சிவாட்டமின்மையின் அவையோருக்குச் சமானமாகிய நானாவித விகார விடயங்களையும், நடனமாதிற்கொப்பாய மதிகளையும் ஒளிர்வித்துக்கொண்டு, துயின் முதலியவற்றில்அகங்கார முதலியவையில்லாதபோதும் ஒளிர்வதாகி, சிதாபாச விசிஷ்ட அகங்கார ரூப ஜீவமயற்கதிஷ்டானமாகிய கூடஸ்த சைதன்ய ஆத்மாவே சாக்ஷியாம். இவ்வாறு ஜீவனினின்றும் வேறுபிரிக்கப்பட்ட இச்சாக்ஷி பிரஹ்மகோடியிற்சேர்க்கப்படுவதாகாதாம்; மற்றோ, ஜீவேசுர விபாகத்தைப்பற்றாத சைதன்யம் எனக் கூடஸ்ததீபத்தில் கூறப்பட்டுளது.

தத்துவப்பிரதீபிகையின்கண்ணும் மாயையோடுகூடிய சகுணபரமேசுரரிடத்தில் "கேவலம் நிர்க்குணம்" என்னும்

விசேஷணங்கூடாமையின் சர்வப்பிரத்தியக்கு வடிவமாகிய விசுத்தப் பிரஹ்மம் ஜீவனினும் வேறாகச்சாக்ஷி யெனப்பிரதிபாதிக்கப்படும் எனக்கூறப்பட்டுள்ளது.

கௌமுதியின்கண்ணே, "ஏகனாகிய தேவன் சர்வபூதங்களிலுங்கூடனாயிருக்கின்றான் சர்வவியாபியும் சர்வபூத அந்தராத்மாவும், கர்ம அத்யக்ஷனும் சர்வ பூதங்களில் வசிப்பவனும் சாக்ஷியும் சேதாவும் கேவலனும் நிர்க்குணனும் ஆவன்" என்னும் தேவத்தன்மையையாதியிலுடைய சுருதியினானேபரமேசுரனுக்கேகரூபபேத மொன்றுஜீவப்பிரவிருத்தி நிவிர்த்திகளின்நிரந்தரபோத்தாவாய சுயம்பிரகாசனாயசாக்ஷி யெனப்படும்; அதுவுங்காரணத்தன்மை முதலிய தருமங்கட்கிடன்றாமையின் அபரோக்ஷமாம், ஜீவன்பாலிருக்கும் அஞ்ஞானாதிகளை விலக்கிக்கொண்டு ஜீவனுக்கந்தரங்கமாம். ஆயின் முதலியவற்றிலே காரியகாரணம் உபாயமாகிலை ஜீவன்பாலுள்ள அஞ்ஞானமாத்திரத்தை யிலக்குமென் பிராஞ்ஞ சப்தத்தானே கூறப்பட்டுளான் "அம்மெதங்களைப் பிரியையாகிய மங்கையால் ஆலிங்கிக்கப் பெற்றவன் பாகியம் ஒருசிறிதையும் அறியான் ஆந்தரத்தையும் அறியான் இவ்வாறே இப்புருடன் பிராஞ்ஞ ஆன்மாவாற் றழுவப்பட்டவனைப் பாகியம் சிறிதேனும் அறியான் ஆந்தரமு மறியான், பிராஞ்ஞ ஆன்மனால் அதிட்டிக்கப் பெற்றவனைக் கூவிக்கொண்டு வெளியே வருவன்" என்னும் மறைமொழியானே சுழுத்தியுற்கிராந்தியவஸ்தைகளில் ஜீவனுக்கு வேறாகப் பிரதிபாதிக்கப்பட்டுளான் பரமேச்சுரன் எனச் சுழுப்தியுற்கிராந்தியதிகரணத்தில் நிர்ணயமும் சாக்ஷிபரம் என இனிது வர்ணிக்கப்பட்டது.

தத்துவசுத்தியின்கண்ணும், இது வெள்ளியென்னும் மயற்றலத்தில் உண்மையாகச் சுத்திபொருளின்பட்டங்கினும்

இதுவெனுமங்கிசம் பொய்ம்மையாக இராஜதகோடியாம், அவ்வாறே பிரஹ்மகோடியே சாக்ஷியாயினும் பொய்ம்மையாக ஜீவகோடியென ஜீவனது சுகாதிவிவகாரத்தில் அதனதுபயோகமாம் என்னும் யுக்தியினுனே இப்பக்ஷமே இனிதியம்பப் பெற்றுளது.

சிலரோ :—அவித்தையை யுபாதியாகவுடைய ஜீவனே நேராகக்காண்டலின் சாக்ஷியெனப்படுவன். உலகிலும் கருத்தாவல்லாமற் காண்புழியே சாக்ஷித்தகைமை வெளிப்படையாம். அதுவும் அசங்க உதாசீன பிரகாசரூப ஜீவன்பாலே சாக்ஷாத்தாய்ச் சம்பவிக்கின்றது. ஜீவனுக்கந்தக்கரண தாதாத்மிய அடைவினுனே கர்த்திருத்துவாதியாரோபத்தைச் சேவிக்குமாறு நேரினும் சுயம் உதாசீனத்தன்மையே யுளது. “ஏகன்றேவன்” என்னும் மந்திரமோ பிரஹ்மத்திற்குச் சிவபாவாபிப்பிராயத்தானே சாக்ஷித்வத்தைப் பிரதிபாதிப்பதாம். “இருபறவைகள்” என்னும் மந்திரம் குகாதிகரண நியாயத்தால் ஜீவேசுர உபயபரமாம். குகாதிகரணபாடியத்திற் கூறப்பட்டபைங்கிரகசியபிராஹ்மணத்தினுரைத்த வகையாய் ஜீவ அந்தக்கரண உபய பரமாகவேனும் யாதோரு விரோதமுமின்றுமென்றுரைப்பர்.

மற்றையரோ:—ஜீவனே சாக்ஷி யென்பதுண்மையே, யாண்டும் நிறைந்த அவித்தையுபகித ரூபத்தானே அல்லவாம், ஒருவனுடைய அந்தக்கரணுதிகளும், மற்றையனுக்குத் தனதந்தக்கரணத்தை யிலக்கும் சாக்ஷி சம்பந்தஞ் சமமாதலினுனே காட்சிப்படவேண்டுதலின், அந்தக்கரணபேதத்தானே பிரமாதாக்கள் வேறுபடுதலின் அதனடைவு வாராதென்னற்க ; சாக்ஷிபாசியங்களாகிய அந்தக்கரணம் முதலியவற்றில் யாண்டுமே சாக்ஷியபேதத்தோடு பிரமாதாக்களின் வேற்றுமை சாதகமா

காதாம்; ஆகையால் அந்தக்கரண உபாதியைக்கொண்டே ஜீவன் சாக்ஷியாவன். இவ்வாறாகவே புருடன்றோறும் சாக்ஷி பேதத்தால் மற்றையனது அந்தக்கரணாதிகள், வேறொருவனுடைய சாக்ஷியின் சம்பந்தமின்மையினாலேனும் வேறொருவனுக்குத் தகுதியின்மையைக் கற்பித்தலினாலேனும், விளங்காமை பொருந்தும். துயிலினும் சூக்குமவடிவமாக அந்தக்கரணமிருத்தலினானே அதனை யுபாதியாகவுடைய சாக்ஷி அக்காலும் உளதேயாம். அந்தக்கரண உபகிதன் பிரமாதாவாதலின் அவனுக்குச் சாக்ஷித்தன்மையின்றாம், துயிலில் பிரமாதாவின்றேனும் சாக்ஷியிருத்தலின் அவற்றின் பேதம் இன்றியமையாது இயம்பத்தக்கதாம் என்னற்க; விசேஷண உபாதிகளின் பேதமானது சித்தாந்த சம்மதமாதலின் அந்தக்கரண விசிஷ்டன் பிரமாதா அதனுபகிதம் சாக்ஷியென வேற்றுமை கூடலின் எனக் கூறுநிற்பர்.

## 15-வது சாக்ஷியை யஞ்ஞானம் மறையாமை.

அற்றேல் கூறிய வடிவதாய சாக்ஷி, சைதன்யமாத்திரத்தை மறைக்கும் அஞ்ஞானத்தானே மறைபடல் விடுபடாமையின் யாங்ஙனம் மறைப்புற்றவதனானே அவித்தை யகங்காராதிகளின் விளக்கம் எனின்? இராகுவைப் போல அவித்தையானது தன்னால் மறைக்கப்பெற்ற பிரகாசத்தாற் பிரகாசிக்கப் பெறுவதா மென்பர் சிலர்.

உண்மையாயோ, அவித்தை யந்தக்கரணம் அதன் றருமாதிகளை யொளிர்விக்கும் சாக்ஷி சைதன்யத்தை விடுத்தே அஞ்ஞானம் சைதன்யத்தை மறைக்கும் என அனுபவத்தை யனுசரித்துக் கற்பித்தலின் யாதொரு கோதுமில்லை. இதனானே யெக்காலும் அவற்றிற்கு மறைபடாத பிரகாச சம்பந்த

த்தால் அஞ்ஞான விபரீத ஞானசம்சய அகோசரத் தன்மை யுங் கூடும். சாக்ஷிசைதன்யம் மறைபடாமையின் அதன் சொரூபமாயிராநின்ற ஆனந்தத்தின் பிரகாச அடைவுமாமெனின்? அற்றன்றும், இஷ்டமேயாதலின் ஆனந்தவடிவப் பிரகாசப் பிரயுக்த ஆன்மாவின்பால் நிருபாதிகப் பிரேமையானது காணப்படுதலினானும், "பரமப்பிரேமைக்கு இடமாந்தகைமையில க்கணம் வாய்ந்த இன்பமிலங்குகின்றதேயாம்" என்னும் விவரணத்தானு மென்க.

## 16-வது சாக்ஷியானந்தம் மறைபடாமை.

இஃதாகுக, இப்போதும் ஆனந்தமொளிருமாயின் முக்தி சமுசாரங்கள் சமமேயாமென்னும் வழக்காம். அற்றேல், கற்பிதபேதத்தோடு கூடிய சாக்ஷியானந்தம் ஒளிருமாயினும் அநவச்சின்னமாய் மறைபட்டிருக்கும் பிரஹ்மானந்தம் சமுசாரதசையில் ஒளிராமையின் விசேஷமிருக்கின்றதாமெனின்? கூடாதாம், ஆனந்தத்தில் அநவச்சேத அங்கிசம் அபுருஷார்த்தமாதலின், ஆனந்த அபரோக்ஷமாத்திரம் இப்போது மிருத்தலின். அற்றேல், அவச்சின்னமாய சாக்ஷியானந்தம் சாதிசயமாம் சுழுப்திசாதாரணமாதலின்; மிகவெளிப்படையாகாமையின் அதனினும், விடயசம்பந்த ஆனந்தங்களில் அதிசய அனுபவமுண்மையின். அநவச்சின்னமாயபிரஹ்மானந்தமோநிரதிசயமாம். ஆனந்தவல்லியின்கண்ணே மானுஷ ஆனந்தாதியுத்தரோத்தரம் நூறுமடங்கு மேன்மையை இனிதுவருணித்தல் பிரஹ்மானந்தத்தில் முடிவுபேறடைதலின் எனின்? அற்றன்றும், சித்தாந்தத்தில் சாக்ஷியானந்த விடயானந்த பிரஹ்மானந்தங்கட் குண்மையாய் ஒருமைபிருத்தலின் மேற்கீழின்மையின். மானுஷ ஆனந்தாதிகட்கு மேலும் மேலும் மேன்மை

யைச்சுருதி கூறுகின்றதெனின்? சுருதிகூறவில்லையென யாவர்
தாம் கூறுகின்றார்கொல்! மற்றேர் அத்வைத வாதத்தில் அக்கூ
ற்றுக் கூடாததாமெனக் கூறப்பெறும். அற்றேல் ஒரே சூரியப்
பிரபைக்குக்கரதலவெண்மணியாடியாதி அபிவியஞ்சக விசே
ஷஉபாதியினுனே அபிவியக்தி தாரதம்மியம் காணப்படுகின்ற
மையின் ஆனந்தத்திற்கு ஒருமையிருப்பினும் ஆனந்தத்தை
யிலக்காநின்ற சுகவிருத்திபேத உபாதியினுனே அபிவியக்தி
தாரதம்மிய ரூபமாகிய மேன்மை தாழ்மையுடைமை பொருந்
தும் எனின்? பொருந்தாதாம், திருஷ்டாந்தம் பொருந்தாமை
யின்; யாண்டுஞ்செல்லும் சீலத்தையுடைத்தாகி ஆகாயத்தில்
கரதலாதிசம்பந்தமின்றி வெளியிலாது இலங்காநிற்கும் சூரிய
ப்பிரபை ஆழ்ந்ததலத்திற் செல்லும் ஜலம்போலக் கரதலத்த
டையானே செல்கை தடைப்படுங்கால் மிகுதிப்பான்மையின்
பேரொளியுடையதாம். ஒளிரும் ஆடிசம்பந்தத்தானே செ
ல்கை தடைப்படவே மிகுதிப்பான்மையானும் ஆடியின் ஒளி
யோடு விரவலானும் முன்னினும் மிக்கபேரொளியுடையதாம்
என்க. ஆண்டு இலக்குமுபாதியையுடைய இலைகளின் வரு
றத்தாழ்ச்சியின்றொடர்பானே திருஷ்டாந்தம் பொருந்தாமையி
ன்னே ககனத்தில் விரிந்த சூரியவொளிபோலும் சுகவச்சின்ன
ஆனந்தத்தின் வெளிப்பாடின்மை, கரதலாதியவச்சின்ன சூரி
யன் ஆலோகம்போலும் சுகவிருத்தியவச்சின்ன ஆனந்தத்தின்
மிக்க விளக்கம் ஆமெனை முத்தியினும் சமுசாரத்திற்கே அதுதி
ப்பாடடைதலினுனுமென்க.

இதனுனே சமுசாரதசையில் ஒளிர்வதாயினும் ஆனந்
தம், பொய்ஞ்ஞானம் அதன் சாமர்த்தியம் என்பவற்றானே
விகுதிப்தப்படுதலின், பெருங்காற்றால் வி[illegible]விக்கப்பட்ட வின
க்கின் ஒளிபோல வெளிப்பாடின்றி யொளிரும். முத்தியின்

கண்ணஃதின்மையின் உள்ளபடியே ஒளிரா நிற்குமென்பதும் நிராகரிக்கப்பட்டது. நிர்விசேஷமாகிய சொரூபானந்தம் ஒளிரவே ஆண்டு விக்ஷேபதோஷத்தால் ஒளிராத முக்திதசையிலொளிரு மதிசயஞ் சம்பவியாமையின். ஆகையால் சாக்ஷியானந்தம் மறைபடாதென்னுங் கற்பனை பொருந்தாதாம்.

இதன்கண்ணே அத்வைதவித்யாசிரியர் கூறுவதாவது:- மிகவும் மேன்மைதங்கிய ஒரேவெண்வடிவம் வாய்ந்த பொருள் மலினதாரதம்மியமுற்ற அநேக ஆடிகளில் பிரதிபிம்பிக்குங்கால் உபாதியின் மலின தாரதம்மியத்தானே ஆண்டாண்டுப் பிரதிபிம்பத்தில் வெண்மையின்றாழ்மை தாரதம்மியமாக அத்தியசிக்கப்படும்; இவ்வாறுண்மையாய் நிரதிசயமாகிய ஒரு சொரூபானந்தத்திற்கே அந்தக்கரணத்திற் பிரதிபிம்பித்திருக்குந்தகைமையானே சாக்ஷியானந்தபாவத்திலும், முற்செய்த சுகிருத அடைவினதீனமான விஷயவிசேஷ சம்பந்தத்தாலுண்டாய சத்துவ மேன்மை தாழ்மை வடிவதாய்மைத் தாரதம்மியத்தோடு கூடிய சுகவடிவ அந்தக்கரணவிருத்தியில் பிரதிபிம்பித்திருக்குந்தன்மையானே விஷயானந்தபாவத்திலும், தமோகுணரூப உபாதிமலின தாரதம்மிய தோஷத்தால் தாழ்மை, தாரதம்மியத்தால் அத்தியசிக்கப்படும் என ச்சம்சாரதசையில் ஆனந்தம் ஒளிர்வதாயிருந்தபோதினும் அத்தியஸ்தமாய தாழ்மையேற்றத்தாழ்வால் அதிசயத்தோடு கூடியிருக்குந் தன்மையுண்மையின் அதிருப்தியாமென்றுணர்க. வித்தையுதயமாயின் எல்லாத் தாழ்மையத்தியாசங்களும் நீங்கலின் ஆரோபிக்கப்பட்ட அதிசயத்தோடுகூடியிருக்குந் தன்மையின்மையின் கிருதகிருத்தியத் தன்மையா

மென விசேடங்கூடலின் நிரூபாதிகப் பிரேமைக்கு விடயமா தலினுனே ஒளிராநின்ற சாக்ஷியானந்தம் மறைபடாததே யாகும்.

மற்றையரோ :—ஆனந்தமொளிர்ந்துகொண்டிருப்பதே யாயினும் தன்பாலின்றும் ஒளிர்வதில்லையென்னும் ஆவரண அனுபவமுண்மையின் மறைபட்டதேயாகும். ஒரே சான்றின்கண்ணும் அவித்யாகற்பிதரூபபேதஞ் சம்பவித்தலினுனே, சைதன்யவடிவத்தானே மறைபடாமையும் ஆனந்தவடிவத்தானே மறைபடுதலும் விரோதியாமையினுனும்; சொரூபப்பிரகாசத்திற்கு ஆவரணத்தை நீக்கவொண்ணுத்தன்மை யுண்மையின் ஒளிராநின்றதில் ஆவரணத்தின் விரோதமின்மையினுனும் "நீ கூறிய பொருளை யறிகின்றிலேன்" என ஒளிராநின்றதில் ஆவரணமே காணப்படுதலினுனும் என்றுணர்க. ஆண்டு மறைபடாத சாமானிய ஆகாரவளவானே விசேஷ ஆவரணமே அனுபவிக்கப்படும் என்னற்க; அன்னிய ஆவரணமானது அன்னியவளவானே இலங்குமாயின் அதிப்பிரசங்கம் வருதலின். சாமானிய விசேஷபாவம் நியாமகமாமாதலின் அதிப்பிரசங்கம் வாராதாமென்னற்க; வியாப்பிய வியாபகபாவத்தினும் வேருகிய சாமானியவிசேஷபாவ அபாவத்தால் 'வன்னியை யறிகின்றிலேன்' எனத் தூமத்தை மறைக்கும் அஞ்ஞான அனுபவப் பிரசங்கம் வருதலின். ஆகையால் எதனவச்சின்னமாக அஞ்ஞானம் ஒளிராநிற்குமோ அதுவே மறைபடும் என ஒளிராநின்றதன்கண்ணும் அஞ்ஞானம் பொருந்தும். அஞ்ஞானமும் சாக்ஷியங்கிசத்தை யொழித்துச் சைதன்யத்தை மறைப்பதேபோல, அவ்வச்சுகரூபவிருத்தி விழுங்கியவை விடுத்தே ஆனந்தத்தையும் மறைக்கும். அதுவே விஷயானந்தத்தினது ஆவரண நீக்கமாம்.

அவ்வாவரண நீக்கமும், விடியற்காலத்தில் வெளியிருள் விலகலே போலும் காரணவிசேஷமாக்கிய விருத்திவிசேஷவயத்தானே தரதமத்தன்மையாலாம். ஆகையால் சொரூபானந்த விஷயானந்தங்கட்கும், பரஸ்பரம் விஷயானந்தங்கட்கும் பேத சித்தியாமெனக் கூறுவர். எல்லாவகையானும் சாக்ஷிசைதன்யத்திற்கு மறைபடாத்தன்மை யுண்மையானே ஆவரண நீக்கப்பொருட்டு விருத்தியை யபேக்ஷிக்காமலே அதனானே அகங்காராதிகளின் விளக்கம் என்பது சமானமேயாம்.

## 17-வது அகங்காராதி யனுசந்தான மறைதல்.

அற்றேல், இவ்வாறுயின் அகங்காராதிகளின் ஸ்மிருதி யாங்ஙனமாம்? ஞானசூக்ஷ்ம அவஸ்தை வடிவமாகிய சமஸ்காரத்தினது ஞானம் உளதாகவே கூடாமையானே நித்தியமாகிய சாக்ஷியால் சமஸ்கார உற்பாதனஞ் சம்பவியாமையின்.

இதன்கட் சிலர் கூறுவதாவது :—அகங்காரத்தோடு சம்பந்தமுற்ற சாக்ஷியால் எப்போது மிலங்காநின்ற அகங்காரம் அவ்வக்கடாதி விஷயவிருத்தியாகாரமாகப் பரிணமித்த அகங்காராவச்சின்னசாக்ஷியினானும் இலக்கப்படும்; படவே அவ்விசிஷ்டசைதன்யம் அநித்தியமாதலின் சமஸ்கார உற்பாதனம் கடாதிவிடயத்திற்போலச் சம்பவிக்கும். தனதாகாரவிருத்தி யவச்சின்னசாக்ஷியினானே தன்னை விடயீகரிக்கும் சமஸ்கார உற்பாதனம் என்னும் நியமம் இல்லையாம். அவ்வாறுயின் விருத்தியைக் கோசரிக்கும் சமஸ்காரஞ் சம்பவியாமையானே விருத்தியின் ஸ்மரணம் உண்டாகாதென்னும் வழக்காம். வரம்பின்றியோடலடைவுறுதலினானே விருத்தியைக் கோசரிக்கும் வேறுவிருத்தி அனுவியவசாய நீக்கத்தானே நீக்கப்பட்டுண்மையின்; மற்றூ, எவ்விருத்தியவச்

சின்னசைதன்யத்தானே யாது பிரகாசிக்கப்படுமோ அவ்விரு த்தியானே அதனைக் கோசரிக்கும் சமஸ்கார உற்பாதனம் என்பதாகவே நியமமாகும். ஆகவே ஞானசுகமுதலிய அந்தக் கரண விருத்திகள், காய்ந்த இரும்புப் பிண்டத்தினின்றும் வெளிக்கிளம்பிய பொறிகள் தன் தன் அவச்சின்னவன்னியா னே போலும் தன் தன் அவச்சின்ன அநித்திய சாக்ஷியானே இலக்கப்பெறுகின்றனவென அவற்றின் கண்ணும் சமஸ்கார உற்பாதனம்பொருந்தமுடைத்தாம். "கடமென்னுமேகாகார ஞானமிருக்குமாயின் கடமே யொளிரும்; கடத்தினது அறி யப்பட்டதாந் தன்மை பிரஹ்மசைதன்யத்தானே பிரகாசிக் கப் பெறும்" எனக் கூடஸ்த தீபத்திற் கூறிய விஷய விசே ஷணமாகிய ஞானத்திற்கு விஷயாவச்சின்னப் பிரஹ்ம சை தன்யத்தின் விடயமாந்தன்மைப் பக்கத்திலும், தத்துவப் பிரதீபிகையிற் கூறிய ஞானமிச்சை முதலியவற்றிற்கு அன வச்சின்ன சுத்தசைதன்ய வடிவ நித்திய சாக்ஷியின் விடய மாந் தன்மைப் பக்கத்திலும், சைதன்யத்திற்குந் தன்னோடு சம்பந்தித்ததின் அபரோக்ஷ ரூபத்தன்மை புண்மையின் விருத்தி சம்சர்க்கம் இன்றியமையாது கூறத்தக்கதாம் என விருத்திசம்பந்த அநித்திய ரூபசுற்பாவைத்தான் அவற்றின் கண்ணே சமஸ்கார உற்பத்தியாவதில் யாதொரு கூடாமை யுமின்றாம்.

மற்றையரோ:—துயிலினும் அவித்தை முதலியவற்றின் அநுசந்தான சித்தியின் பொருட்டுக் கற்பிதமாகிய அகமா கார அவித்தையின் விருத்தியை அங்கீகரித்து அகம் பொரு ளில் சமஸ்காரத்தைச் சாற்றுகிறார். இப்பக்ஷத்தில் "இதுகா றும் இதை யான் கண்டுகொண்டேயிருந்தேன்" என அன்னிய ஞான தாரையின் காலத்திருக்கும் அகம்பொருளநுசந்தா

ணங்கூடாமையாமென்னற்க. அவச்சேதக பேதத்தானே சுக முந்துக்கமும் ஓரேகாலத்திலிருப்பதே போல இருவிருத்தி கள் ஓரேகாலத்திலிருப்பதற்கும் முரணின்மையினுனே அன் னிய ஞானதாரையின் காலத்திலும் அகமாகார அவித்தை யின் விருத்தி சந்தானஞ் சம்பவித்தலின்.

வேறு சிலரோ:—அகமாகார விருத்தி அந்தக்கரணவிரு த்தியேயாமன்றி உபாசஞதி விருத்தியொப்ப ஞானமல்ல வாம். சித்தமாய அதன் கரணத்தாலுண்டாகாமையின். ஆண் டு விழி முதலிய காட்சிப்பிரமாணம் சம்பவியாதாம், குறி முதலியவையும் சம்பவியாவாம். இலிங்காதியின் நினைவி லானுக்கும் அகங்காரானுபவங் காணப்படுதலின், மனங்கரண மென்பதுங்கூடாதாம்; அதனதுபானபூதமாயதற்கு யாண்டும் கரணத்வஞ்சித்தம் ஆகாமையின். ஆயின் அகம்பொருட் பிரத்திய பிஞ்ஞைஞானமும் உண்டாகாதாம் எனின்? அற் றன்றும், அஃதகமம்சத்தில் ஞானமாகாவிடினும் தத்தாம்சத் தில் ஸ்மிருதியின்கரணத்தன்மையானே சித்த சமஸ்கார ஜன் னியமாதலினுனே ஞானமாதலின் அங்கிச வேற்றுமையானே ஞானத்தில் பரோக்ஷத்வ அபரோக்ஷத்வமுளதாவதேபோலும் பிரமாத்தன்மையும் அப்பிரமாத்தன்மையும் உளதாவதே போலும் ஞானத்வ அஞ்ஞானத்வங்கட்கும் முரணின்மையின் என்பர்.

சிலரோ:—அகமாகாரமும் விருத்தி ஞானமேயாம் "யா னென்னை யறிகின்றேன்" என்னுமனுபவத்தான். கரணம் சம்பவிக்க வில்லையே யென்னற்க; அனுபவத்தையொட்டி உள்ளிந்திரியமாகிய மனத்தையே கரணமாகக் கற்பித்தலின் என்பர். இவ்வாறுகவே பாகியகோசர அபரோக்ஷ விருத்திகட்

கே ஆவரணத்தை யகற்றுந்தன்மை நியமமாகுமெனத் துணி யப்பெறும்.

## 18-வது காரண சகித அத்தியாச நிரூபணம்.

அற்றேல் இந்நியமும் பொருந்தாதாம், சுக்தி இரஜதஸ் தலத்தில் இதமாகார விருத்திக்கு அஞ்ஞானத்தை நீக்குந் தன்மையின்மையின்; அன்றுயினே, உபாதான மின்மையி ஞனே இரஜத உற்பத்தி கூடாமையின் எனின்? ஈண்டுக் கூறுவர்:—இதமாகார விருத்தியினுனே இதமம்சை அஞ் ஞான நிவிருத்தியான போதினும் சுக்தித்தன்மை முதலிய விசேஷ அம்சை அஞ்ஞானம் நீங்காமையானே அதுவே இரஜத உபாதானமாகும், சுக்தித் தன்மையை யறியாத போது இரஜத அத்தியாசமுண்டாதலும் அதை அறிந்த போது அதனபாவமுண்டாதலும் அனுபவிக்கப்படுதலின், அத்தியாச பாஷியப் பஞ்சபாதிகையின் விவரணத்தில் அனு பவிக்கப்பட்ட உடன்பாடெதிர் மறைகளையுடைய அஞ்ஞா னத்திற்கே இரஜதாதியத்தியாச உபாதானத்தன்மை கூறப் பட்டிருத்தலின், இதனுனே சுக்தியம்சம் அதிஷ்டானம், இதமம்சம் ஆதாரம் ஆம். விலாசத்தோடுகூடிய அஞ்ஞான த்திற்கு விஷயமாயது அதிஷ்டானமாம் அவ்வுருவமல்லாத தும் அவ்வுருவமாயாரோபிக்கப்பட்டுப் புத்தியின் கண்ணே யிலங்குவதா யாதாரமாமெனச் சங்க்ஷேபச் சாரீரகத்திலும் பிரித்துரைத்திருத்தலின்.

மற்றையரோ:—இது இரஜதமென இதமம்சை அபே தத்தன்மையானே தோற்றுநின்ற இரஜதத்திற்கு இதமம்சை அஞ்ஞானமே யுபாதானமாம். இதமாகார விருத்தியினுனே ஆவரண சக்திமாத்திரம் நீங்கியபோதினும் விக்ஷேப சக்தி

யோடுகூடத் தொடர்ந்து நிற்றலின் அதற்குபாதானத் தன்மையின் அசம்பவமின்றாம். நீரிற்பிரதிபிம்பித்ததரு தலை கீழாமத்தியாசத்திலும், ஜீவன் முக்தி தொடர்தலினானே பிரபஞ்ச அத்தியாசத்திலும், முற்றிலுமே அதிஷ்டான சாக்ஷாத்காரத்தின் பின் ஆவரணம் நீங்கியபோதினும் விக்ஷேபசக்தியோடு கூடிய அஞ்ஞானமாத்திரத்திற்குபாதானத்தன்மை பொருந்துதலின் என்பர்.

கவிதார்க்கிக சக்கிரவர்த்தி நாசிங்கபட்ட உபாத்தியாயரோ:—இஃதிரஜத மென்னும் மயல்வடிவ விருத்திக்கு வேறாக இரஜதமுநிப்பதன் முன் இதமாகார விருத்தியேயில்லையென அதன் அஞ்ஞான நிவர்த்தகத் தன்மை சத்தசத்பாவ விசாரம் பற்றுக்கோடற்றதாமென எண்ணுகின்றனர். அங்ஙனமன்றோ:— முதலில் மயல்வடிவ விருத்திக்கு வேறாக இதமாகார விருத்தி அனுபவசித்தமேயன்றாம், ஞானவிருமையனுபவிக்கப்படாமையின், அதிஷ்டான சாமாந்யஞானம் அத்தியாசகாரணமெனக் காரியத்தாற் கற்பிக்கப்படுமென்பதுமின்றாம். அஃததனது காரணமென்பதிற் பிரமாணமின்மையின். அதிஷ்டானசம்பந்தமிலதாகவேஇரஜதாதிகளின் உற்பத்தியிலதாதலே ஆண்டுப்பிரமாணமாம் என்னற்க; அதனால் துஷ்ட இந்திரிய சம்யோகத்திற்கே அத்தியாச காரணத்தன்மையடைவுண்மையின். சம்பந்தமானது யாண்டும் மயலை வியாபிப்பதன்றாம், அதிஷ்டானவிளக்கமோ தானேயொளிராநின்ற பிரத்தியக்கான்மாவின்கண்ணே அகங்கார அத்தியாசத்தையும் வியாபிக்கின்றது என்னற்க; அதற்கும் கடாதியத்தியாச அவ்யாபித்தன்மை யுண்மையின். கடாதிப்பிரத்தியக்ஷத்தின் முன்பு அதனதிஷ்டான பூதரூபமற்ற பிரஹ்ம

மாத்திரத்தைக் கோசரிக்கும் சாக்ஷுஷ விருத்தியசம்பவமாதலின் சொரூபப் பிரகாசம் மறைபட்டிருத்தலின். மறைபட்ட மறைபடாததெனப் பொதுவாக அதிஷ்டானப் பிரகாசமாத்திரத்திற்கு அத்யாசகாரணத்தன்மை யுளதாயபோது சுக்தியின் இதமம்சிச சம்பந்தத்தின் முன்னரும், அதனவச்சின்ன சைதன்யரூபப் பிரகாச மறைப்பிருத்தலினுனே அக்காலும் அத்தியாச அடைவுறுதலின். அத்தியாச சாமானியத்தில் அதிஷ்டானப் பிரகாச சாமானியம் ஹேதுவாம், பிராதிபாசிக அத்தியாசத்தில் வெளிப்பட்ட அதிஷ்டானப் பிரகாசம் ஹேதுவாமென அதிப்பிரசங்க மின்றும். சாமானியத்திற் சாமானியத்திற்கும் விசேஷத்தில் விசேஷத்திற்கும் ஹேதுத்தன்மை யுசிதமாதலின் என்னற்க; இவ்வாறாயினும் பிராதிபாசிக சங்கு மஞ்சள் கூபஜல நீலத்தகைமை அத்தியாசத்தை வியாபியாமையின்; ரூபத்தை விடயீகரியாத சாக்ஷுஷப் பிரத்யயங் கூடாமையானே அக்கால் சங்கு முதலியவற்றி லிருக்கும் வெண்மை தோற்றாமையானே அத்தியாசத்தின் முன் சங்கு முதலிய அதிஷ்டானகோசர விருத்தி யசம்பவமாதலின். பிராதிபாசிகங்களினுள்ளும் இராஜதாத்தியாசமாத்திரத்தில் கூறிய விசேஷ ஹேதுவுளதாருகவென உரையாடற்க; இவ்வாறாகவே, சம்பந்திப்பதின் முன்னர் மஞ்சட் சங்கு முதலிய அத்தியாசமுண்டாகாம லிருக்கும்பொருட்டு அதனத்தியாசத்தில் துஷ்டேந்திரிய சம்பந்தம் காரணமென இன்றியமையாது இயம்பவேண்டுமாதலின் அதும்மேக பொதுவாகப் பிராதிபாசிக அத்தியாச மாத்திரத்தில் எளிதிற் கொடலானே காரணத்தன்மை சித்தியாகவே அதனுனே இராஜதாத்தியாசம் ஒரொருகாலுளதாகும் நிர்வாகமாதலின் அதிஷ்டானப் பிரகாசத்திற்குச் சாமானியமாகவாதல் விசேஷ

மாகவாதல் அத்தியாச காரணத்தன்மை துணியப்பெறுமை யின். அற்றேல், சாதிருசியத்தை யவாவாத வேறத்தியாசத்தில் அகாரணத் தன்மை யிருந்தபோதினும் அதனை யவாவிய இரஜதாதியத்தியாசத்தில் இரஜதாதிசாதிருசியபூத ரூபவிசேஷாதி விசிஷ்ட தருமிஞானவடிவ அதிஷ்டான சாமானிய ஞானம் காரணமெனா இன்றியமையாது கூறத்தக்கதாம். துஷ்ட இந்திரிய சம்பந்த மாத்திரத்தைக் காரணமெனில் இப்பியைப் போலக் கரியின் கண்ணும் இரஜ தாத்தியாச முண்டாதல் வேண்டும். சாதிருசியமும் விஷய தோஷத் தன்மையானே காரணமெனக் கூறற்க; சதிருசமில்லாததன்கண்ணும் சாதிருசியமையலுண்டாகவே அத்தியாச முண்டாதலின், கடலின் நீர்ப்பிரவாகத்தில் தூரத்தில் நீலசிலாதலத் தன்மை முதலிய ஆரோபங் காண்டலின். அவ்வேதுவிற்கே அவ்வேதுத் தன்மையுளதாகுகவென்னும் நியாயத்தானே சாதிருசிய ஞானசாமக்கிரியே அத்தியாச காரணமாகுகவென்பதே பொருத்தமுடைத்தா மென்னற்க; ஞான சாமக்கிரியினானே அர்த்தகாரணத்தன்மை யாண்டுங் காணாமையானும், அதனினும் சாதிருசிய ஞானத்திற்கே எளிதிற் கோடுந் தன்மையுண்மையினானும். தானாகவே வெண்மை யாயினும் நிர்மலப் பொற்பாத்திர விசேடத்திருந்த போதினும், நிர்மல நீரிலேயே நீலாத்தியாசமாம் முத்திலாகாதாம், என்னும் விவஸ்தையே போல வஸ்துவி னியற்கையானே சுக்தியின் கண்ணே இரஜதாத்தியாசமாம் கரி முதலியவற்றில் ஆகாதாமென்னும் விவஸ்தையாம், சாதிருசிய ஞானாபேக்ஷையாலாகாதாம் என்னற்க; சயமாகவே ஆடைத்துண்டில் தாமரை மலரின்தன்மை யத்தியாச மிலாதபோதினும் ஆண்டேகத்திரித்தன் முதலானதால் ஆக்கப்பெற்றஅதனுகா

ரத்தில் அதனத்தியாசங் காணப்படுதலின் அதனத்தியாசத்திற்கு வஸ்துவினியற்கையை யங்கீகரிக்காமலே சாதிருசிய ஞானபாவாபாவ அநுவிதாயித்தன்மை நிச்சயமாதலின்; அன்றாயினோ மற்றைய காலத்தும் ஆண்டு அதனத்தியாச வழக்குண்டாதலின்? கூறப்படும்:— சாதிருசிய ஞானத்திற்கு அத்தியாச காரணத்வ வாதத்திலும் விசேஷ தரிசனத்தாற் றடுக்கப்படுவனவாய இரஜதாதியத்தியாசங்களிலே அதற்குக் காரணத் தன்மையாம் எனக் கழறத்தக்கதாம், அதனாற்றடைப்படாத மஞ்சட் சங்கு முதலிய அத்தியாசங்களில் ஆமெனலாகாதாம் அசம்பவமாதலின். விசேஷ தரிசனத்தாற் றடைப்படுவனவற்றுளோ தடையாய ஞான சாமக்கிரிக்குத் தடைத்தன்மை நியமத்தால் விசேஷ தரிசன சாமக்கிரியும் இன்றியமையாது தடையெனச் சாற்றவேண்டும், என்பதாக அதனானே எல்லா விவர்த்தங்களுங் கூடலின் சாதிருசிய ஞானம் காரணமென்னுங் கற்பனையா லாவதென்னே? அங்ஙனமன்றே:—காரி முதலியவற்றில் விழுதியொற்றுமையுறவே அதன்கண் ணிருக்கும் நீலாதிரூப விசேஷதரிசன சாமக்கிரி யிருத்தலின் இரஜத அத்தியாசமின்றாம்; இப்பி முதலியவற்றிலும் நீலபாகாதியை வியாபிக்கும் விழுதியொற்றுமையானே அஃதிருத்தலின் அதனத்தியாசம் ஆகாதாம். சதிருசபாகமாத்திரத் தொற்றுமையாயில் அஃதின்மையின் அத்தியாசமாம். அப்போதும், இப்பித்தன்மை வடிவை விசேஷ தரிசன சாமக்கிரி யிருத்தலின் அத்தியாசம் ஆகாதென்னும் வழக்காமே யெனின்? அற்றன்றாம், அத்தியாச சமயத்தில் இப்பித்தன்மைத் தரிசன மின்மையானே அதன் முன்பு அதன் சாமக்கிரியபாவத்தை நீயுங் கூறவேண்டி யிருத்தலின், சாதிருசிய ஞான ரூப அத்தியாச காரணதோஷத்தானே

தடைப்படுதலின் அக்கால் இப்பித்தன்மைத் தரிசன சாமக்கிரியின்மை யங்கீகாரமெமக்காம்; உமக்கு அவ்வாறங்கீகரிக்கினோ சுற்றிச் சுற்றிச் சுங்கச் சாவடியில் விடிந்த கதையாகுமெனின்? அற்றன்றும், சமீபத்திற் சென்றபின்னர் இராஜத சாதிருசிய ரூப மினுமினுப்பிலங்கியபோதே இப்பித்தன்மை இலங்கலின் அதற்கு அதன் சாமக்கிரித் தடைத்தன்மை துணியப்பெறுதவழி தூரத்தன்மை முதலிய தோஷத்தானே தடையாலேனும், வியஞ்சகமாகிய நீல பிற்பாக முதலியவற்றைக்கவர்வதின்மையானேனும், அதன் சாமக்கிரி யபாவங் கூறவேண்டியிருத்தலின். இவ்வாறே கடல் நீரில் நியதமாக நீலரூபாத்தியாசப்பிரயோஜக தோஷத்தாலும் தூரத்தில் நீரத்தன்மையை யிலக்கும் அலைமுதலியவற்றைக் கவருவது நேராமையினுனும், வெண்மையாய நீர்ராசித்தன்மை முதலிய விசேஷதரிசன சாமக்கிரியின்மையின் நீலசிலாதலத்தன்மை முதலிய அத்தியாசமாம். விஸ்தாரமாய ஆடையில் விஸ்தாரரூப விசேஷதரிசன சாமக்கிரியிருத்தலின் தாமரைமலரினத்தியாசமில்லை. கத்திரித்தன் முதலியவற்றோடுகூடிய அதனுகாரத்தில் அஃதின்மையின் அதனத்தியாசமாம். அற்றேல் இங்ஙனம் கையாற்றெட்ட இரும்புத்துண்டில் அதனது நீலரூப விசேஷதரிசன சாமக்கிரியின்மையின் இராஜதாத்தி யாசமேன் உண்டாகாது சாதிருசிய ஞானத்தையவாவாமையின் எனின்? உண்டாகவேயுண்டாம்; ஆனால் தாமிராதியை நீக்கும் விசேஷதரிசன சாமக்கிரியின்மையின் அதனத்யாசமுமாம், சிலபால் அநேக அத்தியாசத்தில் சமுசயவிஷயமாம்; சிலபாலோ வெள்ளி மிருத்துள்ள பொக்கிஷத்தில் இராஜத அத்தியாசமேயாம். சிலபால் சாதிருசியஞானமிருந்தபோதினும் இப்பிமுதலியவற்றில் ஒருகால் காணதோஷாதியபாவத்தானே அத்தி

யாசமுண்டாகாததேபோல அத்தியாச முண்டாகாவிடினும் ஆனியில்லை. ஆகையாற் காரியத்தாற் கற்பிக்கத் தகா தாமிதமாகார விருத்தியென்க. தடைப்படுத்தப்படாத இதமர்த்த சம்பந்த காரணத்தாற் கற்பிக்கப்படுவதுமன்றாம். அதனானே இருக்கப்பட்டதேயாய இதம் விருத்திக்குத், துஷ்ட இந்திரிய சம்பந்தத்தாற் காரிய அபிமுகமுற்ற அவித்தையின் பரிணாமமாகிய தனது சமகால இரஜதவிஷயத்வம் எம்மனோ ராலங்கீகரிக்கப்பட்டிருத்தலின். ஆண்டும், ஞானசமானகாலத்திலுண்டாகாநின்ற தோற்றமாத்திரமாய்த் திரிந்து திகழும் வெள்ளியில் அதனினும் முன் சம்பந்தமின்றேனும் அதனது தாதாத்மிய ஆசிரயமாகிய இதமர்த்த சம்பந்தத்தானே அதற்கும் விழியாற் கவரப்படுந் தன்மை பொருந்தலின். விழியால் வெள்ளியைக் காண்கின்றேன் எனப் பிராதிபாசிக இரஜதத்திற்குத் தனது சம்பந்தமின்றேனும் விழியாற் கவரப்பெறல் அனுபவிக்கப்படுதலின். தனது சம்பந்தமின்மையினானே பாதகமாதலின் அது விழியாற் கவரற்பாலதாகாதாம். இதம் விருத்திசமகாலமாக துஷ்ட இந்திரிய சம்யோக ஜன்னியமுமாகாதாம். ஞானகாரணமாகிய இந்திரிய சம்யோகம் அர்த்தகாரணமாதல் சித்தமாயின்மையின்; மற்றேறு, இதம் விருத்தியின் பின்னுண்டாகாநின்ற அதன் ஜன்னியம் அதனால் வெளிப்பட்ட சாக்ஷியில் அத்தியாசமாதலின் சாக்ஷிபாசியமாம். சாக்ஷுஷமென்னும் அனுபவமோ தன்னை விளக்கும் சைதன்ய அபிவியஞ்சகமாகிய இதம் விருத்தியை யுண்டாக்குந் தன்மையானே பரம்பரையால் சக்ஷுவின் அபேக்ஷாமாத்திரத்தானே யாமென இயம்பற்பாற்றாம். இவ்வாறாகவே மந்தசட்சங்குமையில் சக்ஷுவின் அவாவின்மை வழக்காதலின். ஆண்டுச் சங்குக்சவர்ச்சியில் சக்ஷுவினவாவின்றாமன்றே; ரூபமிலாது கே

வல சங்குவிழியாற் கவரக்கூடாமையின், மஞ்சட்டன்மைக் கவர்ச்சியினுமின்றாம்; ஆரோப்பியத்திற்கு இந்திரியத்தாற் கவரப்படுந் தகைமை யங்கீகரியாமையின். மஞ்சட்டன்மை யானது சொரூபமாக அத்தியசிக்கப்படுவதின்றாம்; மற்று விழியிலிருப்பதா யனுபவிக்கப்பட்ட பித்தமஞ்சட் டன்மை யின் சம்சர்க்கமாத்திரம் சங்கின்கண் ணத்தியசிக்கப்படுமென மஞ்சட்டன்மையின் அனுபவப் பொருட்டே சக்ஷுவினபே க்ஷை யென்னறக; அவ்வாறாயின் சங்கு அதன் சம்பந்தங்கள் காட்சிப்படாவென்னும் வழக்காம். நயனத்தலத்திருக்கும் பித்த மஞ்சட்டான்மை யாகார விருத்தியா லிலக்கப்பட்ட சாக்ஷி யின் சம்பந்தமில்லாததால் அவை அதன் பாசியங்கள் ஆகா வாதலினானும், மஞ்சட் டான்மையோடு சம்பந்தித்த சங்க கோசரமேயாய விருத்தியை அங்கீகரியாமையானும் என்க. நயனதேயத்திலிருக்கும் பித்தமஞ்சட்டன்மையின் சம்சர்க் காத்தியாசம் தோஷத்தாற் சங்கிலங்கீகரிப்பதின்றாம்; மற் றோ, நயனரஸ்மிகளோடுகூட வெளிப்போந்த விஷய வியா பியாய அதற்கு ஆண்டுச் சம்சர்க்க அத்தியாசம் சிவப்பு வத் திரத்தில் குசும்பாவின் இரக்த வர்ணத்தின் சம்சர்க்க அத்தி யாசம் சம்பவிப்பதே போற் சம்பவிக்கும். அதனாகார விருத் தியபிவியக்தியினானே சாக்ஷியின் சம்சர்க்கமா மென்னறக, அவ்வண்ணமாயின் பொன் பூசியதுபோன்ற பித்தத்தோடு கூடிய விழியனால் பார்க்கப்பட்ட சங்கில் அஃதில்லாதவர்கட் கும் மஞ்சட்டன்மை ஞானவழக்காதலின் சமீபத்தில் கிரகித் ததின் கண்ணே தூரதூரத்திலும் கவர்தல் கூடும், ஆகாயத் தின்மேல் கிளப்பா நின்ற பறவையைப் பார்த்ததலேபோல மற்றையர்கட்குச் சமீபத்தில் கிரகணமில்லையாமென்னறக; மற் றையர்களாகிய அவன் கண்ணின் சமீபத்தில்வைத்த கண்

ணையுடையவர்கட்கு பஞ்சட்டன்மைச்சாமீப்பிய இருப்பினு
னே அதன் கவர்ச்சி நீக்க முடியாமையின். இவ்வாறாயினும்
மிகவும் வெண்மையாமணன் மயமாகிய தலத்திலோடும்
நிர்ம்மலநதியின் ஜலத்தில் நீலாத்தியாசத்திலும் சகனத்தில்
நீலாத்தியாசத்திலும், இரக்தவத்திரத்தில் இரவில் நிலவில்
நீலவத்தியாசத்திலும் அனுபவிக்கப்படும் ஆரோபத்திற்குக்
கூற முடியாமையானே ஆண்டு நீலத்தோடு சம்பந்தித்த அதிஷ்
டான கோசரசாக்ஷுஷ விருத்தியை யங்கீகரியா தொழியில்
சக்ஷுவின்உபயோகமின்மையை நீக்கமுடியாமையானும் என்
க. காரத்தைச் சுவைத்தறியாத பாலனுக்கு இனிப்பில் காரத்
தின் தோற்றம் முற்பிறப்பின் அனுபவத்தாலுண்டாய சமஸ்
கார ஹேதுவை யுடையதாகும் எனப் பிரதிபாதிக்கும் பஞ்ச
பாதிகைக் கிரந்தத்தானே சொரூபமாகவே அத்தியசிக்கப்
பட்டதேயாய காரத்திற்கு இந்திரிய விஷயத்வம் வெளியா
க்கப்பட்டிருத்தலினாலும்; மாறாயினோ ஆண்டு இரசனையின்
வியாபாரத்தின் விழைவு பொருந்தாமையின் ஆகையால்
உதாகரணமாகக் காட்டப்பட்ட நீல அத்தியாசஸ்தலங்களில்
அதிஷ்டான சம்பந்தத்தானே அதனைக் கோசரிக்கும் சாக்ஷு
ஷ விருத்தி சமகாலத்திலுதிக்கு மத்தியாசம் அவ்விருத்திக்கு
விஷயமாமென அதற்குச் சக்ஷுஷத்தன்மை யங்கீகரிக்கத்தக்
கதாம். ரூபமின்றிக் கேவல அதிஷ்டான கோசர விருத்திய
பாவமாயினோ விஷய சைதன்ய அபிவியக்தியின்மையானே
நீர் அதில் அத்தியசித்த நீல முதலியவற்றிற்குச் சைதன்ய
பாசியத்வங் கூடாமையின். காரரச அத்தியாசஸ்தலத்திலோ
அதிஷ்டான அத்தியாசங்கட்கு ஒரு பொறியாற் கவரப்படுந்
தன்மை யின்மையின் துவக்கிந்திரியஜன்னிய அதிஷ்டான
கோசரவிருத்தியினானே அதனவச்சின்ன சைதன்ய அபிவிய

க்தியாய வழி பித்தத்தோடுகூடிய இரசனைச் சம்பந்தத்தானே ஆண்டுக் காரரச அத்தியாசமாம் அம்மாத்திர விஷய இரசன விருத்தியும் சமகாலத்திலுண்டாகின்றது. தனக்கார ரசத்திற்கு இராசனத் தன்மையை யங்கீகரிக்கவேண்டும். துவக்கிந்திரிய ஜன்னிய அதிஷ்டான கோசர விருத்தியபிவியக்த சைதன்யத்தால் விளக்கப்படும் கார ரசத்தில் பாரம்பரையானும் இரசனையி னுபயோக மின்மையானே ஆண்டெவ்விதத்தானேனும் வேறுவகையாக இராசனத் தன்மையனுபவத்தைக்காட்டமுடியாமையின் அவ்வாறே இரஜதத்திற்கும் சாக்ஷுஷத்வம் பொருந்து கின்றமையின் காண்கின்றேனென்னு மனுபவம் பாதிக்கத் தக்கதன்றாம். சம்பந்தப்படாத ரஜதத்திற்குச் சாக்ஷுஷத்வங்கூறின்காட்சிமாத்திரத்தில் விஷயேந்திரிய சந்நிகர்ஷம் காரணம், பொருட்காட்சியில்அதன்கையோகம் காரணம், இரஜதக்காட்சியில்இரஜதசையோகங் காரணம் எனக்கவர்ந்த அநேககாரியகாரணபாவ நியமம்பங்கமாமெனவியம்பற்க. சம்யோகாதியுட் டொடர்ந்து நிற்கும் ஒரு சந்நிகர்ஷத்தன்மையின் மையானே முதல் நியமம் துணியப் பெறுமையின். 2-வது நியமம் நையாயிக முறையாய்த் தமத்திற்போலச் சம்யோக அயோக்கியமாய சில அத்திரவியத்திலும் திரவியத் தன்மையத்தியாசம் சம்பவித்தலின் விவகார திருஷ்டியினானே எத்திரவியத்தன்மையினதிகாரணமாமோ அதன் விஷயத்தன்மையானே பிராதிபாசிக இரஜதத்தில் அதிஷ்டானத்திலிருக்கும் திரவியத்தன்மைக்கே இதந்தைபோல அத்தியாச மிருத்தலின் அதன்றேற்றத்தை யங்கீகரித்தலினானும்2-வது நியமம் முரணாமையின்.2-வது நியமவடிவ சாமானியகாரிய காரணபாவத்தினும் வேறாக விசேடித்துக் காரியகாரண பாவகற்பனை கௌரவத்தாற்றள்ளப்படுதலினானே 3-வது நியமந்துணியப்

பெருமையின். "எதன் சாமானியத்திலெதன் சாமானிய மேதுவோ அதன் விசேஷத்தில் அதன் விசேஷ மேதுவாம்" என்னும் நியாயத்திற்கும், யாண்டுப் பீஜாங்குராதிகளில் சாமானியகாரிய காரணபாவமாத்திர அங்கீகாரத்தில் பீஜாந்தரத்தினின்றும் அங்குராந்தரம் உண்டாதன் முதலியவழக்காமோ; அதன் விஷயத் தன்மையானே, அதனுனே ஆட்டின்றுடைத் தனமன்னியதேபோல விசேஷகாரியகாரண பாவந்துணியப்பெருமையின். ஈண்டும் பொருட்காட்சியில் பொருட்சையோகம் காரணமெனச் சாமானிய நியமமாத்திர மங்கீகரிக்கின் அன்னியசையோகத்தானே அன்னிய திரவியக்காட்சியடைவாதலின் என அதிப்பிரசங்கம் உளதாமெண உரையாடற்க; அவ்வப்பொருட் காட்சியில் அவ்வப்பொருட் சையோகம் காரணமென நியமமங்கீகரித்தலின், மாருயினே, 3-வது நியமத்திலும் மிகு வழக்குண்டாதலை நீக்கமுடியாமையின். ஆகையால் சித்தித்த நியமபங்கப் பிரசங்கமின்றாகும். மேலும், ஈண்டு துணியப்பெற்ற நியமமழிவுறினும் கோதில்லை. "இவ்வெள்ளியைக் காண்கின்றேன், நீலஜலத்தைக் காண்கின்றேன்" என்பதாதி வேருோற்றுற் பெறப்படாத அனுபவத்திற்கு, காட்சிமாத்திரத்தில் விஷயசம்பந்தம் காரணமென்பதாதி முதலிற் கவரப்பட்ட நியமங்கட்கும் வியாவகாரிகவிஷயத்தில் சுருக்குங் கற்பனை செய்யாமற் கூறல் கூடாமையின். இவ்வாறுயின் பிரமையின் மாட்டுச்சந்நிகர்ஷம் காரணம் என்னற்க; மயலென்பதாகவும் சங்கோசகற்பனை சம்பவித்தலின் சம்பந்தியாததேயாய தேசாந்தரத்திருக்கும் இரஜதத்திற்கு ஈண்டு ஆரோப அடைவாமெண அன்யதாக்கியாதிவாதம் விரிக்கப்பட்டதென்பது மின்றும். அபிவியக்தமாய சைதன்ய தாதாத்மியசூனிய தேசாந்தரத்திருக்கும் இரஜதந்

திற்கு அபரோக்ஷத் தன்மை கூடாமையினுனும், கிபாதிபா தங்கூடாமையாதிகளினுனே மயல் விடயத்திற்கு அநிர்வச னீயத்தன்மைச் சித்தியினுனும் என்க. அதிஷ்டான சம்யோ கமாத்திரத்தானே பிராதிபாசிகத்திற்கு இந்திரியத்திற்கு விடயமாந்தன்மையையங்கீகரிக்கவேசுக்திரஜத அத்தியாசசம யத்தில் ஆண்டேகாலாந்தரத்தில் அத்தியசிக்கத் தக்கதாய ஈய த்திற்கும் சாக்ஷுஷத்தன்மை ஏனுண்டாகமாட்டாது எனக் கூறற்க; இரஜத அத்தியாச சமயத்தில் ஈயவெள்ளிப் பொது வாக மினுமினுப்புக் காட்சி சமமாயினும் எதனுல் இராகாதி வடிவ புருஷதோஷாபாவத்தால் ஆண்டு அக்கால் ஈய அத்தி யாசம் உண்டாகாதோ அதனுனே என்னுல் அதன் விஷய விருத்தி அனுதயத்தையும் அங்கீகரித்திருத்தலின், ; ஆகை யான் இதமங்கிச அபேதவெள்ளிகோசர ஒரே விருத்திபொறி யாலுண்டாக்கப்படுவதாகும். ஆதலினுனே முன்னித மாகார விருத்தி இல்லையென ஈண்டு இவ்வஞ் ஞான நிவர்த்தகத்தன் மைச் சத்தசத்பாவ சிந்தைசெய்யற்பாலதல்லவாகும்.

மற்றையரோ:— அதிஷ்டான ஞானம் அத்தியாச காரணமென இத்மாகார விருத்தியையடைந்து அதனுலிலக் கப்பட்ட சாக்ஷியினுனே அதனத்யஸ்தமாய இரஜதவிளக்கஞ் சம்பவித்தலின், அதனையிலக்கும் சாக்ஷியபிவியஞ்சகமாகிய அவ்விதம் விருத்தியினுனே இரஜதவிஷய சமஸ்கார உற்பா தனம் பொருந்தலினுனே இரஜதாகார விருத்திவீணும் என எண்ணுகின்றனர். ஞானமிரண்டென்னும் பக்ஷத்தில் இது வென்னுமொருவிருத்தி அத்தியாச காரண பூதமாம். இது வெள்ளியென்னும் 2-வது விருத்தி அத்தியஸ்தமாகிய இரஜத விஷயமாம். இதமங்கிசத்தை விடுத்து அத்தியஸ்த மாத்தி ரந்தைக் கோசரிப்பதன்றதல்லவாம். ‘இவ்வெள்ளியை புணர்

கின்றேன்' என அதற்கு இதம்பொருட் டாதாத்மியமுற்ற வெள்ளி விஷயத்வ அனுபவத்தால் என்பர் சிலர்.

சிலரோ:—இதமங்கிசாவச் சின்னசை தன்யத்திலிருக்கும் அவித்தை இரஜதாகாரமாய்ப் பரிணமிக்கும் இங்ஙனம், இதமங்கிச விஷயவிருத்தி ஞானவச்சின்ன சைதன்யத்திலிருக்கும் அவித்தை இரஜதஞான ஆபாச ஆகாரமாய்ப் பரிணமிக்கும். இதமங்சிச விருத்தியைப்போல அத்தியஸ்தமாக இரஜதஞானமிலதாம், ஆகவே இரஜதத்திற்கு அதிஷ்டானத்திருக்கும் இதந்தைச்சம்சர்க்கபானம்போல அதன் ஞானத்திற்கும் அதிஷ்டானத்திருக்கும் இதந்தை விஷயத்வ சம்சர்க்கபானம் பொருந்தலின். அதற்கும் இதம் விஷயத்தன்மையை அங்கீகரிக்கத்தக்கதன்றும். இரஜதத்தைப்போல அத்தியஸ்தமாய இரஜத இதந்தைச் சம்சர்க்கத்திற்கு இரஜதஞான கோசரத் தன்மையுண்மையின் அதன் பிரதியோகியாய இதந்தைக்கும் அதன் விஷயத்தன்மை கூறவேண்டுமெனக் கூறற்க; தனது தாதாத்மிய ஆசிரயத்திற்கு இதந்தை விஷயத்தன்மை யுண்மையானே அதற்கு அதன் சம்சர்க்கவிஷயத் தன்மையேல் மிகுவழக்காகாமையின். அதிஷ்டான ஆரோபங்களிரண்டுமொரேஞானத்திலிலங்கும் நியமத்தைச் சம்பாவனைப்பாடிய விவரணத்தில் பிரதிபாதித்திருத்தலின் ஒரு விருத்தி விஷயத் தன்மை உரைக்கவேண்டுமென வுரையாடற்க; விருத்திபேதமாயிருப்பினும் இதமாகார விருத்தியபிவியக்தமாய ஒரு சாக்ஷியில் அவற்றின் பிரகாச மங்கீகரித்தலின் எனக்கூறு நிற்பர்.

## 19-வது. விருத்தி வெளிப்போத லின்றியமையாமை.

அற்றேல், எல்லாப்பொருள்கட்கும் சாக்ஷியினது பிரசாதத்தானே ஒளிர்வு கூடலின் விருத்தியாலாவதென்னே!

கடாதி விஷயக சமஸ்கார உற்பாதனுதி பொருந்தற்பொருட்டு அஃதவாவப்பெறினும். அது வெளிப்போதலை யங்கீகரித்தல் வீணாம். பரோக்ஷஸ்தலத்திற்போல வெளிச்செல்லாத விருத்தியவச் சின்னசாக்ஷியினுனே கடாதிகட்கும் பிரகாசங்கூடலின். அவ்வாருகவே பரோக்ஷ அபரோக்ஷவைலக்ஷண்யம் பொருந்தாதாம் என்னற்க; சாப்த அனுமிதிகட்கேபோலும் காரண விசேஷத்தாலாக்கப்பட்ட விருத்திவிஜாதியினுனே அது பொருந்தலின் ஈண்டுச் சிலர் கூறுவதாவது:— பிரத்தியக்ஷ ஸ்தலத்தில் விஷய அதிஷ்டானமாக அதனவச் சின்னமாகிய சைதன்யமே விஷயப்பிரகாசமாம். நேரே தாதாத்மியரூப சம்பந்தஞ் சம்பவிக்கவே சொரூப சம்பந்தத்தை யேனும் அன்னியத்தையேனும் கற்பித்தல் கூடாமையின் என அதனபிவியக்தியின் பொருட்டுப்பொருத்தமாம் விருத்தி வெளிப்போதலையுடன்படல். பரோக்ஷஸ்தலத்தில் தடையுற்ற வன்னி முதலியவற்றில் விருத்தி சம்சர்க்கங்கூடாமையினுனும் இந்திரியம்போல அன்வயவியதிரேக சாலியாயவிருத்தி வெளிப்போந் துவாரம் புலப்படாமையானும் என்க. வெளிவராத விருத்தியவச் சின்ன சைதன்யமே சொரூபசம்பந்தத்தானே விஷயகோசரமெனக் கதியின்மையின் பொருளாலங்கீகரிப்போம்.

மற்றையரோ, அசங்கார சுகதுக்காதிகளில் அபரோக்ஷத்தன்மை சாக்ஷாத்சைதன்ய சம்பந்திகளில் சித்தமாமெனக் கடாதிகளினும் விஷய சம்பந்தமேயாய சைதன்யம் அபரோக்ஷத் தன்மையினேதுவாம் என அதனபிவியக்தியின் பொருட்டு விருத்திவெளிப் போதலைப்பொருத்து கிற்பர்.

வேறு சிலரோ:—சப்த அனுமானங்களாற் கவரப் பெற்றவற்றினும் காட்சியாற்கவரப்பட்ட பொருளில் வெ

ளிப்படை ஆண்டனுபவிக்கவே படுகின்றது. கரும்பின் இரத பரிமளாதி விசேஷத்தில் நூறு முறை ஆப்தனுபதேசித்தபோதினும் காட்சியாற்கண்டதே போலும் வெளிப்படையுளதாவதில்லை. அதன் பின்பும் 'யாங்ஙனம் அது' என அறியும் வேட்கை தொடர்தலின். சப்தத்தால் மாதுரியமாத்திரத்தை யறிந்துகொண்ட போதினும் கரும்பின் மாதுரியாதியிலிருக்கும் உட்பட்ட ஜாதி விசேஷத்தைக் கூறும் சப்தமில்லாமையின் அஃதிருந்தபோதினும் கேட்பவனால் அச்சப்தத்திற்குக் கவரப்பெறாத சங்கதியுடைமையின் சப்தத்தால் அசாதாரண ஜாதி விசேஷாவச்சின்ன மாதுரிய அவகமமின்றாமென அறியும் வேட்கைத் தொடர்பு பொருந்த முடைத்தாம் எனச்சங்கியாதொழிக; கரும்பின் கண்ணே சர்வத்தினும் அதிசயமாய மாதுரிய விசேஷ மிருக்கின்றதென்னு மிச்சப்தத்தால் அதன் கண்ணிருக்கும் உள்ளடங்கிய ஜாதி விசேஷமும் அறியப்பெறுதலின். இச்சப்தம் அதன்கண்ணிருக்கும் விசேடத்தை விடுத்து அன்னியத்தின் கண்ணிருக்கும் விசேஷத்தை ஆண்டுணர்த்துகின்றதென்பதின்றாம். பொய்ம்மையடை வுண்டாதலின். அதன் கண்ணிருக்கும் விசேடத்தையே விசேஷத் தன்மையானே பொது வடிவமாக உணர்த்துகின்றதேயன்றிச் சிறப்பித்தன்றாமென அறியும் வேட்கையாம் எனக்கூறற்க; காட்சியானும் மதுராச விசேஷணமாய ஜாதி விசேஷத்தைச் சொரூபமாகவே விஷயீகரித்தலின் ஜாதி விசேஷத்திலிருக்கும் வேறு விசேஷத்தை விஷயீகரியாமையின் அறியும் வேட்கைதொடர்வுறுமென்னும் வழக்காதலின். ஆகையால் காட்சியாற் கவரத்தக்கதில் அபிவியக்தமாகிய அபரோக்ஷத் தன்மையோடுகூடிய ஏகரச சைதன்ய தாதாத்மியத்தானே வெளிப்

படை அறியும் வேட்கையை யகற்றும் ஆற்றலுடையதாகும். சப்தாதியால் உணரப்பெற்றதன் கண்ணே அஃதின்மையின் வெளிப்படையில தாமென்னும் விவஸ்தையங்கீகரிக்கத் தக்க தாம். இதனானே சாக்ஷிவேத்தியமாகிய சுகாதிகட்கு வெளிப் படையாகும். சாப்தவிருத்தி வேத்தியமாகிய பிரஹ்மத்திற் கும் மனனாதியின் முன் அஞ்ஞானம் நீங்காதபோது வெளிப் படையின்மையாம், பின்னஃதொழியவேவெளிப்படை யுண் மையாமென விருத்தி வெளிப்போதலை விளம்பா நிற்பர்.

அற்றேல், இவ்வாறாயினும் விஷயத்தை மறைக்கும் அஞ்ஞான நீக்கப்பொருட்டு விருத்தியின் வெளிச்செல்கை யெனக் கூறப்பட்டது அது கூடாதாம். விஷயாவச்சின்ன சைதன்யத்திருக்கும் அதனை மறைக்கும் அஞ்ஞானத்திற்கு வெளிப்போகா விருத்தியினானே நீக்கத்தை யங்கீகரித்தபோ தினும் மிகுவழக்குண்டாகாமையின். அவ்வாறாயின் தேவ தத்தனுக்குண்டாய கடஞானத்தானே யஞ்ஞதத்தனுக்கி ருக்கும் கட அஞ்ஞானமும் நீங்குமென்னும் வழக்காம், சமான விஷயகத்தன்மை யிருத்தலின். அகமர்த்த, விஷய சைதன்யத்திலிருக்கும் ஞான அஞ்ஞானங்கட்குப்பின்னாசிர யத்தன்மை யுண்மையானே அவற்றின் விரோதத்தில் சமானா சிரயத்தன்மைக்கு அப்பிரயோஜகத் தன்மை யுண்மையின் எனக்கூறற்க; சமானாசிரய விஷயத்தன்மையை ஞானாஞ்ஞா னங்களின் விரோதப்பிரயோஜகமென அங்கீகரித்து விருத்தி யின் வெளிப்போதலை யங்கீகரித்தபோதினும், தேவதத்த சம் பந்தமாய கடவிருத்திக்கும் யஞ்ஞதத்த சம்பந்தமாய கட அஞ்ஞானத்திற்கும் கட அவச்சின்ன சைதன்யவேக ஆசிரயத் வம் கிடைத்தலின் மிகுவழக்கு அவ்வாறே நிலைபெறுதலின் எவ்வஞ்ஞானம் எவனுக்கு எவ்விடயத்தை மறைக்கின்றதோ

அஃதவனது அவ்விஷயக ஞானத்தானை நீக்கத் தக்கதாம் எனத் தனியே விரோதப் பிரயோஜகங் கூறவேண்டியிருத்த லின் சமாநாசிரயத்தன்மைக்கு அவாவின்மை யுண்மையின்.

ஈண்டுக் கூறுகின்றனர்:—விருத்தி வெளிப்போதலை யங் கீகரியாக்கால் ஞாநாஞ்ஞானங்களின் விரோதப் பிரயோஜக மே நிரூபிக்கமுடியாதாம். எவ்வஞ்ஞானம் எவனுக்கு என்ப தாதியாய்க் கூறினேமெனின்? அற்றன்றும், பரோக்ஷஞானத் தினாலும் விஷயகத அஞ்ஞான நிவிருத்தி வழுக்காதலின். அபரோக்ஷத் தன்மையும் நிவர்த்தகஞான விசேஷணமெனின்? அவ்வபரோக்ஷத் தன்மை யென்பது யாது காண்? ஜாதியோ ஆகாதாம் 'தண்டியாயிவனிருந்தா' னென்னும் சமஸ்காரத் தோடுகூடிய தண்ட விசிஷ்ட புருஷ விஷய சாக்ஷூஷ ஞானத் திற்குத் தண்டாங்கி சத்தும் அஃதிருக்குமாயின் ஆண்டும் விஷயகத அஞ்ஞான நீக்கங்கூடலின், தண்டத்தைச் சா க்ஷாத்கரிக்கின்றேன் என அநுபவங்கிசத்தும் அபரோக்ஷத் தன்மை யனுபவ அடைவுண்மையினாலும் என்க. அநுபவ மின்றேனும் சமஸ்காரம் சம்பந்தத்தைக் கற்பித்து இந்திரிய சந்நிகர்ஷ ஜன்னியத்தன்மையானே ஆண்டுக் கற்பனையாய அபரோக்ஷத் தன்மையை யங்கீகரிக்கில் அநுமிதியாதியின் கண்ணும் இலிங்கஞாநாதிகள் சம்பந்தத்தைக் கற்பித்து அத னையங்கீகரிக்கு மடைவு வருதலின். தண்டாங்கிசத்தில் அப ரோக்ஷத்தன்மை யிலதாயினோ அதற்கு ஜாதித்தன்மை கூடா மையின், ஜாதிக்கு வியாப்பிய விருத்தித் தன்மை நியமத் தான்; அந்நியமமின்றேனும் அவச்சேதக உபாதி பேதத்தைக் கூறமுடியாமையின் அதற்கு அவ்யாப்பிய விருத்தி ஜாதித் வங்கூடாமையானும். உபாதி யெனவும் உரைக்க வொண்ணு

தாம், அதைக் கூறமுடியாமையின். இந்திரிய ஜன்யத்வம் எனின்? அன்றாம், சாக்ஷிப் பிரத்யக்ஷத்தை வியாபியாமையின், அநுமிதி சாப்தஞானங்களாலிலங்கும் குருத்வாதி விசிஷ்ட குடப்பிரத்யக்ஷத்தில் விசேஷணாங்கிசத்தி லதிவியாப்தி யாம். காணம் வேறிலாமையின் அதனங்கிசத்தில் பரோக்ஷ மிருப் பினும் உபநயசககாரி சாமர்த்தியத்தானே இந்திரியத்திற் கே ஜனகத்தன்மை யுண்மையின் தொடர்பாயுள்ள ஜன்யதா வச்சேதகங்கிரகிக்கப் பெறுமையின் அநேகங்களில் இந்திரிய ஜன்னியத்வம் துயருற்றுங்கவா முடியாமையினானும் என்க. அது கவரப்பெறின் முதலிற்சொற்றும் அதற்கே அபரோக்ஷ த்வரூபத்வம் பொருந்துறவே பிரத்தியக்ஷ அனுபவ அயோக் கிய இந்திரிய ஜன்னியத் தன்மைக்கு அதன்றகுதியாய அப ரோக்ஷத்தன்மை ரூபத்வ கற்பனை கூடாமையின் இதனானே இந்திரிய சந்நிகர்ஷ ஜன்யத்வ அபரோக்ஷத் தன்மையாம், உப நயத்தோ டுகூடிய இந்திரிய ஜன்னிய பரோக்ஷ அங்கிசத்தி லோ சந்நிகர்ஷ ஜன்னியத் தகைமையின்றாம், அநுமிதியின் கண்ணும் உபநீத விஷக்க முண்மையானே பிரமாணாந்தர சாதாரணமாய உபநயத்திற்குச் சம்பந்தமின்மையின். என் னும் சங்கையும் நீக்கப்பட்டதாகும்; சம்யோகாதி சம்பந்தங் கட்குத் தொடர்பின்மையினானே தொடர் பின்மை யுண்மை யினானுமென்க. யாது நினதபி மதமாய அபரோக்ஷத் தன் மையோ அதுவே எனக்கும் உளதாகுக வெனின்? ஆகாதாம், அதற்குச் சாப்த அபரோக்ஷ நிரூபணத்தைக் கூறுமிடத்தில் கூறத்தக்கதிற்கு ஆண்டே காண்பிக்கும் முறையானே அஞ் ஞான நிவிருத்திப் பிரயோஜ்ஜியத் தன்மையானே அதன் நிவிருத்திப் பிரயோஜக விசேஷணபாவங் கூடாமையின், ஆகையால் ‘ஆன்மவித்துச் சோகத்தைக் கடக்கின்றான்,

எனக்கேட்கப்பட்ட பிரஹ்ம ஞானத்திற்கு மூலாஞ்ஞாஞ் சிரயபூதசர்வஉபாதானபிரஹ்ம சம்சர்க்க நியதத்திற்கு மூலா ஞ்ஞான நிவர்த்தகத் தன்மை யுண்மையின். இந்திரிய சம்பந்த மான விருத்திகள் அவ்வவ் விந்திரிய சந்நிகர்ஷ சாமர்த்தியத் தானே அவ்வவ் விஷயாவச்சின்ன சைதன்யத்தைச் சம்பந்தி த்தன வாகவே யுண்டாகின்றன வென்னும் நியமத்தை யனு சரித்து அஞ்ஞாஞ சிரய சைதன்ய சம்சர்க்க நியதத்வம் நிவர் த்தகஞான விசேஷணமாமென்க; எனவே எவ்வஞ்ஞானம் எவனுக்கு எவ்விஷயத்தை மறைக்கின்றதோ அது, அவனு டைய அவ்விஷயக அவ்வஞ்ஞாஞசிரயசைதன்யத்தின் சம் சர்க்க நியத ஆத்மலாப ஞானத்தால் நீக்கத்தக்கதாம் என ஞாஞஞ்ஞானங்கட்கு விரோதப் பிரயோஜகம் நிரூபிக்கப் பட்டது. இவ்வாறாயின் நாடி இருதய சொரூபத்தைக் கோ சரிக்கும் சாப்தஞானத்திற்கும் அஞ்ஞான நிவர்த்தகத் தன்மையின் வழக்காமென்னற்க; அதற்கு ஒரொருகால் அர்த் தவசசம்பன்ன நாடி இருதயமென்னு மிரண்டிலொரு வஸ்து வின் சம்சர்க்கம் சம்பவிப்பினும் விஷய சம்சர்க்கமின்றியும் சாப்தஞான சம்பவத்தால் அதன் சம்சர்க்க நியத ஆத்மலா பத்தன்மை யின்மையின். ஆகையால் ஞாஞஞ்ஞான விரோத நிர்வாகப்பொருட்டு விருத்தியின் வெளிச்செல்கை கூறவே ண்டுமென்பதாம்.

மற்றையரோ:—விஷயகத அஞ்ஞானத்திற்கு எளிதிற் கோடலானே சமாநாதிகரணஞான நிவர்த்தியத் தன்மை துணியப்பெறவே விருத்தியின் வெளிச்செல்கை பலிக்கின்ற தென்பர்.

வேறு சிலரோ:—பாகியப் பிரகாசத்திற்குப் பாகியத மோநிவர்த்தகத் தன்மை, சாமாநாதிகரண்யம் உளதாயவழி

யே கண்டேமெனத் திருஷ்டாந்தத்தை யனுசரித்து விருத்தியின் வெளிச்செல்கை துணியப் பெறுமென்பர்.

வேறு சிலரோ :—ஆவரணத்தை யடக்கும்பொருட்டு விருத்தியின் வெளிச்செல்கையின் அவா இலாதபோதினும் சித்தின் சம்பந்தப்பொருட்டுப் பிரமாத்திருசைதன்யத்திற்கு விஷயப் பிரகாசபிரஹ்ம சைதன்ய அபேத வெளிப்பாட்டின் பொருட்டேனும் அதனவாவெனக் கூறுநிற்பர்.

இனி எப்பிரமாணத்தை யுடையது இச்சீவப் பிரஹ்மங்களின் அபேத மென்பது. யாது விருத்தியினுனே இலக்கப்படுமோ. வேதாந்தத்தைப் பிரமாணமாக வுடையதென்பது கண்டாகோஷமாம். எல்லா வேதாந்தங்களும் உபக்கிரம உபசம்ஹார ஒரு வடிவத் தன்மை முதலிய தாற்பரிய இலிங்கங்களால் ஆராயப் பெறுவனவாய்ப் பிரத்தியக்கபின்ன அத்விதீயப் பிரஹ்மத்தின் கண்ணே அடைவுறுகின்றன. இப்பொருள் எவ்வித மென்பதைச் சாஸ்திரத்தின் கண்ணே சமன்வயாத்தியாயரூபமாய் விரிக்கப்பட்டது. விரிவிற்கஞ்சி மீண்டு விரிக்காது விடுத்தன மென்பதாம்.

முதற் பரிச்சேதம் முற்றும்.



# இரண்டாவது பரிச்சேதம்.

## 20 வது பிரத்யக்ஷத்தானே அத்வைத சுருதிக்குப் பாதம் வராமை.

இனி யாங்ஙனம் அத்விதீயப் பிரஹ்மத்தின்கண்வேதாந் தங்கட்குச் சமன்வயமேனும். காட்சிமுதலியவற்றின் விரோத மிருத்தலின் எனின்? இன்றும், ஆரம்பண அதிகரணத்தில றைந்த சுருதியுக்திகளினானே காட்சியாதியாலறியப்பெறும் உலகிற்குப் பிரஹ்ம விவர்த்தத் தன்மை புண்மையானே பொய்ம்மையறியப் பெறுதலின். அற்றேல், சுருதி யுக்தி களானே பிரபஞ்சத்திற்கு மித்தியாத்தன்மை புணர்த்து வான் முடியாதாம். கடமிருக்கின்றதென்பதாதி கடாதி சத்துவத்தைக் கவரும் பிரத்யக்ஷாதி விரோதம் வருதலின்.

ஈண்டுக் கூறுகின்றனர் தத்துவ சுத்திக்காரர்முதலியோ ர்:—பிரத்யக்ஷமானது கடபடாதியையேனும் அதனிருப்பை யேனும் கவர்வதில்லை; மற்றோ, அதிஷ்டானத் தன்மையானே கடாதி யனுகதமாய சன்மாத்திரத்தையேகவரும் கவாவே பிரத்தியக்ஷமும் சத்ரூபப் பிரஹ்மாத்வைதசித்தி யனுகூலமே யாகும்; ஆகவே, சத்சத்தென்பதாகவே பிரத்யக்ஷமாம், கட மிருக்கின்றது என்பதாகப் பிரத்தியக்ஷம் இந்திரிய உடன்பா டெதிர்மறையாற் றிகழ்த்தப் பெறுவதாகாதாம் எனின்? அற்றன்றும், மயல்களில் இதமங்கிசமாகிய அதிஷ்டானத் திற்குக் காட்சியானே கவர்ச்சியாம் இந்திரிய அன்வயவ்யதி ரேகங்கட்கு ஆண்டே உபக்ஷயமாகும். இரஜதாங்கிசமாகிய ஆரோபிதத்திற்கோ மயலானே புலப்பாடாம். அவ்வாறு

யாண்டும் காட்சியானே சன்மாத்திரமே கவரப்பெறும் ஆண்டே பொறியின் வியாபாரமாம் கடாதிபேத வஸ்துவின்றோற் றமோமயலானே யென அங்கீகரித்தலின். அற்றேல், அது போல ஈண்டுப் பாதங்காணப் பெறுமையின் அவ்வாறங் கீகரிப்பதே மூலமற்றதாமெனின்? அன்றும், பாதங்காணப் படாவிடினும் தேசகாலத்தாற் றடைப்பட்ட வஸ்துவைப் போலக் கடாதிபேத வஸ்துக்கட்குப் பிரத்தியக்ஷ அயோக் கியத்தன்மையே ஆண்டு மூலமாதலின். அங்ஙனமன்றே:— இந்திரிய வியாபாரத்தின் பின்னர்த் தோற்றுநின்றகடாதி கள் முற்றிலுமே பின்னமாகவே பிரதீதியாம். அக்காலாண் டுக்கடாதி பேதத்தில் ஐயந்திரிபு காணப்படாமையின், எவ் விடத்தேனும் ஸ்தாணு முதலியவற்றில் புருஷத் தன்மை முதலியவற்றின் ஐயம் ஆமோ ஆண்டும் அதன் வேறுயவற் றினின்று முண்டாம் பேதம் ஐயந்திரிபாதலின்மையின் பிர காசிக்கின்றதேயாகும். பிரதியோகியோடுகூடத் தோற்றும் நிய மத்தோடுகூடிய பேதத்திற்கும் காட்சியானே கவர்தல் சம்ப வியாதாம். தேசகாலத் தடையானே சம்பந்திக்கப் பெறுத பிரதியோகிகட்குச் சம்பவமாதலின். பேதஞானம் பிரதி யோகியங்கிசத்தில் சமஸ்காரத்தை யவாவலின் ஸ்மிருதி ரூபமாகுக, தத்தையினங்கிசத்திற் பிரத்தியபிஞ்ஞானம் போலும் எனின்? அன்றும், ஆயினும் பேதத்திருக்கும் பிரதி யோகியின் சம்பந்த அங்கிசத்தில் அஃதின்மையின். கனக மலைபேதப் பிரதியோகியாம்; வஸ்துத் தன்மை யுண்மையின் என்னும் பேதப்பிரதியோகியின் சம்பந்த கோசர அநுமிதி யினானே அதன் சமஸ்கார சம்பவமாமென்னற்க; பேதஞா னமின்றி யனுமானப் பிரவிருத்தி கூடாமையானே ஆத்மாசி ரய அடைவு வருதலின். பக்ஷசாத்தியஹேது சபக்ஷமுதலிய

வற்றின் அபேத மயல் உளதாயவழிஸித்தசாதனதோஷியானே அனுமானப் பிரவிருத்தியின்மையானே அதன் அபேதஞானத்தை யகற்றும்பொருட்டு அதன் பேதஞானத்தை யபேக்ஷித்தலின். ஆயின் உளதாகுகவே பேதாங்கிசத்திற்போலப் பிரதியோகியின் சம்பந்த அங்கிசத்தும் பிரத்யக்ஷம் எனின்; அற்றன்றும், பிரதியோகி யப் பிரத்யக்ஷமாகவே அதன் சம்பந்தப் பிரத்யக்ஷங் கூடாமையின் சம்பந்தித்வயப் பிரத்யக்ஷமின்றிச் சம்பந்தப் பிரத்யக்ஷம் அசம்பவமாதலின். ஆகையால், பிரத்தியக்ஷ அயோக்கியமாகிய பிரதியோகிக்குப் பிராந்திரூபப்புலப்பாடாமென அதனேக ஞானவேத்யத்வ நியதமாகிய பேதத்திற்கும், பேத ஏகஞான வேத்யத்வ நியதமாகிய கடாதிகட்கும் மயலொன்றிற்கே விடயமாந்தன்மையுண்மையின் பிரத்யக்ஷம் நிர்விசேஷ சன்மாத்திர அத்வைத சித்தியின் அனுகூலமே யாகுமென்பதாம்.

நியாய சுதையுடையார் கூறுவதாவது :—கடாதிகட்கு இந்திரிய சம்பந்தத் தன்மையிருப்பினும் கடமிருக்கின்றதென்பதாதி, அதிஷ்டான சத்தையின் சம்பந்தமே என விரோதமில்லையாம். இவ்வண்ணம் நீலக்குடம் என்பதாதி, அதிஷ்டான நீலமுடைமைச் சம்பந்தமுடைய தேனுகாதெனின்? ஆகாதாம், சுருதியினானே சத்ரூபவஸ்துவிற்குச் சகதுபாதானத் தன்மை கூறப்பட்டது அவிரோதத்தாற் சர்வ சம்மதமாதலின் அதன் சம்பந்தத்தானே கடமிருக்கின்றது, என்பதாதித்தோற்றங் கூடலின் கடாதிகளிடத்தும் சத்தையைக் கற்பிப்பதில்கௌரவமாம். அதற்கு ரூபாதியற்ற தன்மையுண்மையின் நீலமுடைமைமுதலியவை கடாதிகளின் கண்ணே கற்பிக்கத் தக்கனவாம் என விஷயமாவனகாண்க.

சம்க்ஷேப சாரீரக ஆசிரியர் கூறுவதாவது :—பிரத்ய க்ஷத்திற்குக் கடாதி சத்துவத்தைக் கவரும் தன்மை யுண் மையேனும் பாகியவிடயத்தைக் கவரும் காட்சிமுதலியவற் றிற்குத் தத்துவத்தை யிலக்குந் தன்மையென்னும் இலக்க ணம் வாய்ந்த பிரமாணமாதல் இன்மையின், அதன் விரோதத் தானே அத்வைத சுருதியாதி பாதசங்கை கூடக்கூடாதாம். அறியாததை யறிவிப்பதே பிரமாணமாகும், பிரத்யக்ஷாதி விஷயமாகிய கடாதிகட்கு அறியப்படாத் தன்மை யின்றாம். ஜடத்தில் ஆவரண காரியமின்மையானே அஞ்ஞான விஷயத் தன்மை யங்கீகரியாமையின், சுவப்பிரகாசத் தன்மையானே யடைவுற்ற பிரகாசத்தோடு கூடிய பிரஹ்மமே அஞ்ஞான விஷயமெனை அதைப்போதிப்பதே தத்துவத்தை விளக்குவ தாகிய பிரமாணமாம். அதுவேபிரமிதி விஷயமாம். அத னுனே, சுருதியும், ''ஆத்மா, மைத்திரேயி பார்க்கத்தக்கது'' என ஆன்மாவிற்கே பிரமேயத் தன்மையென அடைவிக் கின்றதாம். காணத்தக்கது என்பதனுனே, காட்சி விதிக்கப் படுவதின்றாம். பிரமாண பாதந்திரமாய அதற்கு விதியகோ சரத்தன்மை யுண்மையின் மற்றேரு ஆத்மாப் பார்க்கயோக்கிய மாயது என அறியப்படாத்தன்மை யுண்மையின் ஆன்மா விற்கே பிரமேயத் தன்மை தகுதியாம் அன்னியத்திற்காகா தாமெனை நியமிக்கின்ற தென்பதாம்.

சிலரோ :—கடாதி சத்துவத்தைக் கவரும் பிரத்யக்ஷத் தினது பிராமாண்யத்தில் பிரஹ்மப் பிரமாண நியூனத்தகை மை யறியப்பெருவிடினும், அதனுற் கவரப்பெறும் சத்து வம் தொடர்பாய பிரதீதியால் சத்தாஜாதி ரூபமேனும், ஈ ண்டிப்போது கடமில்லை யென்பதாகத் தேசகால சம்பந்தப் பிரதீதியினுனே அவ்வந் தேசகால சம்பந்தரூப மேனும்

இல்லைகடமென சொரூப நிஷேதப் பிரதீதியினுனே கடாதி சொரூபமேனும் முடிவு பேறடைகின்றது. அதுவும் தனது மித்தியாத் தன்மையோடு விரோதிக்கின்றதின்றும் மித்தியாத்வ வாதியினுனும்கடாதிகளின் சொரூபமேனும் அதனது தேசகால சம்பந்தமேனும், அதன் கண்ணே ஜாதியாதிகளேனும் அங்கீகரிக்கப் படுவதில்லையென்பதாக இன்றும் மற்றேரு அவற்றிற்குப் பாதிக்கப்படாத் தன்மை யங்கீகரிக்கப் படுவதில்லை அபாத்தியத்தன்மைச் சத்துவமேபிரத்தியக்ஷமாகுக வெனக்கூறற்க; காலத்திரயத்திலும் இதற்கும்பாதமின்றென வர்த்தமானமாத்திரத்தைக் கவரும் பிரத்யக்ஷத்தால் கவர்வான் முடியாமையின் எனக்கூறு நிற்பர்.

சிலரோ : — அபாத்தியத்தன்மை வடிவசத்வத்திற்குப் பிரத்யக்ஷகிராகியத்தன்மையிருந்தபோதினும், பிராணன் உண்மை அந்தப் பிரபஞ்சத்தினுள்ளும் இப்பரமான்மாச்சத்தியமாம், என்னும் சுருதியினுனே பிரதான பூதபிராணக் கிரகண உபலக்ஷிதமாய பிரபஞ்ச முழுவதற்கும் பிரஹ்மத்திற்கும் சத்தியத்வ உத்கர்ஷ அபகர்ஷப் பிரதீதியினுனே சத்தியத்தன்மையில் அபாத்தியத்வ ரூபத்தைக்கொள்ளவே, எப்போதும்அபாத்தியத்வம், சிறிதுபோதுஅபாத்யத்வம் எனஇவ்வித உத்கர்ஷ அபகர்ஷமின்றி இராஜ இராஜன், மன்மத மன்மதன், என்பதாதிசப்த தாற்பரியகோசரமாகிய நியந்திருத்தகைமை, குணசுந்தரத்தகைமை முதலியவற்றிற்கே போலும் அதிக விஷயத்தகைமை அற்பவிஷயத்தகைமை முதலியவையாகிய உற்கர்ஷ அபகர்ஷஞ் சம்பவியாமையின், வேறுவிதமாக அது சம்பவிக்குமாயினும் பிரபஞ்சத்திற்குப் பிரஹ்மஞானபாத்யத்வ வேறு சுருதியோடு ஒரு பொருட் படுத்தலின்

உரைத்த உத்கர்ஷ அபகர்ஷமே முடிவு பேறடைதலின் பிரத்யக்ஷத்தாற் கவரப்பெறுவதாய கடாதி சத்வம் பிரஹ்ம ஞானம் வரை அபாத்தியத்வ வடிவமாம் என மித்தியாத்வ சுருதி விரோதமில்லையாம் என்பர்.

மற்றையரோ :—பிரபஞ்சத்தினது மித்தியாத்வ சத்தியத்வங்களைக் கவரும் சுருதி காட்சிகட்கு விரோத மிருப்பினும், தோஷ சங்கையாற் களங்கப்பட்ட முதலில் முயன்ற பிரத்யக்ஷத்தினும் நித்திய நிர்த்தோஷ மாதலினானும் அபச்சேத நியாயத்தானே பரமாதலினானும் சுருதியே பலமுடையதாம். "காட்சி முதலிய மூன்றனுள் ஆகமத்தன்மையானே ஆகமத்திற்கே பிராபல்யம் பிரசித்தம்" என்னும் ஸ்மிருதியிருத்தலினானுமென்க. வேதமொன்றானே அறியத்தக்க பொருள் விஷயமாம் இக்கேள்வி யென்னற்க; ஆண்டுப் பிரத்யக்ஷ விரோதசங்கை யிருத்தலினானே, பிரத்யக்ஷத்தோடு விரோதஞ் சங்கிக்கப்பட்ட வேதார்த்தத்தின் கண்ணே வேதத்திற்குப் பிராபல்யக்கூற்றுத் தகுதியுடையதேயாம். "தலம் போலும் விண்காணுகின்றதுதழல்போலுமே மின்மினி, விண்ணிற்றலமிலையேயன்றோ விரியெரி மின்மினியல்லவால்" (தலம் இந்திரநீல மணிமயகடாஹ ஆகாரம்) "ஆதலாற்காட்சியிற் கண்ட பொருளின் கண்ணும் பரீக்ஷையாம், பரீக்ஷித் தறிவித்துப் பொருளை யறத்தினின்றும் நழுவவிடார்" என்னும் நாரத ஸ்மிருதியின் கண்ணே சாக்ஷிப்பிரகரணத்தில் பிரத்தியக்ஷத்தாற்கண்டதையும், பிரத்யக்ஷத்தை நம்பாமல் பிரமாண உபதேசாதிகளினானே பரீக்ஷிக்கவேண்டுமெனப் பிரதிபாதித்திருத்தலின். விண்ணீலமுடைமையின்பிரத்யக்ஷத்தை, ஆகாயத்திற்குச் சப்தாதிகளாகிய ஐந்தனுள் சப்தமொன்றே குணமெனப்

பிரதிபாதிக்கும் ஆகமோபதேசமின்றிக் காட்சி முதலியவற்றானே நீக்கமுடியாதாம். ஆகாயத்திற் சமீபத்தில் நீலமுடைமை தோற்றாமையின் தூரத்தில் அம்மதி தூரத்தன்மைத் தோஷஜன்னியமாம் என்னும் நிச்சயத்தானே அதன் பாதமாம் என்னற்க; தூரத்தில்நீலமுடைமைத்தரிசனத்தால் சமீபத்தில்அதன்றோற்றாமை பனிவடிவ ஆவரணம் தோற்றாமைபோலும் சாமீப்ய தோஷ ஜன்னியம் என்பதாகவும் சம்பவித்தலானே அனுபவபலத்தால் விண்ணீலமுடையது அவ்வியாப்ய விருத்தியெனப் பொருந்துதலினானும் என்க. சேய்மையினிருப்பவனுக்கு யாண்டுப் பூவிற் சமீபித்த விண்ணிடத்தில் நீலமுடைமைமதியாமோ ஆண்டே அண்மையிற் சென்ற அவனுக்கு நீலமுடைமை மதியின்மைப்பிரத்யக்ஷத்தாற் பாதமாம் எனலுமேலாதாம்; மேலேயிருக்கப்பட்டதாய நீலமுடைமைக்குமேகநக்ஷத்திராதிக்கேபோலும்சேய்மைத்தோடத்தால்பூசந்நிதானத் தோற்றம் எனக்கூடலின். பிருதிவி முதலியவற்றிற் கலந்து தோற்றுவனவாய கந்தமுதலியவற்றிற்கு "அப்புவிற் கண்டு அறிவிலர் சிலவர் அதில்மணமாமென அறைவாராயின், அப்புவாயுவினில் விரவுமம்மணந்தனைச், செப்பு மண்ணுடே தெரிகவென்றதையே" என்பதாதி யாகமங்களானே விவத்தை விளம்பவேண்டியிருத்தலின் பிரத்தியக்ஷாதிகளில் பிராபல்யமாய ஆகமத்திற்குச் சங்கையற்ற தன்மையுண்மையின். இயற்கையாய்ச் சித்தமாய நீரில் நிலைத்திருக்கும் யாதொரு ஸ்தம்பாதி பார்த்திவ திரவ்யமுளதோ அதுமுதலியவற்றிலிருக்கும் கந்தாதி, பிருதிவியின் குணமேகந்தம், ஜலாதியின் குணமன்றாம் என்பதாதி ரூபத்தானே நம்மனோரானே காட்சியாற் பிரித்தறிதல்கூடுமென்பது கூடாதாம்; பிருதிவியாதிகட்குப் பெரும்பான்மையும் பரஸ்பரச் சேர்க்கை யுண்மை

யின் அன்னியதருமம் அன்னியத்தினிடத்திற்றோற்றல் சம்பவிக்குமெனச் சங்கிக்கத்தக்க தோஷத்தோடுகூடியது பிரத்யக்ஷமாதலின் ஆண்டாகமத்தால் சிக்ஷிக்கப் பெறுமெனின்? ஆயினீண்டும் பிரஹ்மப் பிரபஞ்சங்கட்கு உபாதான உபாதேய பாவத்தானே பரஸ்பரம் சேர்க்கை யுண்மையினானே அன்னிய தருமம் அன்னிய இடத்தில் தோற்றல் சம்பவிக்குமென சங்கிக்கத்தக்க தோடத்தோடு கூடியது பிரத்யக்ஷமாம்; "அத்திபாதிப்பிரிய ரூப நாம மென்றைந்தங்கிசம், ஆதிமூன்றும் பிரஹ்மரூபம்ஜகத்ரூபம் மற்றிரண்டு காண்" எனவிருத்தர் விளம்பியவகையான ஆகமத்தானேவிவத்தை செய்துகொள்கவெனச் சமமேயாம். இவ்வாறாயின் உபஜீவ்யமாகிய பிரத்யக்ஷ விரோதமாமென்னற்க; ஆகமப் பிரமாணத்தால், வர்ணபதவாக்கியாதி சொரூப அம்சப் பிரத்யக்ஷ முபஜீவ்யம், அனுபஜீவ்யமாகிய அதன் சத்தியத்தன்மை யங்கிசம் பொடிப்படுத்தப்படுதலின் எனக் கூறுவர்.

## 21--வது, பிரத்யக்ஷத்தினும் வலுமையுடைய ஆகமத்தின் வியவஸ்திதித் தன்மை.

அற்றேல், ஆகமத்திற்குப் பிரத்யக்ஷத்தினும் வலுமையிருப்பின் "யஜமானன் தர்ப்பையின் முஷ்டி" என்பதில் பிரத்தியக்ஷ அவிரோதப்பொருட்டு யஜமானசப்தத்திற்குத்தர்ப்பை முஷ்டியில் கௌணிவிருத்தி கற்பிக்கலாகாதாம். அவ்வாறே "சோமத்தால் வேட்க" என்பதன்கண் வையதிகரண்யமாக அன்வயஞ் செயுங்கால் வேள்வியில் இஷ்ட சாதனத்தகைமையும் சோமக்கொடியில் வேள்வியின் சாதனத்தகைமையும் உணரத்தக்கனவென வியாபார வேற்றுமையானே வாக்கிய வேற்றுமை வந்துறுதலின்; சாமானாதி கரண்யமாக அன்வயங்

கூறவேண்டியதாகிய வழி பிரத்யக்ஷ அவிரோதப்பொருட்டுச் சோமத்தையுடைய யாகத்தாலென மத்துவர்த்தத்திலக்கணை கற்பிக்கலாகாது. இரண்டிடத்தும் பிரத்யக்ஷ விரோதமிருந்து போதினும் அதனையாதரியாது வலுமையுடைய ஆகமத்தானே தர்ப்பைமுஷ்டியில் யஜமான அபேதத்தையும், யாகத்திற் சோமாபேதத்தையும்துணியப்பெறச்சம்பவித்தலின் எனின் ?'

பாமதி நிபந்தத்தில் இதன்விஷயத்திற் கூறியதாவது:--தாற்பரியத்தோடுகூடிய சுருதிபிரத்யக்ஷத்தினும்பலமுடையதாம், சுருதிமாத்திர மன்றும்,மந்திரார்த்தவாதங்கட்கோஸ்துதியின் வாயில் பூதமாய பொருளில் வாக்கியார்த்தவாயில் வடிவமாய பதார்த்தத்திற்போலத்தாற்பரியமில்லை. தாற்பரியமில்லையேயாயின் பிரமாணாந்தரவிரோதமில்லாத தேவதையின் விக்கிரகாதிகள் அவற்றினின்றும் துணியப்பெறமாட்டா. தாற்பரியவதியின்மாட்டே சப்தத்திற்குப் பிராமாண்யநியமமிருத்தலின் எனின்? அற்றன்றும், "இதற்கே ரேவதியென்னும் சாமங்களில்வாரவந்தீயமென்னும் அக்நிஷ்டோம சாமஞ்செய்து பசுகாமன் இதனால் வேட்க" என்னும் விசிஷ்ட விதிபாற்றற்பரிய அகோசரமாயினும்விசேஷணசொரூபத்தில் பிராமாண்ய தரிசனத்தால் கூறிய நியமத்துணிபு கூடாமையின். ஈண்டோ ரேவதீ இருக்காதாரம்; வாரவந்தீயம் சாமவிசேஷணம், இது சோமாதி விசேஷணம்போலும்லோகசித்தமன்றும்; அதனால் விசிஷ்டயாகவிதி மாத்திரத்தில் வாக்கியத்திற்குப் பிராமாண்யமாகாதாம். விசிஷ்ட விதியினானே விசேஷண ஆக்ஷேபமென்பதுமின்றும், ஆக்ஷேபத்தால் விசேஷண ஞானமுறின் விசிஷ்டகோசர விதியாம், அஃதுளதாயின் அதனால் விசேஷணத்தின் ஆக்ஷேபமாம் என்னும் அன்னியோன்னிய ஆசிரய

அடைவு வருதலின். ஆகையால் விசிஷ்ட விதிபரமாய வாக்கியத்திற்குவிசேஷண சொரூபத்தின்கண்ணும் பிராமாண்யம் கூறத்தக்கதாம். இனி ஆண்டுத்தாற்பரியமின்றும், இரண்டிடத்துந்தாற்பரியமாயின் வாக்கியபேத அடைவுவருதலின். இவ்வாறு விதிக்கப்பட்ட தின்றுதிபரமாய அர்த்தவாதங்கட்கும், ஸ்துதியின் வாயில் பூதமாய அர்த்தத்திற்றாற்பரியமின்றுமென அவைகளினும்பிரத்யக்ஷமேபலமுடையதாதலின் அதன் அவிரோதப் பொருட்டு அவற்றில் வேறு விருத்தியைக் கற்பிக்கவேண்டும். "சோமத்தால் வேட்க" என்பதாகிய விசிஷ்ட விதிபர வாக்கியத்தில் சோம திரவ்ய அபின்னயாக ரூப விசிஷ்டம் விதேயமாம் எனஅங்கீகரிக்கில்அவ்விதேயத்திற்கு "தயிரால் ஆகுதி செய்கின்றான்" என்பதாதியில் விதேயமாய தயிர் முதலிய வற்றிற்கே போலும் உலகசித்தத் தன்மையின்மையின் விதிபர வாக்கியத்தானே ரேவதியிறு தார வாரவந்தீய விசேஷணத்திற்கே போலும் தாற்பரியமின்றிச் சித்தியங்கீகரிக்கத்தக்கதாம். தாத்பரியமற்ற ஆகமத்தானே யாக சோமலதைப் பேதத்தைக் கவரும் பிரத்யக்ஷ விருத்தமாய பொருள் சித்திக்கமாட்டாதென ஆண்டும் அதனவிரோதப் பொருட்டு மத்துவர்த்த இலக்கணையைப் பற்றவேண்டும். அத்வைத சுருதியோ உபக்கிரம உபசங்கார ஒரு வடிவுடைமை முதலிய அறுவிதலிங்கங்களா லுணரப்பெற்ற அத்வைத தாற்பரியம் பிரத்யக்ஷத்தினும் வலுமையுடையது என்னுமதறல் பிரத்யக்ஷத்திற்கே பாதமாம். அதனையவிரோதப்படுத்தும் பொருட்டுச் சுருதிக்கு வேறு வகையாய்ப் பொருத்தல் கூடாதாம்.

விவரண வார்த்திகத்திற் பிரதிபாதிக்கப் பட்டதாவது:- தாற்பரிய முடைமையானே சுருதிக்குப் பிரத்யக்ஷத்தினும்

பிராபல்யம் என்பதாக இல்லை. "பொன்னுருங்கையடுக" வென விதேயமாய அடுதலுக்குப் பொன்னுருங்கின் பொருட்டாய்ப் பிரதிபாதிக்கப் படுவதிற்றாற்பரியமிருந்தபோதினும் பொன்னுருங்கில்மாறி வேறு ரூபரச முண்டாதல் வரையுமாய முக்கிய அடுகைச் சம்பந்தம் பிரத்யக்ஷ விருத்தமாமென அதனவிரோதப்பொருட்டு அடுதற் சப்தத்திற்கு வெதுப்புவது மாத்திரத்தில் இலக்கணை யங்கீகரித்தலின், தத்துவமசியென்னும் வாக்கியத்திற்கு ஜீவப்பிரஹ்ம அபேதப் பிரதிபாதனத்தில் தாற்பரிய மிருந்தபோதினும் துவம்பத வாச்சியத்திற்குத் தற்பத வாச்சியத்தோடு அபேதம் பிரத்யக்ஷ விருத்தமாம் என அதனவிரோதப் பொருட்டுச் சாரமாய சைதன்யத்தில் இலக்கணையை யங்கீகரித்தலி னாலும். அர்த்தவாதங்கட்கும் பிரயாஜாதியங்க விதிவாக்கியங்கட்கே போலும் தன தர்த்தப் பிரமிதியில் அன்யார்த்தத் தன்மையின்மையானே பிரமிதி விஷயீ பூதமாய அர்த்தங்கட்கே பயன் வயத்தால் அன்யபதார்த்தத் தன்மையாமெனப் பிரயாஜாதி வாக்கியத்தைப்போல அவைகட்கும்உள்ளடங்கிய சம்சர்க்கத்தில்தாற்பரிய முளதேயாம். வாக்கியைகவாக்கியத்தன்மையுண்மையின், பதைக வாக்கியத் தன்மையிருப்பதன்கண்ணே கேவலம் அவாந்தரதாத்பரியம்அங்கீகாரமின்றென்பதாக, விவரணாசிரியர் அவர்களால் நியாய நிர்ணயத்தில் விவஸ்தாபனஞ் செய்யப்பட்டிருத்தலின், "யஜமானன் தர்ப்பை முஷ்டி" என்பதாதிகட்கும் முக்கியார்த்த தாற்பரியமடைவுறாவே பிரத்தியக்ஷ அவிரோதப்பொருட்டே இலக்கணையங்கீகரித்தலினாலும். ஆயினியாங்ஙனம்? சுருதிக்குப் பிராபல்யங் கூறப்படுவதோ, நிர்த்தோஷமாதலினாலும் பரமாதலினாலும். சுருதி மாத்திரத்திற்குப் பிரத்யக்ஷத்தினும் பிராபல்யம் என்பது சாமானியமாம்; மற்றோ

சுருதி பாதிதமாயினும் பிரத்யக்ஷம் ஒருவாறுகத்தனக்குத் தகுதியாயவிஷயஉபகாரத்தால்உரையாடத்தக்கதாம், நிர்விஷயஞான மிலாமையின். இதனால் அத்வைத சுருதி விரோதத்தானே தத்துவத்தை நிகழ்த்துவதினின்றும் நழுவியதாய பிரத்யக்ஷம் அர்த்தக்கிரியையினுற்றலுற்ற வியாவகாரிக விஷயத்தைச்சமர்ப்பித்தலானேபிரதிபாதிக்கப்படுகின்றது. அதிகமாக அவைவதனாலென்? "இதுவெள்ளியன்று" எனச்சர்வசித்தப்பிரத்யக்ஷபாதிதமாயினும் சுக்திரஜதப் பிரத்யக்ஷம், அனுபவத்தையனுசரித்து முற்றேயத்தில்சுக்தியோடு அபேதமுற்றஇரஜத அங்கீகாரத்தானே சேர்க்கப்படுகின்றது. அதன்விரோதத்தானேதேசாந்திரத்திலிருக்கும் ஞானகாரரூபஅசத்தேயாய இரஜதமேனும்விஷயமெனக்கற்பிக்கப் படமாட்டாது. இவ்வாறுகவே, தர்ப்பை முஷ்டியில் யஜமானபேதத்தைக் கவரும், பிரஹ்மஞானம்வரை அர்த்தக்கிரியைச்சம்வாதத்தால்தொடர்ந்துநிகழும்பிரத்யக்ஷத்திற்குப்பிராதிபாசிக விஷயத்தன்மையின் அங்கீகாரத்தால், பிரதிபாதிக்கக்கூடாமையின். "யஜமானன்தர்ப்பைமுஷ்டி" என்னும்சுருதிபாத்யத்வமாயின்எல்லாவகையானும்நிர் விஷயத்தன்மையையுடையு மென அதன் பரிஹாரப் பொருட்டுச் சாமான்யத்தை விடுத்துச் சுருதியே அதன் சித்தி யதிகரணநியாற் பிரதிபாதிக்கப்பட்ட பிரகாரத்தானே வேறோராற்றாற் சேர்க்கப்படும். அத்வைத சுருதி பிரத்தியக்ஷங்கட்கே போலும் ஈண்டுச் சுருதிப் பிரத்யக்ஷங்கட்குத் தாத்விக வியாவகாரிகவிஷயத்தன்மையை யங்கீகரித்தலினுனே பிரத்யக்ஷப் பிரதிபாதனம் செய்வான் முடியாதாம். பிரஹ்மத்தினும் வேறாகிய சகலத்திற்கு மித்தியாத்வப் பிரதிபாதக அறுவித தாற்பரிய இலிங்கத்தோடு கூடிய அநேக சுருதி விருத்தமாய ஒரு அருத்தவாதத்தானே தர்ப்பை முஷ்டியில் தாத்விகமாயயஜமான தாதாத்மியத்தைப் பிர

திபாதிக்க முடியாமையின். இவ்வாறே "தத்துவமசி" யென்னும் வாக்கியத்தானே துவம்பத வாச்சியத்திற்குச் சர்வஞ்ஞுத்வ அபோக்திருத்வ அகர்த்திருத்வ முதலிய விசேஷண விசிஷ்டப்பிரஹ்ம சொரூப போதனஞ் செய்யப்படவே ஆண்டு அசர்வஞ்ஞுத் தன்மை போக்திருத் தன்மை முதலிய பிரத்யக்ஷம் அத்தியந்தம் பற்றுக்கோடற்ற தாகும் என அதனை நீக்கற் பொருட்டு அகங்காரத்தோடு கூடியதற்குப் போக்திருத்வாதி அதனினும் சாரமும் தூயதுமாயதற்கு உதாசீனபிரஹ்மரூபத் தன்மையும் ஆமென்னும் விவஸ்தையைப் பற்றிப்பாகத்தியாக இலக்கணை பற்றப்படுகின்றதாம். இவ்வாறே "பொன்னுருந்தையடுக" என்பதாதியின் கண்ணும் பிரத்யக்ஷத்திற்கு அத்தியந்தம் நிர்விஷயத் தன்மையடைவுறவே அதன்பரிகாரப் பொருட்டுச்சுருதியிலிலக்கணையாம். ஒருவாற்றாய் விஷயத்தைப் பிரதிபாதனஞ்செய்ய முடியின் பிரபலமாய சுருதிக்கு வேறோராற்றாற்பொருத்துகையின்றென யாதொரு விவத்தையின்மை வழக்கு முண்டாகாதாம். அல்லது, "பொன்னுருந்தையடுச, சோமத்தால்வேட்க" என்பதாதியில்பிரத்யக்ஷஅநுசாரமாக இலக்கணையின் ஆசிரயமின்றாம், மற்றோ, அநுஷ்டானஞ்செய்ய முடியாமையினென்க; பொன்னுருந்தில் வெம்மையுண்டாக்கற்கொப்பாம்முக்கியபாகத்தை யநுஷ்டிப்பான் முடியாதன்றோ. சோமதிரவிய கரணத்தை யுடைய யாகத்தைப்போல அதனபின்னமாயயாகத்தை யாரேனும் அநுஷ்டிக்கவும் முடியாதாம். அநுஷ்டான விஷயமாக அங்கீகரித்ததிற்குப் பிரத்யக்ஷ விரோதமே அநுஷ்டான அசக்தி யெனவேறுசப்தத்தானே விவகரிக்கப்படுமென விளம்பற்க; "சசிமண்டலத்தை யொளியுடையதாகச் செய்க" என்னும் விதியில் அநுஷ்டிக்குமாறு கருதியதற்குச் சசிமண்டலத்தில் காந்தியுடைமைக்குப் பிரத்யக்ஷ

அவிரோதமிருப்பினும் அனுஷ்டான அசக்திகாணப்படுதலின் அதற்கு அதனினும் வேறுந் தன்மையுண்மையின். ஆகவே, ஆண்டு அதனானே இலக்கணையைப் பற்றி நிற்றல். ஆகையால் அபச்சேத நியாயத்தானே துணியப் பெற்றதாய சுருதி வலுமையுடைய தற்கு யாதொரு பாதமு மின்று மென்க.

இனியாங்ஙனம் ஈண்டு அபச்சேத நியாயப் பிரவிருத்தி? கூறப்படும், ஜோதிஷ்டோமத்தில் தோத்திரத்தையுத்தேசித்துத் தொடர்புற்றுச் செல்பவர்களாய இருத்துவிக்கு களினிடையில் உத்காதாநழுவின் "உற்காதா நழுவுவனாயின் அயாகத்தைத்தக்ஷிணையின்றிமுடித்து அதனானே மீண்டும் வேட்க" வென்னுஞ் சுருதியின்றரிசனத்தால் உண்டாக்கப்பட்ட, உற்காதாவினபச்சேத நிமித்தமாய பிராயச்சித்த கர்த்தவ்யத்தன்மைப் புத்தி; பின்னர்ப்பிரதிஹர்த்தா நழுவின் "பிரதிஹர்த்தாநழுவுவானாயின்சர்வ ஐசுவரியதான ரூபதக்ஷிணைதருக" என்னும் சுருதியின்றரிசனத்தானே உண்டாக்கப்பட்ட முற் கூறியதினும் விருத்தமாய பிரதிஹர்த்தாவின் நழுவுதல் நிமித்தமாய் பிராயச்சித்த கர்த்தவ்யத்தன்மைப்புத்தியினானே பாதிக்கப்படும். இங்ஙனம் முன்புண்டாய கடாதிசத்தியத்தன்மைப்பிரத்யக்ஷம் பின்புண்டாய அதன் மித்தியாத்தன்மைச் சுருதி ஜன்னிய புத்தியினானே பாதிக்கப்படும். மேலுதாகரணத்தில் பூர்வ நைமித்திக கர்த்தவ்யத்தன்மைப் புத்திக்குப் பரநைமித்திக கர்த்தவ்யத்தன்மைப் புத்தியானே பாத மிருப்பினும் பூர்வ நைமித்திக கர்த்தவ்யத் தன்மைப் புத்தியை யுண்டாக்குவதாகிய சாஸ்திரம், யாண்டுற்காதா மாத்திரத்திற்கு நழுவுதலாமோ, இருவருக்குமொரேகாலத்தில் நழுவுதலாமோ, உற்காதாவின் நழுவுதலுக்குப் பரத்துவமாமோ; ஆண்டுச்சாவகாசத்தை யடையும். பிரத்யக்ஷமோ அத்

வைதசுருதியினுனே பாதமாகவே வேறு விஷயமின்மையின் பற்றுக்கோடின்றியதாகும்எனவைஷம்மியம்ஆமெனச்சங்கியா தொழிக. யாண்டுக்கடாதியில் சுருதியால் பாதிக்கப்பட்டபிர த்யக்ஷம் பிரவிருத்திக்குமோ ஆண்டே வியாவகாரிக விஷய த்தையடைவுற்றுக் கிருதார்த்தமாய அதற்குப் பராபச்சேத ஸ்தலத்தில் எல்லாவாற்றானும் பாதிதமாய பூர்வ அபச்சேத சாஸ்திரத்திற்கே போலும் வேறு விஷயந்தேட வேண்டியதி ன்றாதலின், ஈண்டும் சர்வப்பிரத்யய வேத்யமாய பிரஹ்ம சத் தையில் பிரத்யக்ஷம் சாவகாசம் ஆமெனக்கூறுவான் முடியு மாதலினானுமென்க. ஒரே பிரயோகத்தும் முறையாய நிமித் தத்தால் யாகத்தில் அவ்வநைமித்திக கர்த்தவ்யத்தன்மை கட்கு இலந்தைக்கனியில் கறுப்புச்சிவப்பு ரூபங்கட்கேபோலு ம் முறையாகவே உற்பத்தியுண்டாதலின் ரூபஞானமிரண்டே போலும் கர்த்தவ்யத்தன்மை ஞானமிரண்டும் பிரமாணமே யாம் எனப்பரத்தாற் பூர்வ ஞானபாதத்தில் அபச்சேத நிய யாம்உதாஹரணமன்றாம். இதனானே அபச்சேதாதிகரணத்தில் நைமித்திக சாஸ்திரத்திற்கு இது பொருளாம் :— நிமித்த உபஜனனத்தின்முன் வேறோராற்றாற் செய்யத்தக்கதாயினும் யாகம் நிமித்தமாங்கால் வேறோராற்றாற் செய்யத்தக்கது என் பது சாஸ்திர தீபிகையின் வசனமாமென யாதுகூறப்படுமோ அது கூடாதாம்:—இருக்கும் அங்கத்திற்குக்கர்த்தவ்யத்தன் மையாம். பின்னருண்டாவதாகிய பிரதிஹர்த்தா நழுவுதலையு டைய யாகத்தில் முன்னர் நடந்த உற்காதா நழுவுதலை நிமித்த மாயுடையபிராயச்சித்தத்திற்குஅங்கத்தன்மையுளதாதலின்று ம்ஆஹவநீய சாமானிய சாஸ்திரத்திற்குப் பதஹோமத்தினும் வேறாகிய ஹோமவிஷயத் தன்மையைப் போலும் உத்காதா நழுவுவனாயின் என்னும் சாஸ்திரத்திற்குப் பின் வருவதாகிய

பிரதிஹார்த்தாநழுவுதலின்றியயாக விஷயத்தன்மையுண்மையி. ன்;உரைக்கப்பட்டுமுளதுநியாயரத்நமாலையின்கண்ணே:—பிரத்யக்ஷ சித்தமாய சாதாரணசாஸ்திரத்திற்கு விசேஷ விஷயாதியால் எச்சங்கோச முளதாமோ அது பிராப்த பாதமெனக் கூறப்பெறும் எனக்கூறப்பட்டது இலக்கணப் பிராப்த பாத விவேசனத்தில். ஆண்டு இவ்வாருகவே சாஸ்திரார்த்தமுண்டாம்:—பின்னர் வருவதாய உத்காதா நழுவுதலின்றிய பிரதிஹார்த்தா நழுவுதலையுடைய யாகத்திற்குச் சர்வதனதான மங்சமாம். இவ்வாறே உத்காதா நழுவியதின்கண்ணும் கண்டுகொள்க வென்பதாம். சாஸ்திரதீபிகையின் வசனம் யாது உதாஹரணமாக்கப்பட்டதோ அதுவும் அதனுலுண்டாயினும் முற் பிராயச்சித்த ஞானம் பொய்யாய்ப்போம்; பாதிதத்தன்மையுண்மையின், உத்தரத்திற்கோ, ஒரு சிறிதுபாதகமுமின்ருமென முற்கர்த்தவ்யதா பாத்தியத் தன்மையைப் பிரதிபாதிக்கும் கிரந்த உபசம்ஹார படித்தன்மையுண்மையின்; நிமித்த உபஜனனத்தின் முன்பு நிமித்த உபஜனனமின்றி நிமித்த உபஜனனமிலதாகவே வேருராருய்க்கர்த்தவ்யமிருந்தபோதினுமெனச் செய்து சிந்தைமாத்திரபரமாம்; பின்னிமித்த உபஜனனத்தின் முன் பூர்வ நிமித்தத்தாலாய கர்த்தவ்யத்தன்மை உண்மையாகவே இருந்தது என்னுமிவ்வித பரமாயதென்பது கூடாது; பூர்வ கிரந்த சந்தர்ப்ப விரோத அடைவு வருதலின், மீமாம்சகமரியாதை நிற்குக. கறுப்பு அதன்பின் சிவப்பு ரூப நியாயத்தானே முறைப்பட்ட கர்த்தவ்யத்தன்மையிரண்டனுற்பத்தியை யங்கீகரிக்கில் யாது விரோதம்? கூறப்படுகின்றது:—அங்ஙனமன்ரு, அக்கர்த்தவ்யத்தன்மையென்பதுயாதாம்? எது பரநைமித்திக கர்த்தவ்யத்தன்மையின் உற்பத்தியானே நீங்கா நிற்குமோ? ஆண்டுப் பூர்வநைமி

த்திகத்திற்கு முயல்வால் துணியப்பெறுந்தன்மைத் தகுதியு டைமையின்றும்; அதற்குப்பின்னரும்கெடாதிருக்குந்தன்மை யுண்மையின். பலமுகமாய முயல்வால் துணியப்பெறுந்தன் மையுண்மையாமென்பது மேலாதாம்; அதற்கு முன்னரும் பிற வாத்தன்மையுண்மையின் . எதனனுஷ்டானஞ்செய்யாவிடின் யாகத்திற்குக் கெடுதலாமோ அத்தன்மையேனும் அங்கத்தன் மையேனும் ஆகாதாம்; அனுஷ்டான அபாவத்தில்யாக வைகல் யப்பிரயோஜகத்தன்மைக்கு வியாப்யத்வரூபத்தன்மையானும், கருமாங்கத்தன்மைக்குப் பலஉபகாரஞ்செய்வதானுதல் சொரூ ப உபகாரஞ் செய்வதானுதல்,காரணத்வவிசேஷ ரூபத்தன்மை யானும், அவற்றிற்கு ஒரொருகாலுளதாந்தன்மை கூடாமை யானேஇயற்கைத்தன்மை நிர்வாகப்பொருட்டுப்பின்னர்வருவ தாய விருத்தநழுவுதலின்மையையுடைய யாகத்திற்கு முன் நழுவுதனிமித்திகம் அங்கமாம் ஆண்டே அதனனுஷ்டான அபாவம் யாகக்கேட்டின் சாதகமாம் எனச் சிறப்பிக்க வேண் டியிருத்தலின், பின்னர்த்தாய வேறு நழுவதலையுடையயாகத் தில் முன் னழுவுதனிமித்திகத்தில் யாக அங்கத்தன்மைக் கேனும், அதனனுஷ்டான அபாவத்தில் யாக வைகல்யப்பிர யோஜகத்தன்மைக்கேனும், பின்னர்த்தாய நழுவுதலுண்டா வதன் முன்னர் அசம்பவமாதலின். ஒருவஸ்துவானது வேறு சிறிது வஸ்துவின் பொருட்டுச் சிறிது காலம் வியாப்பிய மாயும் பின்னரின்றியும் எனவேனும் சிறிதுபோது காரணம் பின்னரின்று எனவேனும், ஓரிடத்தில் கண்டதாயேனும் பொருந்துவதாயேனும் இன்றும். கர்த்தவ்யத்தன்மையென் பது வரவு போக்கிற்குரியதாய வேறுதருமமேயாமெனக்கற் ப்பிப்பதுங் கூடாதாம்; அளவையின்மையின் முரணுய நழு வற் சாத்திரங்கட்குப்பத ஆகவநீய சாத்திரத்திற்கே போல

விவத்லைத பொருந்துதலின். ஆகையால் முறைப்பட்டகர்த்த வ்யத்தன்மையிரண்டனுற்பத்தி வசனம்பற்றுக்கோடற்றதாம்.

அற்றேல், உபக்கிரம அதிகரணநியாயத்தானேவிரோதித் தன்மையுண்டாகாமையின்பிரத்யக்ஷமே ஆகமத்தினும் வலுமை யுடையதாமென ஏன் ஆகமாட்டாது? கூறப்படுகின்றது:— யாண்டு ஏகவாக்கியத்தன்மை தோற்றுகின்றதோ ஆண்டு ஒரே பொருளில் முடிவுபெறடைவதாயாகவேண்டும். அர்த்தபேதமாயின் தோற்றுநின்ற ஏகவாக்கியத்தன்மையின் அழிவு வழக்காதலின். ஆகையாலதன்கண் முதலில் முரணுண்டாகாமையின் "பிரஜாபதியானவர் வருணர்பொருட்டு அசுவத்தைக் கொடுத்தார்" என்பதாதியுபக்கிரமமாகிய பிரஜாபதியின் அனுஷ்டான சதிருச அர்த்தவாதத்தால் புத்தியிலாரோபிக்கப்பட்டதாதாவினிஷ்டியில், அதன் முரண்பொருள் வாய்ந்த "எத்துணையசுவங்களைக் கவர்வரோ அத்துணை வருண சம்பந்திநாற்கபாலங்களைச்சமர்ப்பிக்குக" என்னுமுபசம்ஹாரத்திருச்கும்பதக்கூட்டம் விரோதித் தன்மையை யடைந்துண்மையின் கேட்டபடி யாய பொருளைச் சமர்ப்பித்தலானே அதன் ஏகவாக்கியத் தன்மை கிடைக்காமல் ஏகவாக்கியத் தன்மையின் நிர்வாகப் பொருட்டு ணிச்சின்.பொருளை யுள்ளடக்கி (கவர்விப்பரோ) அதன் அனுகூலத்தானே தம்மை யடைகின்றனர் என உபக்கிரமத்திற்குப்பிராபல்யமாம். யாண்டுப்பரஸ்பரம் ஏகவாக்கியத்தன்மைதோற்றமாட்டாதோ ஆண்டு முன் கதையை யெண்ணாது தன்னை யடைவுற்ற முரண் பொருளுற்ற வாக்கியமானது தன்பொருளையொருதலையாய்ப் போதிக்கும் என ஆண்டுப் பூர்வ கதை பிரபமைல்லவாம். இதனானே ஷோடசிக்கிரக வாக்கியம் முற்கதையை யெண்ணுமலே அதன் அக்கிரக வாக்கியத்திற்கும் தற்பொருட் போதகத்தகைமையும் பொரு

ந்துகின்றது; மற்றேு, இரண்டிற்கும் வேறுவிஷயமின்மையின் கதியிலாது ஆண்டே விகற்பித்து அனுஷ்டானம் விரும்பப் படுகின்றது. இவ்வாறுகவே, அத்வைத ஆகமத்திற்குப் பிரத் யக்ஷத்தானே ஏகவாக்கியத் தன்மைச் சங்கையின் மையானே முற்கதை யாயிருந்த போதினும் அதையெண்ணுது தற்பொ ருட் போதகத் தகைமை யழிவற்றதாம். அதனர்த்த போதஜன னமாயினே, "பூர்வம் பரத்தைப் பாதியாதுண்டாம் அஜாதத் தன்மையுண்மையின் பரத்திற்குப் பூர்வஞான பாதமின்றி உற்பத்தி கூடாமையின் முதலந்தப் பாதியாமல் சம்பவியா தாம்." என்னும் அபச்சேத நியாயத்திற்கே பிரவிருத்தியாம், உபக்கிரம நியாயத்திற்கின்றும். இதனுனே உலகின் கண்ணும் முதற் கதையாகிய இப்பி வெள்ளிப் பிரத்யக்ஷம் ஆப்த உப தேசத்தாற் பாதிக்கப்படும் என்பதாம்.

## 22 வது உபஜீவ்யத் தன்மையானே பிரத்யக்ஷ அபாத சங்கையினது நீக்கம்.

அற்றேல், அவ்வாறுயினும் உபஜீவ்யத் தன்மையானே பிரத்யக்ஷத்திற்கேபிரபலத் தன்மை நீக்க முடியாததாம். அபச் சேத சாஸ்திரங்கட்கோ பூர்வமானது பாத்தினது உபஜீவ்ய மன்றெனப் பரத்தானே பூர்வத்திற்குப் பாதம் பொருந்தும். ஈண்டோ வர்ணபத முதலிய சொரூபத்தைக் கவரப் பெறுந் தலினுனே பொய்ம்மையைப் போதிக்கும் ஆகமப்பொருட்டுப் பிரத்யக்ஷத்திற்குஉபஜீவ்யத் தன்மையுண்மையின் ஆகமத்தி ற்கே அதன் விருத்த மித்தியாத்தகைமையைப் போதி யாத் தன்மை வடிவ பாதம் பொருந்துகின்றது. மித்தி யாத் தன்மைச் சுருதியானே வர்ணபதாதி சத்தியத்தன்மை யங்கிசம் கெடப்படினும் உபஜீவ்ய சொரூப அங்கிசங் கெ

டாமையின் உபஜீவ்ய விரோதமில்லையாம் என்னற்க; "ஈண்டற்பமும் நானு இல்லை" என்பதாதி சுருதிகள் சொரூபமாகவே பிரபஞ்ச அபாவத்தைப் போதித்திருத்தலின்.

ஈண்டுச் சிலர் கூறுவதாவது:—விருக்ஷத்தைக் கொணர்தி என்பதாதி வாக்கியம் சிரவண தோஷத்தானே விருக்ஷபத்தைக் கொணர்தி யென்பதாதிரூபமாய்க் கேட்பவனுக்கும் சாப்த போதங் காணப்படுகின்றமையின் சாப்த போதத்தின் கண்ணே வர்ணபதாதிப் பிரத்யக்ஷம் பிரமை பிரமப்பொதுவாகவே அவாவப் படுமென அத்வைத ஆகமத்தால் வர்ணபதாதிப் பிரத்யக்ஷமாத்திர முபஜீவ்யமாம், அதுபிரமையன்றாம். இவ்வாறாகவே, வர்ணபதாதி சொரூபங் கெடினும் உபஜீவ்ய விரோதமின் றென்பதாம்.

வேறு சிலர் கூறுவதாவது:—சாப்தபோதத்தில் வர்ணபதாதி சொரூப சித்தியை யவாவப் பெறாத வழியும் தகுதியற்ற சப்தத்தானே பிரமிதியுதயமாகாமையின் யோக்யதைச் சொரூபசித்தி யபேக்ஷையுளதாம். அதனை யவாவிய வழியும் உபஜீவ்ய விரோதமில்லையாம். "ஈண்டு நானுவில்லை" என்னும் சுருதியினானே நிஷேதிக்கப் படினும் பிரஹ்மஞானம் வரை தொடர்வுறுவதாய், அர்த்தக்கிரியைப் பயனுடைப் பிரவிருத்தியையுண்டாக்குவதாய் அசத்தினும் வேறாகிய பிரபஞ்ச சொரூபத்தை யங்கீகரித்தலின்; அன்றாயினோ வியாவகாரிகப் பிரமாணங்களாகிய பிரத்யக்ஷாதிகட்கு நிர்விஷயத் தன்மைப் பிரசங்கம் வருதலின். சொரூபமாக நிஷேதிப்பினும் யாங்ஙனம், பிரபஞ்ச சொரூபத்திற்குத்தனது இலாபமேற்படும், நிஷேதத்திற்குப் பிரதியோகியை நீக்காத் தன்மையுண்மையேல் நிஷேதத்வ வியாகாதம் வருதலின் என்னற்க; இப்பியின் கண்ணே இது வெள்ளி இது வெள்ளியல்ல வென்னு மிருதோற்றத்

தை யனுசரித்து அதிஷ்டானத்திருக்கும் அத்தியஸ்த அபாவத்திற்குப்பாதம் வரைத்தொடர்புடையதுஅசத்தினும் வேறாகிய பிரதியோகி சொரூபத்தைச் சகிக்குந் தன்மையை யங்கீகரித்தலின். இதனுனே பிரபஞ்சத்திற்குச் சொரூபமாக நிடேதமாங்கால் முயற் கோடுபோல அசத்துத் தன்மையேயாம் என்பதும் நீக்கப்பட்டது; பிரஹ்ம ஞானத்தால் நீக்கப்படல் வடிவத்தை யுடன்படுதலின் விஷமத்தன்மையுண்மையின். இவ்வத்தியஸ்தத்திற்குச் சொரூபமாக அதிஷ்டானத்தில் நிடேதம்புரியவே மற்றிடத் திலதற்குச் சொரூபமாக நிடேதம் தானே துணியப்பெறுவதாகும் என அதற்குச் சர்வ தேசகால சம்பந்தி நிஷேதப் பிரதியோகித் தன்மையின் அடைவினுனே அசத் தன்மை நீக்க முடியாதாம். சர்வதேச கால சம்பந்தி நிடேதப் பிரதியோகித் தன்மை யசத்வம் என்பதாகவே அசத்வ நிர்வசனஞ் செய்ய முடிதலின் வேறுவிதமாக அதன் நிர்வசனங் கூடாமையின் எனக் கூறற்க; அசத்திற்குச்சர்வ தேச காலசம்பந்தி நிஷேதப் பிரதியோகித்தன்மையை அங்கீகரிப்பவனுல், அதற்கு அவ்வாறுந் தன்மையேல் பிரத்யக்ஷத்திற்குச்சர்வதேச காலங்களின் பிரத்யக்ஷஞ் செய்யமுடியாமையானும்ஆகமத்திற்கு அத்தகைய ஆகமம் புலப்படாமையானும் பிரமாணப் படுத்துவான் கூடாமையானே அனுமானமே பிரமாணமெனக் காட்டவேண்டி வருமென அதனனுமானத்தில் எங்ஙிஸ்வரூபத் தன்மை கூறவேண்டி வருமோ முதலிற்றோற்று நின்ற அதற்கே அசத்வ நிர்வசனத் தன்மை கூடலின் என்பர்.

மற்றையரோ:—"ஈண்டு நானுஇல்லை" என்னும் சுருதிக்குச் சத்தியத்தன்மையானே பிரபஞ்ச நிஷேதமே கருத்தாம்,

சொரூபமாக அன்றும், சொரூபமாக நிடேதத்திற்குச் சொரூப நீக்கம் செய்யாமை கூடவே அதற்கு அதன் நிடேதத்தன்மை கூடாமையின். அதன் நீக்கம் செய்யவே பிரத்யக்ஷ விரோதம் வருதலின். சத்தியத் தன்மைக்கும் கடமிருக்கின்றது என்பதாதி பிரத்யக்ஷ சித்தத் தன்மையுண்மையின் அவ்வுருவத்தானும் நிஷேதம் பொருந்தாதாம் என்னற்க; பிரத்யக்ஷத்திற்குச் சுருதிய விரோதப் பொருட்டுச் சத்யத்வ ஆபாசரூப வியாவகாரிக சத்தியத்வ விஷயத்வங் கூடலின். இவ்வாறுகவே, பிரஹ்மத்திருக்கும் பாரமார்த்திகசத்தியத் தன்மைக்குப் பிரபஞ்சத்தில் அடைவு இன்மையின் அவ்வடிவத்தானே பிரபஞ்ச நிடேதங் கூடாதாம் என்னற்க; இப்பியில் வெள்ளியின் போலிப் பிரதீதியே சத்திய வெள்ளியடைவாமென அதன் நிடேதமாம்; இதனனே இது வெள்ளியன்று, மற்ருே அது, இஃதெனது கோவல்ல, மற்ருே அதுவே, ஈண்டு நிகழ்காலச் சைத்திரனில்லை, மற்ருே வீட்டில், என்பதாக நிடேதிக்கப் படுவதற்கு மற்றிடத்தில் இருப்புணரப்படுகின்றது. இவ்வாறே சத்தியத்வாபாசப் பிரதீதியே சத்தியத்வ அடைவாமென அதன் நிடேதங் கூடலின். ஆகையால் வர்ணபத யோக்யதை முதலியவற்றின் சொரூபத்தைக் கெடுக்கும் சங்கையின்மையின் உபஜீவ்ய விரோதமில்லையாம் என உரையாடுவர்.

மற்றையரோ:—பிரஹ்மத்தின் கண்ணே பாரமார்த்திக சத்தியத் தகைமை, பிரபஞ்சத்தில் வியாவகாரிக சத்தியத்தகைமை, சத்தியத்வ ஆபாசரூபம் ஆம் சுக்திரஜதாதிகளில் பிராதிபாசிக சத்தியத்தகைமை அதனினும் கீழானதாம் எனச் சத்தையின் மூவகைமை யங்கீகரிக்க முடியாதாம். அதிஷ்டானமாகிய பிரஹ்மத்திருக்கும் பாரமார்த்திக சத்தையின் சம்பந்தத்தானே கடாதிகளிலும் சுக்தி ரஜதாதிகளிலும் சத்வ அபிமானம்

பொருந்தலினுனே சத்தியத்வ ஆபாச கற்பனத்திற்குப் பிமாணமற்ற தன்மையுண்மையின். இன்னணமாவே, உலகில் சத்தியத்வப் பிரதீதியின்மையினுனே அதனது தாதாத்மியத்தை யடைவுற்ற பிரஹ்மத்தில் அதன் பிரதீதிக்கே பிரிவின்மையின் பிரபஞ்சத்தில் அதனடை வுண்மை பொருந்துதலினுனும், சத்தியத் தன்மையானே பிரபஞ்ச நிடேதம் புரியின் உபஜீவ்ய விரோதமில்லையாம். அடைவுருததன் நிடேதமுமில்லையாம். பிரஹ்மத்திலிருக்கும் பாரமார்த்திக சத்தையினும் வேருகப் பிரபஞ்சத்தில் சத்வ ஆபாசத்தை யங்கீகரியாதொழியின் தடையுண்ட சத்திய இரஜதத்தினும் வேருகச் சுத்தியில் இரஜத ஆபாச உற்பத்தியை யாதின்பொருட்டங்கீகரித்தல் வேண்டும் என்னற்க; தடையுண்டு சம்பந்தமற்றிருப்பதற்கு அபரோக்ஷத் தன்மையின் அசம்பவ மிருத்தலின் அதன் நிர்வாகப் பொருட்டு அதை யங்கீகரித்தலின்.

### 23 வது பிரதிபிம்ப சத்யத்வ நிராகரணம்.

அற்றேல், இவ்வாறு பிரதிபிம்ப மயற்றலத்திலும் கழுத்திலிருக்கும் வதனத்திலும் வேருக ஆடியில் முகப்போலியினுற்பத்தியை யங்கீகரிக்கவேண்டும். தன்னதாகிய கழுத்திலிருக்கும் வதனத்தில் மூக்கு முதலியவற்று லவச்சின்னதேச அபரோக்ஷத்தன்மை சம்பவித்த போதினும் நயன கோளக லலாடாதி தேசம் அபரோக்ஷ மாகாமையினுனும் பிரதிபிம்ப மயலில் நயனகோளகாதி தேச அபரோக்ஷங் காணப்படுதலினுனும். பிம்பத்தினும் வேருகிய பிரதிபிம்பத்தை யங்கீகரிப்பதில் இஷ்டந்தானென்னற்க; பிரஹ்மப் பிரதிபிம்ப ஜீவனுக்கும் அதனினும் வேற்றுமையானே பொய்ம்மை யடைவாதலின்.

ஈண்டு, விவரணத்தை யனுசரித்தவர் கூறுவதாவது:— கழுத்திலிருக்கும் முகத்திலே ஆடியுபாதியின் சந்நிதான தோ

ஷத்தால் ஆடியிலிருக்குந் தன்மை, உண்முகத்தலைக்மை, பிம்பவேற்றுமைகட்கு அத்தியாசஞ் சம்பவித்தலினுனே ஆடியில் ஆனனத்தினத்தியாசம் கற்பிக்கத் தக்கதன்றும்; கவுரவத்தாலும், ஆடியின்கண் முகமில்லை யென்னும் சம்சர்க்க மாத்திர பாதத்தாலும், மித்தைவத்து வேருயின் "இது வதனமல்ல" வென சொரூபபாதங் கூடலினுலும், "ஆடியிலெனது முகமிலங்குகின்றது" எனத் தனது வதன அபேதப் பிரத்தியபிஞ்ஞையினுலும் என்க. அதிஷ்டானமாகிய கழுத்திலிருக்கும் வதனத்தினுடைய அபரோக்ஷத் தன்மையின் அசம்பவமா மென்னற்க; உபாதியினுற் றடுக்கப்பட்ட நயன ரஸ்மிகட்குத் திரும்பவும் பிம்பக்கிராகித்தகைமை நியமத்தை யங்கீகரித்தலின். அந்நியமத்தை யங்கீகரியாதொழியின் பரமாணுவிற்கும் குட்டிய முதலியவற்றுனே தடைப்பட்ட தூலப் பொருட்கும் சாக்ஷுஷப்பிரதிபிம்ப மயல் வழக்காதலின். தடையற்ற தூலஉற்பூத ரூபமுடையதற்கே சாக்ஷுஷப் பிரதிபிம்ப மயலாம் மற்றதற்கின்றும் என்னும் நியம மில்லை யென்னற்க; பிம்பதூலத்தகைமை உற்பூதரூபங்கட்குச் சித்தமாகிய சாக்ஷுஷ ஞானஜனனத்தானே உபயோகஞ் சம்பவிக்குங் கால் வேறுவிதமாயுபயோக கற்பனைபுரிதல் கூடாமையினுலும், குட்டியாதியாற்றடையுண்டதற்குத் தடைபட்ட நயனரஸ்மி சம்பந்தம் பொருந்தாமலே ஈண்டுப் பிரதிபந்தகத் தன்மையேல் அவ்வாறே கடப்பிரத்யக்ஷாதி ஸ்தலத்திலும் அதற்குப் பிரதியந்தகத் தன்மை சம்பவித்தலினுனே சக்ஷு சம்பந்த மாத்திரத்திற்குக் காரணத்தன்மையின் லோப வழக்குண்டாதலினுலும்; ஆடியில் மித்தியாமுக அத்தியாசவாதியினுலும் முக்காரணத்துள்ளடங்கிய சமஸ்கார சித்தியின்பொருட்டு நயனரஸ்மிகட்கு ஒருகால் திரும்பித் தனது முகக்கிராககத் தகைமைக் கற்பனையினு

னே பூர்வ அனுபவத்தைப் பொருத்தலா மாதலினானும்; மூக்கு முதலிய தேச அவச்சின்ன பூர்வஅனுபவத்தானே சமஸ்காரம் பொருந்துமென்னற்க; அத்துணையானே நயன கோளகாதிப் பிரதிபிம்ப அத்தியாசங் கூடாமையின், தடாக நீரில்கரைத்தருவிலேறி மறைந்த புருடப் பிரதிபிம்ப அத்தியாசஸ்தலத்தில் எங்ஙனமேனும் பூர்வ அனுபவத்திற்குக் கூறவொண்ணாத் தன்மையுண்மையினானும்; இவ்வண்ணமாகவே உபாதியால் தடுக்கப்பட்ட நயனரஸ்மிகட்கு பிம்பத்தையடைந்து அதன் கிராககத் தகைமையை இன்றியமையாது கூறவேண்டலின் பயனுடை வலுமையானே தர்ப்பணாதியாற் றடைப்புண்டதற்கே பிம்பத்தை யடைவுற்று அதன் கிராககத் தகைமையாம், சிலைமுதலியவற்றானே தடையுண்டதற்காகாதாம். அதிநிர்மல மிலாத தாமிராதியானே தடையுண்டவற்றிற்கு மலின உபாதி சம்பந்த தோஷத்தால் முகாதிசமுதாய விசேஷ அக்கிராகத் தகைமை நேரே சூரியனை இனிதடைய இச்சித்தவைகட்கே போலும் உபாதியை யடைவுற்று நிவிருத்தங்கட்கு அவ்வாறு சூரியசம்பந்த தேஜசால் தடைப்படலின்றாமெனப் பிரதிபிம்ப சூரியனைக் காண்பதில் நேரே அதனைக் காண்பதிற்போல முடியாமை யின்றாம். ஜலாதியுபாதிசம்பந்தத்தில் சில உபாதியாற் றடைப்பட்டவைகட்குப் பிம்பப் பிராப்தியினும், சிலவற்றிற்கு அதனுட்கமனத்தால் உண்மணலாதி கிரகணம் என்பதாதி கற்பனையால் யாதொரு கோது மில்லையாம்.

அத்வைத வித்தையை யாற்றியவரோ பிரதிபிம்பத்திற்கு மித்தியாத் தன்மை யங்கீகரிக்கும் திரிவித ஜீவவாதிகளாகிய வித்யாரண்ய தேசிகர் முதலியோர்களின் கருத்தை

யிவ்வாறு கூறுவர் :--சைத்ரமுகத்தினும் வேருய் அதன் ஒப் புமையானே சமீபத்துறைபவரால் வெளிப்படையாய்க் காணு நின்ற தர்ப்பணத்தில்தனது பிரதிபிம்பம் அதினினும் வே ருகும் சொரூபமாகப் பொய்யேயாம் தனது கரத்திலிருக் கும் வெள்ளியினின்றும் இப்பி வெள்ளியே போலும். தர்ப்ப ணத்திலெனது முகமிலங்குகின்றது எனப்பிம்ப அபேதஞான விரோதமா மென்னற்க; வெளிப்படைப் பேத துவித்வ உண் முகத்தன்மை முதலிய ஞானவிரோதத்தானே அபேதஞான அசம்பவமாதலினுனும் ஆடியில் எனது முகம் எனக்கூறல் தன்னிமூல் முகத்தில் தன்முகக் கூற்றேபோலக் கவுணமாத லினுனும். அபேதஞான விரோதத்தானே பேதக்கூற்றே கவு ணமாம் என ஏனுகமாட்டாதெனச் சங்கியாதொழிக; பாலர்க ட்குண்டாம் பிரதிபிம்பத்தில் வேறு புருஷமயலாகிய தள்ளக் கொள்ள விழைவுறுமர்த்தக்கிரியை வரையுற்ற அதனை நீக்க முடியாமையின். இனிது காண்பவர்க்கும் தம்வதன விசேஷ நன்ஞானப் பொருட்டுத் தர்ப்பணுதியைக் கோடல்காண்ட லின் அபேத ஞானமும் அர்த்தக்கிரியை வரையா மென்ன ற்க; பேதத்திலும் பிரதிபிம்பத்திற்குப் பிம்பசமானுகாரத்தன் மை நியமவிஸேஷ நன்ஞானத்தானே அதனைக் கோடல் கூடலின்.

ஈண்டுமுக மின்றெனத் தர்ப்பணத்தில் முக சம்சர்க்க மாத்திரத்திற்குப் பாதமாம், முகத்திற்கின்றும் என்பது யா தோ அதுகூடாதாம்; இது வெள்ளியன்றென்பதன் கண்ணும் இதுவெனும் பொருளில் இரஜத தாதாத்மிய மாத்திரத்திற்குப் பாதமாம், இரஜதத்திற்கின்றும், என்னும் அடைவாதலின் இதமம்சத்தில் இரஜதத்திற்குத் தாதாத்மியத்தானே அத்தி யாசத்தால் இது இரஜதமன்றெனத் தாதாத்மியத்தானே இரஜ

தாதிற்கே பாதமாம், தாதாத்மிய மாத்திரத்திற்கின்றா மெனவாயின், அக்காலாடியில் ஆனந்தத்திற்கு ஆதேயத் தன்மையானே அத்தியாச மாதலின் ஈண்டு முகமில்லை யென ஆதேயத்தன்மையானே முகத்திற்கே பாதமாம், சம்சர்க்க மாத்திரத்திற்கின்றாமெனத் துல்லியமேயாம். தருமிக்கும் அத்தியாச கற்பனையாயின் கவுரவமாம் என்பது யாதோ அது இராஜத ஆபாச கற்பனைக் கவுரவம் போலும் பிராமாணிகமாதலின் கோதற்றதாம். தனது நேத்திர கோளகாதிப் பிரதிபிம்ப மயற்றலத்தில் பிம்ப அபரோக்ஷத் தகைமைக் கற்பனை யுபாயமின்மையின் நயனரஸ்மிகளாகிய உபாதியாற் றடையுண்டவைகட்குப் பிம்பப் பிராப்தி கற்பனையிலோ திருஷ்ட விருத்தம் மிகவு மடைவுறும். யாங்ஙனம், ஜலசம்பந்தமாகவே தடையிலா மலுள்ளே சென்றவையாகிய சில நயனரஸ்மிகளிருப்ப ஜலசம்பந்தத்தானும் தடுக்கப்பெற்றன வாய் முற்றினு மிருதுக்களான மற்றையன, சகல நயனரஸ்மிகளைத் தடுக்கும் சூரியகிரண சமுதாயத்தை வெற்றிகொண்டு அவற்றின் மத்தியிலிருக்கும் சூரிய மண்டலத்தை யடையும்? யாங்ஙனந்தான், சந்திரனைக் காண்பதேபோல அதன் பிரதிபிம்ப தரிசனத்தும் அமிருதம்போலச் சீதளமாகிய அதன் பிம்ப சம்பந்த சமமாகவே விழிகட்குச் சீதத்தன்மையின் வெளிப்பாட்டானே திருப்தியாகாதோ? யாங்ஙனந் தான் ஜலசம்பந்தத்தானும் தடுக்கப்பட்டனவாய்ச் சிலை முதலியவற்றின் சம்பந்தத்தானே தடுக்கப்படாமற் போமோ? அதன்றலையானே திரும்புவன வாய்த் தான் நயன கோளகாதிகளோடு சம்பந்தியாமற் போமோ? அதன் சம்சர்க்கமாகவே தான் சம்பந்தித்ததைச் சாக்ஷாத்கரிப்பிக்காமற்போமோ? தோஷத்தானும் தடைப்பட்டதாக விசேஷாங்கிசக்கிரகண மாத்திரம் காணப்படுகின்றதே யன்றிச்

சம்பந்தித்த தருமி சொரூபகிரகணமுமன்றும். பிரதிமுக அத்தியாச பக்ஷத்திலோ ஒருசிறிது திருஷ்ட விரோதமுங் கற்பிக்கத்தக்கதாயின்றும். அங்ஙனமன்றே:—தடையற்றதூல உற்பூதரூபத்திற்கே சாக்ஷுஷ அத்தியாச தரிசனத்தானே பிம்பத்திலிருக்கும் தூலத்தன்மை உற்பூதரூபங்கட்குத் தமதாசிரிய சாக்ஷாத்கார காரணத்தன்மையானே சித்தமாய அவற்றிற்குத் தமதாசிரய பிரதிபிம்பாத்தியாசத்தினும் காரணத்தன்மை குட்டியாதி யாவரண திரவியத்திற்குத் துவக்கிந்திரியாதி நியாயத்தானே அடைந்ததைச் செய்வதானே யுணர்ந்த நயன சம்பந்தப் பொருத்தமின்மை வாயிலாய்த் தடையுற்ற வஸ்து சாக்ஷாத்காரப் பிரதிபந்தகத் தன்மையானே துணியப்பெற்றதற்குத் தடையுற்ற பிரதிபிம்ப அத்தியாசத்திலும் வேறு வாயிலின்றியே பிரதிபந்தகத் தன்மையும் கற்பிக்கத் தக்கதாம். ஆண்டு, சிலபால் காரணத் தன்மை முதலியவற்றானே துணியப்பெற்றதற்குப் பயனுடை வலுமையால் பிறவிடத்தும் காரணத் தன்மை முதலியவற்றைக் கற்பிப்பதில் யாது விரோதமாம்? இதனானே உபாதியாற்றடையுண்ட நயனரஸ்மிகட்குப் பிம்பப் பிராப்தியை யங்கீகரியாதொழியில் தடைபட்ட உற்பூதரூபாதியற்றதற்குச் சாக்ஷுஷப் பிரதிபிம்பமயல் வழக்காம் என்பது நிராகரிக்கப்பட்டதாம். மேலும் அதனை யங்கீகரித்தலினானே கூறியதூஷண வழக்காம். யாங்ஙனம்? நேரே சூரியக் காட்சியிற்போலச் சக்ஷுவிக்ஷேபமின்றியும் குனிந்த சிரத்தனால் காணப்பட்ட நீரில் அதனாற்றடைபட்ட நயன ரஸ்மிகட்கு மேலே கிளம்பிப் பிம்ப சூரிய கிராககத் தன்மை யிருப்பதேபோலும், குறுக்குவிழி விக்ஷேபமிலாமல் நேராய விழியால் ஆடியில் காணும்போது அதனாற்றடைபட்டவைகட்குப் பக்கத்திருப்பவரின் முகக்கிராககத்

தன்மையேபோலும் வதனத்திருப்புகையின்றேனும்உபாதியா ற்றடைப்பட்டவைகட்குப் பிற்பாகத்திருக்கும் தடையுண்ட தன் கிராககத்தன்மை ஆண்டு நீக்கமுடியாததாம். உபாதியாற் றடைப்பட்ட நயனரஸ்மிகட்கு மீண்டும் கோளக வாயிலாய்த் தேகத்துட் பிரவேசநியமம் விடுத்து யாண்டுப் பிம்பமோ ஆண் டே கமனத்தை யங்கீகரித்திருத்தலின். அவ்வாறே மலின தர் ப்பணத்தில் கறுப்பாக சிவப்புமுகப் பிரதிபிம்ப ஸ்தலத்தில் இருப்பதேயாயினும் பிம்பத்திருக்கும் சிவப்புருவம் சாக்ஷுஷ ஞானத்தில் உபயோகமின்மையினுனே மஞ்சட் சங்குமயல் நியாயத்தால் ஆரோப்பிய ரூப சம்பந்தத்தானே பிம்ப முகத் திற்குச் சாக்ஷுஷத்தகைமை நிர்வகிக்கப்படுமென்பதாம். அவ் வாறே ரூபமற்றதற்கும் தர்ப்பண உபாதியின் சியாமத்தன் மைச் சம்பந்தத்தானே சாக்ஷுஷப் பிரதிபிம்ப மயல்விடயத் தன்மையும் நீக்கமுடியாததாம். சுயமாகவே ரூபமற்றதாயி னும் ஆகாயம் அத்தியஸ்த நீலமுடைமைச் சம்பந்தத்தானே சாக்ஷுஷத்வம் பொருந்துதலின். ஆகையால் சொரூபமாகவே பிரதிமுக அத்தியாச பக்ஷமே மேன்மையதாம். ஆண்டும் பூர் வானுபவ சமஸ்காரம் பொருந்தாமையுளதென்னற்க; புருஷ சாமானிய அனுபவ சமஸ்கார மாத்திரத்தானே கனுக்களில் ஒருகாலு மனுபவிக்கப்படாத புருஷ அத்தியாசமே போல முகசாமானிய அனுபவ சமஸ்கார மாத்திரத்தானே தர்ப்ப ணங்களில் முக விசேஷ அத்தியாசங்கூடலின். இத்துணையோ வேற்றுமையாம்:— கனுக்களில் சுப அசுப ஹேது அதிருஷ் டானுசாரமாக புருஷாகிருதி விசேஷ அத்தியாசமாம், ஈண் டோ பிம்பசந்நிதானத்தை யனுசரித்து முகஆகிருதி விசேஷ அத்தியாசமாம் என்க. பிரதிபிம்பம் சொரூபமாகவே பொய் யாயின் பிரஹ்மப் பிரதிபிம்ப ஜீவனுக்கும் பொய்ம்மையடை

லென்னுந் தோஷமாமென்னற்க; பிரதிபிம்ப ஜீவாதிஷ்டானத்திற்குச் சத்தியத்தன்மை யுண்மையானே முக்தியை யடையுந் தன்மை கூடலின் என்பதாம்.

பிரதிபிம்பம் ஆடி முதலியவற்றில் முகச் சாயையின் விசேஷ ரூபத் தன்மையானே சத்தியமே யாமெனச் சிலர் சம்மதிப்பர் அது கூடாதாம் சாயையென்பதோ தேகாதிகளின் அவ்வவ்வவயவங்களால் ஒரு தேயத்தில் வியாபித்த ஒளி தடுக்கப்படின் ஆண்டத் தேயத்தில் கிடைத்தவடிவையுடைய இருளேயாம். முத்துமாணிக்காதிப் பிரதிபிம்பமாகிய இருளொடு முரணிய வெளுப்புச் சிவப்பு முதலிய ரூபமுடையதற்கு இருள்வடிவச் சாயைத்தகைமை பொருந்ாதன்றே, இருளுருவச் சாயையற்ற அழன் முதலியவற்றின் பிரதிபிம்பத்திற்கு அவ்வாறுந் தகைமை பொருந்தவும் மாட்டாதாம். அற்றேலாயின் பிரதிபிம்பரூபச் சாயைக்குத் தமரூபத் தகைமை அசம்பவமாயின் வேறு திரவியத்தன்மை யுளதாகுக; சித்தமான திரவியத்தில் அடங்காமற் போகவே தமத்தைப் போல வேறு திரவியமெனக் கற்பித்தல் கூடலின் எனின்? அவ்வேறு திரவியமென்கொல்! தோற்று நின்ற ரூபபரிமாண சம்ஸ்தான விசேஷ உண்முகத்தகைமை முதலிய தருமங்களோடு கூடியதா? அவையற்றதா? கடையதேல் அவ்வேறு திரவியத்தானே ரூபவிசேஷாதிபொருந்திய பிரதிபிம்பத்தோற்ற நிர்வாகம் ஆகாதென அதனைக் கற்பித்தல் வீணேயன்றே. முதலதேலோ, யாங்ஙனம் அற்ப பரிமாணமுடைய ஒன்றன் கண்ணொரேபோழ்தில்கலப்பின்றியே தோற்றுநின்றமகத்துப் பரிமாணங்களோடு கூடியவதனப் பிரதிபிம்பங்கள் அநேகங்கட்குச் சத்தியத்தகைமை நிர்வாகமாம். யாங்ஙனந்தான், நெருங்கிய அவயவம் நிறையப்பெற்றுள்ள ஆடியில் அவ்வாறே

திகழ்ந்து கொண்டிருப்ப அதனுள் தாடை மூக்கு முதலிய அநேகந்தாழ்வுயர்வுகளோடு கூடிய தேயமுடைய வேறு திரவியத்தின் உற்பத்தியாம். மேலும், வெளுப்பு மஞ்சள் சிவப்பு முதலிய அநேக வர்ணத்தியுடைய பிரதிபிம்பத்தினது உற்பத்தியுளதாகவே ஆடியிடையிலிருப்பதாகிய அதன் சமீபித்ததாகிய அத்தகையகாரணமின்றன்றோ. உபாதியினிடையில்விசிராந்தியோக்கியமாகிய பரிமாணமுடைய பிரதிபிம்பங்கட்கே மகாபரிமாண ஞானமும் அத்தகைய தாழ்வுஉயர்வு முதலியவற்றின் ஞானமும் மயலேயாம். பூர்வம்போல இருக்குந் தர்ப்பண அதனவயவ அவஸ்தான அவிரோதத்தானே அத்தகைய பிரதிபிம்ப உற்பாதன ஆற்றலுடையதாகவும் சிறிது காரணம் கற்பிக்கலா மெனக்கூறின்? இப்பி வெள்ளியும் உண்மையேயாகுக, ஆண்டும் இப்பியில் முன்போல இருப்பவே அதன் முதான்மியத்தை யடைவுற்ற வெள்ளியை யுண்டாக்கும் ஆற்றலை யுடைய சிறிது காரணம் இனிது கற்பித்து அவ்வெள்ளிக்குத் தோஷத்தன்மையபிமத காரண சகாயம்பெற்ற இந்திரிய கிராகியத் தகைமை நியமவர்ணனங் கூடலின். சுக்திரஜதம் அசத்தியம் பிரதிபிம்பம் சத்தியம் என அரைக்கிழவி நியாயத்தாலாவதென்னே! அவ்வாறாயின் வெள்ளியெனக் காணப்பெறுநின்ற இப்பியை அழலிவிடில் வெள்ளிபோல நெகிழ்ச்சியினடைவா மென்னற்க, அக்கினி கஸ்தூரி முதலியவற்றின்பிரதிபிம்பத்திற்கு வெம்மைமணம்முதலியவையற்றிருப்பதே போல இப்பி வெள்ளிக்கு நெகிழ்ச்சி யோக்யதை யற்றமை கூடலின். இனி, இது வெள்ளியல்ல பொய்யாகவே வெள்ளி விளங்கியது என யாவரும் சம்மதிக்கும் பாதத்தானே இப்பிவெள்ளி உண்மையன்றாம் எனக்கூறின்? ஆடியில் முகமில்லை பொய்யாகவே ஈண்டுத் தர்ப்பணத்தில் முகமிலங்கியது

என்பதாதி சர்வசித்த பாதத்தானே பிரதிபிம்பமும் அசத்தியம் என்பதாகவே பொருந்தும். ஆகையாற் பிரதிபிம்ப சத்தியத்வவாதம் அசங்கதமேயாம்.

அற்றேல் அதன் பொய்ம்மை வாதமும் பொருந்தாதாம் இப்பிவெள்ளியிற்போல அன்வய வியதிரேக சாலியாகிய யாதேனு மொரு காரணமாகிய அஞ்ஞானத்தின் நிவர்த்தகமாகிய ஞானத்தின் நிரூபணங் கூடாமையின்.

ஈண்டுச் சிலர்:—முற்றிலும் அதிஷ்டான ஞானமிருந்த பின்னரும் உண்டாகா நின்ற பிரதிபிம்ப அத்தியாசத்தில் அதிஷ்டானத்தை மறைக்கும் அஞ்ஞானம் உபாதானமன்றாம், அதிஷ்டான விசேஷாங்கிச ஞானம் நிவர்த்தகமுமன்றாம், ஆயினும் அதிஷ்டான அஞ்ஞானத்திற்கு ஆவரண சக்தி யங்கிசத்தால் நிவிருத்தியிருந்தபோதினும் விக்ஷேபசக்தி யங்கிசத்தானே தொடர்பு சம்பவித்தலின் அதுவே உபாதானமாம். பிம்ப உபாதி சந்நிதி நிவிருத்தியோடு கூடியதாகிய அதிஷ்டான ஞானம் உபாதானத்தோடு கூடிய அதனது நீக்கமாம் என்பர்.

மற்றையரோ:—ஞானத்திற்கு விக்ஷேபசக்தி யங்கிசத்தை விடுத்து ஆவரண சக்தி யங்கிச மாத்திர நிவர்த்தகத்தைகைமை சுவாபாவிகமாகாதாம் பிரஹ்ம ஞானத்தானே மூலாஞ்ஞானத்தின், சுக்தியாதி ஞானத்தானேஅவஸ்தாஞ் ஞானத்தின் ஆவரண சக்தி யங்கிச மாத்திரம் நிவிருத்தியாகவே அதனது விக்ஷேப சக்தியினுனே எப்போதும் தொடர்பு வழக்காதலின். பிம்போபாதி சந்நிதிரூப விக்ஷேபசக்தி யங்கிச நிவிருத்திப்பிரதிபந்தகத்தா லாக்கப்பெற்றதஃதாமென்னற்கு; பிம்போபாதி சந்நிதானத்தின் முன்பே பிம்பமாகிய சைத்தி

முகத்திலேனும் தர்ப்பண சம்சர்க்காதி யுபாவமுறவே தர்ப்பணத்தில் சைத்ரமுகா பாவத்திலேனும், பிரத்யக்ஷத்தாலுணரப்பெற்ற வழி விக்ஷேப சக்தி யம்சத்திற்கும் நிவிருத்தி யின்றியமையாத தாகவே அக்கால் அவற்றின் சந்நிதானமுற்ற வழி உபாதான மின்மையானே பிரதிபிம்ப மயலின்மை வழக்காதலின். ஆகையால் மூல அஞ்ஞானமே பிரதிபிம்ப அத்தியாசத்திற்குபாதானமாம். ஈண்டும் கூறியதோ ஷல்லியத்தன்மை யென்னற்க; பாகிய விஷயத்தில் விருத்தி பரிணமங்கட்குத்தத்தம் விஷய அவச்சின்ன சைதன்யப் பிரதேசத்தில் மூலாஞ்ஞான ஆவரண சக்தி யங்கிசத்தைத் திரஸ்கரிக்குந் தன்மை யிருந்தபோதினும் அதனது விக்ஷேபசக்தி யங்கிச நிவர்த்தகத் தன்மை யின்மையின்; மாறாயினோ அதன் பிரதேசத்திருக்கும் வியாவகாரிக விக்ஷேபங்கட்கும் விலயமாதலின். பிரதிபிம்பத்திற்கு மூலாஞ்ஞான காரியத் தகைமைபோல் வியாவகாரிகத் தன்மையினடைவாமென்னற்க; அவித்தையினும் வேறாகியதோஷ அஜன்னியத்தன்மைக்கு வியாவகாரிகத்தன்மைப் பிரயோஜகத் தன்மை யுண்மையின். பிரகிருதத்திலோ அதனினும் வேறாகிய பிம்ப உபாதி சந்நிதான தோஷ இருப்பினானே பிராதிபாசிகத்தகைமை கூடலின் இவ்வாறாகவேபிம்போபாதி சந்நிதி நிவிருத்திசகாயத்தோடுகூடியதாயினும் அதிஷ்டான ஞானம்பி ரதிபிம்பாத்தியாச அநிவர்த்தகமென்னும் வழக்காம், அதன் மூலாஞ்ஞான நிவர்த்தகத் தன்மை யின்மையின் என்னற்க; விரோத மின்மையின். பிரஹ்ம அஞ்ஞான அநிவர்த்தகத் தன்மை யிருந்தபோதினும் அதனை யுபாதானமாகவுடைய பிரதிபிம்ப அத்யாச விரோதி விஷயகத் தன்மையானே அதிஷ்டான உண்மை ஞானமாகிய பிரதிபந்தக மின்மையோடுற்றதற்கு அதன் நிவர்த்தகத் தன்

மை கூடலின். அவஸ்தாஞ்ஞான உபாதானத்தன்மைப் பக்ஷத்தினும் அதற்குப் பிராசீன அதிஷ்டான ஞான நிவர்த்திதமாகிய ஆவரண சக்தியையுடைதற்குச் சமானவிஷயத் தன்மைப் பங்கத்தால், பிரதிபந்தகாபாவகாலீன அதிஷ்டான ஞானத்தானே நீக்குவதற்கு முடியாமையானே பிரதிபிம்பாத்தியாச மாத்திரத்திற்கே அதனால் நிவர்த்தியாந்தன்மையைக் கோடலின். அல்லது தனதுபாதான அஞ்ஞான நிவர்த்தகமாகிய பிரஹ்மஞானத்தால் நிவர்த்தியாவதிலே இவ்வத்தியாச முதளாகுக. வியாவகாரிகத் தன்மையினடைவோ அவித்தையினும் வேறாகிய தோஷ ஜன்னியத்தன்மையானே மறுக்கப்பட்டதெனக்கூறுவர்.

## 24-வது கனப்பொருளின திஷ்டான நிரூபணம்.

இவ்வாறு கன அத்தியாசத்திற்கும் அவஸ்தாரூப அஞ்ஞானசூனியமாகிய அநவச்சின்ன சைதன்யத்திலேனும் அகங்கார உபகித சைதன்யத்திலேனும் அத்தியாச மாதலினானும் "சுழுப்தி யெனப்பெயரியதமஅஞ்ஞானமாகிய எவ்வுபாதானம்கன நனக்கட்கு" என்னும் ஆசிரியருடைய கனநனப்பிரபஞ்சங்களின் ஏக அஞ்ஞானகாரியத் தகைமையின் கூற்றினானும்; மூலாஞ்ஞான காரியத்தன்மையானே தனது உபாதான நிவர்த்தகமாகிய பிரஹ்ம ஞானமொன்று கொண்டே பாத்தியத்திற்கு அவித்தையினும் வேறாகிய நித்திரைமுதலிய தோஷஜன்னியத் தன்மையானே பிராதிபாசிகத் தன்மை யெனச் சிலர் கூறுநிற்பர்.

மற்றையரோ "கனவிற்கண்ட தேர்முதலிய இவை நனவில்பாதிக்கவும் படுகின்றன" என்னும் ஸ்ரீமத்பாடியக் கூற்றினும்; "அவித்தை வடிவப்பந்த நிவர்த்தகத் தன்மை யுண்மை

யின், நனுப்போதம் போலும்" என்னும் விவரண தரிசனத் தானும்; கிளம்பியவனுக்குக்கனுப்பொய்ம்மையின் அனுபவத் தானும், நனுப்போதம் கனுத்தியாச நிவர்த்தகமாம் எனப்பிர ஹ்மஞான இதரஞான பாத்யத் தன்மையானே அதற்குப் பிராதிபாசிகத் தகைமையாம். அதிஷ்டான மெய்ம்மையைக் கோசரியாததும் தனதுபாதான அஞ்ஞான அநிவர்த்தகமு மாய ஞானம் யாங்ஙனம் அத்தியாச நிவர்த்தகமாகும் என உரையாடற்க; இரஜ்ஜுசர்ப்ப அத்தியாசத்திற்குத் தனது பாதான அஞ்ஞான நிவர்த்தக அதிஷ்டான உண்மைஞானத் தாற்போல ஆண்டே தன் பின்னருண்டாய தண்ட மயலா னும் நிவிருத்தி காண்டலின் என்பர்.

மற்றையாரோ:—நனுப்போகத்தைக் கொடுக்குங் கர்மம் உபரமமாகவே நனுப்பிரபஞ்சத்தைக் காணும் பிரதிபிரம்ப ரூபமாகிய வியாவகாரிக ஜீவனையும் அவன் கண்ட நனுவுலகை யும் மறைத்துண்டாகாநின்ற நித்திரை வடிவ மூலாஞ்ஞானத் தின் அவஸ்தாபேதம் கனுப் பிரபஞ்ச அத்தியாச உபாதான மாம் மூலாஞ்ஞானமாகாதாம். நித்திரைக்கு அவஸ்தாஞ் ஞான ரூபத்தன்மையுண்மையில் அளவையின்றுமென்னற்க; மூல அஞ்ஞானத்தால் மறைபட்டவனும் நனுப்பிரபஞ்சத் தைக் காணும் வியாவகாரிக ஜீவனும் "மனுஷன் யான் பிராஹ் மணன் யான் தேவதத்த புத்திரன்யான்" என்பதாதியினானே தனது வடிவத்தை ஐயந்திரிபற அபிமானித்தவனும், அத னது நீள்பயில்வினானே ஷை தேவதத்த புத்திரன் பொருட்டு எப்போதும் மறைபடாத ஏகரூபனும், அனுபவிக்கப்பட்ட தனது பிதாமகமரணாதி நனுப்பிரபஞ்ச விருத்தாந்தமுடைய வனும் ஆகியவனுக்குக் கனுசமயத்தில். யாதேனுமோரற்

ருலோ ஆவரணமின்மையின் நனவிற்போலக் கனவிலும் "புலி யான், சூத்திரன்யான்யஞ்ஞதத்த புத்திரன்யான்" என்பதாதி மயற்கும், தனது பிதாமகன் ஜீவித்திருக்குந்தசை முதலிய மயற்கும், அபாவ வழக்கானே நித்திரைக்கே அக்காலத்துண்டாய வியாவகாரிக ஜகத் ஜீவ ஆவரகமாகிய அஞ்ஞான அவஸ்தாபேத ரூபத்தன்மை சித்தித்தலின். இவ்வாருயின் ஜீவனுக்கும் ஆவிருதத் தன்மையுண்மையின் கனவுலகைக் காண்போ னின் றென்னும் வழக்காம் என்னற்க; கனப்பிரபஞ்சத்தோடு காண்போனாகிய ஜீவனுக்கும் பிராதிபாசிக அத்தியாசத்தான். இங்ஙனமாகவே மீண்டும் நனப் போகந்தரும் கருமத்தாலுண்டாய போத மெழவே வியாவகாரிக ஜீவசொரூப ஞானத்தான் தன துபாதான நித்திரைவடிவ அஞ்ஞான நிவர்த்தகத்தானே கனப் பிரபஞ்சபாதமாம். இங்ஙனம் அதைக்காணும் பிராதிபாசிக ஜீவனுக்கும் அதனுற்பாதமாகவே கனவில் கரியைக் கண்டேன் என்னும் அனுசந்தானம் உளதாகாதாமென உரையாடற்க; வியாவகாரிக ஜீவன்பால் பிராதிபாசிக ஜீவனுக்கு அத்யஸ்தத் தன்மையிருத்தலின் அதன் அனுபவத்தால்வியாவகாரிக ஜீவனுக்கு அனுசந்தானத்தை யங்கீகரிக்கினும் அதிப்பிரசங்க மின்மையின் என்பர்.

அற்றேல் அநவச்சின்ன சைதன்யத்திலேனும் அகங்கார உபகித சைதன்யத்திலேனும் கனவுலக அத்தியாசம் என முன் மொழியப்பெற்ற இருபக்கங்களும் பொருந்தாவாம், முதலதில் கனயானை முதலியவைகள் அகங்கார உபகித சாக்ஷியினின்றும் வேறு தேயத்திருத்தலினனே சுகாதிகளைப் போல அந்தக் கரணவிருத்தி சம்சர்க்கத்தை யவாவாது சாக்ஷியாற் பிரகாசமாவதற்கு விழிமுதலியவை யுபராமத்தை யவா

ந்திருத்தலின் விருத்தியினுதயஞ் சம்பவியாமையின் அது னது சம்சர்க்கத்தை யவாவிச் சாக்ஷியினுனே பிரகாசமாவதற் குக் கூடாமையின். இரண்டாவதில் இது வெள்ளியென்பதே போலயான் யானை யெனவேனும், யான் சுகியென்பதேபோல யான் யானை யுடையேன்எனவேனும் அத்தியாசமா மெனும் வழக்காம்.

ஈண்டுச் சிலர் முதற் பக்ஷத்தைப் பொருத்துமாறு:— அகங்கார அநவச்சின்ன சைதன்யம் தேகத்தின் வெளியில் கனுப்பிரபஞ்சத்தின் அதிஷ்டானமென அங்கீகரிக்கப் படுவதி ன்றும்; மற்றே அதனுள்ளேயாம், இதனுனே காணப்பெற்ற பரிமாணத்திற்குத் தகுதியாகிய தேச அடைவின்மையின் கனு யானை முதலியவற்றிற்கு மாயாமயத் தன்மை கூறப்படு கின்றது. இவ்வாருகவே அந்தக் கரணத்திற்குத் தேகத் திற்கு வெளியில் சுதந்திரத் தன்மை யின்மையின் நனவில்பா கிய சுக்தியித மங்கிசகோசர விருத்தி யுற்பத்தியின் பொ ருட்டு விழிமுதலிய வற்றையவாவினும் தேகத்துள் சுதந் திர அந்தக்கரணத்திற்குச் சுயமாகவே விருத்தி சம்பவித்த லின்தேகத்துள் அந்தக்கரணவிருத்தியபி வியக்தமாகியஅநவச் சின்னசைதன்யத்திற்கு அதிஷ்டானத் தன்மைபோல் யாதொ ருகூடாமையு மில்லையாம். இதனுனே நனவின் கண் சம்யோக ஜன்னிய விருத்தியபிவியக்த சுக்தியித மங்கிசாவச் சின்ன சைதன்யத்திருக்கும் அவித்தை வெள்ளி வடிவமாக விவர்த் தப்படுவதேபோலக் கனவிலும் தேகத்துள் நித்திரை முதலிய தோஷ உபகிதமாகிய அந்தக்கரணவிருத்தியில் அபிவியக்த சைதன்யத்திருக்கும் அவித்தை அதிருஷ்டத்தானுற்போ தப்பட்ட நானுவிஷய சம்ஸ்கார சகிதமாய்க்காகாரத்தா

னே விவர்த்தமாகுக வென விவரண உபந்யாசத்தில் பாரதீ தீர்த்தருடைய வசனமாம்.

மற்றையரோ :—அநவச்சின்ன சைதன்யம் விருத்தி யபிவியக்தமாய்க் கனுவுலகினதிஷ்டான மாகாதாம். சப்த மூலமற்ற அநவச்சின்ன சைதன்யகோசர விருத்தியுதயஞ் சம்பவியாமையின் அகங்காராதியவச்சின்ன சைதன்யத்தின் கண்ணே அகமாகார விருத்தி யுதய தரிசனத்தான். ஆகையால், தானுகவே அபரோக்ஷமாகிய அகங்காராதியநவச்சின்ன சைதன்யம் அதனதிஷ்டானமாம். இதனுனே, சம்க்ஷேபசாரீரகத்தில்:—"அபரோக்ஷரூப விஷயப்பிரமதீ, அபரோக்ஷவிடயத்தை யவாவியே யாகும்; மனத்தாற்றன்னுல் விழியாலேனும், நனித்தாய்க் கனுமயலாதியில் வெளியாம்" என்னும் சுலோகத்தானே அபரோக்ஷ அத்தியாசம் அவாவிய அதிஷ்டான அபரோக்ஷத்தன்மை சிலபால் சுயமாகவும் சிலபால் மானச விருத்தியினுனும் சிலபால் புறக்கரண விருத்தியினுனும் அறைந்து "அபரோக்ஷந்தானேயாஞ் சித்ததனில், மயலாயினு முருவடிவமேயாகும், கனவின் முகு முகு மனநிமித்தமதாய், விழியதின்றியும் விடயந்தன்னிடமே" "வெள்ளி முன் மயற்கண் கண்டதிலெஙனே, அஙனே மனமறி பொருளினுங்காக்ஷி, வலியால் விணிலுருக் கற்பனை மயல்தான், வெண்மையே முதலாம் வேற்றுமையானே, பலபலவகையாய்ப் பார்த்திடு மினிதே". என்பனவாதிய பிறசுலோகங்களானே கனுத்தியாசத்தில் தானுகவே அதிஷ்டான அபரோக்ஷத் தகைமை யுளதாமென உதாகாணிக்கப்பட்டதாம். அகங்கார அநவச்சின்னசைதன்யமாத்திரம் மறைபட்டதுஎன விருத்தியின்றி அதனபி வியக்தியாகாதாமென

அறையபற்க ; பிரஹ்ம சைதன்யமே மறைபட்டதாம் அவி த்தையின் பிரதிபிம்ப ஜீவசைதன்யம் அகங்காராவச்சின் னமானபோதினும் மறைபடாததாம் என அங்கீகரித்துண் மையின். இவ்வாறாகவே அகங்கார அவச்சின்ன சைதன் யத்தில் கனுயாஜ்ஞ முதலியவை அத்யசிக்கப்பட்டவை அதன் சமவியாபகமாகிய அதிஷ்டான கோசர அந்தக்கரணவிருத்தி யாக்கிய அபேத அபிவியக்தியினுனே பிரமாத்ரு சைத ன்யத்திற்கும் இதைக் காண்கின்றேன் என்னும் வியவகார மாம் என்பர்.

மற்றையரோ,—இரண்டாவது பக்ஷத்தைப் பொருந்து மாறு :— அகங்காராவச்சின்ன சைதன்யம் அதிஷ்டானம் என அகங்காரத்திற்கு விசேஷண பாவத்தானே அதிஷ்டான கோடியிற் பிரவேசம் அங்கீகரிப்பதில்லை ; மற்றே, அகங் கார உபகிதமாகிய அதன் பிரதிபிம்பரூப சைதன்யமாத்திரம் அதிஷ்டானமாம். ஆகையால் "யான் யானையன்று" என்ப தாதி யனுபவப் பிரசங்கமாம். இவ்வாறே சுக்திபிரஜதமும் சுக்திபிதமம்ச அவச்சின்ன சைதன்யப் பிரதிபிம்பமாக விரு த்தியோடுகூடிய அந்தக்கரணத்திருக்கும் அதில் அத்தியசிக் கும். சர்வசாதாரண சுக்திபிதமம்சாவச்சின்ன பிம்பசைதன் யத்தில் அதனது அத்தியாசத்தில் சுகாதிபோல அனன்ய வேத்யத்வ அபாவ வழக்காதலின் என்பர்சிலர்.

சிலரோ பிம்பசைதன்யத்தின் கண்ணே அத்யாசத்தை யங்கீகரித்து எதனது ஞான உபாதானத்தை யுடையதுயாதோ அதற்கே பிரத்யக்ஷம் வேறு ஜீவனுக்கின்றாம் என அனன்ய வேத்யத்யவம் கூறுவர்.

## 25-வது கனாப்பொருளனுபவப் பிரகாரம்.

அற்றேல், சுக்திரஜத அத்தியாசத்தில் சாக்ஷாத்த்வ அனுபவமானது நேரேயேனும் அதிஷ்டான ஞானவாயிலாக அதனபேக்ஷையாலேனும் பொருந்தப்படுகின்றது கனாக்கய முதலியவற்றின் சாக்ஷாத்த்வானுபவம் யாங்ஙனம் பொருந்தத் தக்கதாகும். உரைக்கப்படுகின்றது :— ஆண்டு அதனைப் பொருந்தற்பொருட்டுக் கனாவுடல்போல விடயம் போலப் பொறிகட்கும் பிராதிபாசிக விவர்த்தம் விளம்பமுடியாதாம். பிராதிபாசிகத்திற்கு அஞ்ஞான சத்வமின்மையின் அதீந்திரியங்களாகிய இந்திரியங்கட்குச் சத்வமாயின் அஞ்ஞாநசத்வமே கூறவேண்டலின். வியாவகாரிகமாகிய இந்திரியங்கட்கே தன் தன் கோளகத்தினின்றும் கிளம்பிக் கனாத்தேகத்தைப்பற்றித் தன் தன் விஷயக்கிராககத் தகைமையைக் கூறுவான் முடியாதாம். கனாச்சமயத்தில் அவைகட்கு வியாபாரமின்மை வடிவை உபரதி கேட்கப்படுதலின். வியாவகாரிகஸ்பர்சன இந்திரியத்திற்குத் தனக்குத் தகுதியாகிய வியாவகாரிகதேக அடைவு ரகித உட்டேகத்தில் தன்னினும் அதிக பரிமாணமுடைய கனாத்தேக முழுமையும் வியாபிக்கும்பான்மை கூடாமையின். அதனேகதேசத்தைப்பற்றின் அதற்கு கனவில் நீர் மூழ்கலாலுதித்த சர்வாங்க சீதஸ்பரிசத்தை அறிய முடியாமையின். இதனானே கனவில் நனவிந்திரியங்கள் உபரதியாயினும் தைஜசனுடை வியவகாரத்திற்குப் பொருந்துவனவாய் சூக்ஷ்மசரீர அவயவ பூதங்களாய சூக்கும இந்திரியங்கள் உளவாமென அவற்றானே கனாப்பொருள்கட்கு இந்திரிய விஷயத்தன்மையாமெனப் பிரதியாதிக்கும் சங்கையும் நீக்கப்பட்டதாம். ஜாக்ரதிந்திரியத்தினும் வேறாகச்

சூக்ஷ்ம இந்திரிய அப்ரசித்தியாதலின். மேலும் "ஈண்டிப் புருடன் சுயஞ்சோதியாயுளன்" என நனவில் ஆதித்தியாதி ஜோதி கலந்துண்மையானும் சக்ஷுராதி விருத்தி சஞ்சரித்தலி னும் ஆன்மாவினது சுயஞ்சோதித்தன்மை பிரித்தறிய முடியாதாம்; எனக்கனவை முன்னிட்டு ஆண்டு ஆன்மாவிற் குச் சுயஞ்சோதித் தன்மையைப்பிரதிபாதிக்கின்றது; அன்று யினே அதற்கு எப்போதும் சுயஞ்சோதித்தன்மை யுண் மையானே ஈண்டு என்றது வீணாதலின். ஆண்டுக் கனவினும் சக்ஷுமுதலிய விருத்திசஞ்சாரங் கற்பிக்கப்படின் அக்கால் ஆண்டும் நனவிற்போல அதற்குச் சுயஞ்சோதித்தன்மை பிரிக்கமுடியாதாம் என உதாகரணமாக்கிய சுருதி துன்புறும். அற்றேல் கனவில் சக்ஷுமுதலியவற்றின் உபரமத்தைக் கற் பித்தபோதினும் அந்தக்கரணம் உபரமியாதிருக்கும் எனப் பரிசேஷ அசித்தியாதலின் சுயஞ்சோதித்தன்மை விவேக மின்றும்? இவ்வாறியும்பற்க, "கர்த்தா சாஸ்திரார்த்தமுடை மையின்" என்னுமதிகரணத்தில் (ஆன்மாக் கர்த்தாவாகத் தகுதியதாம் ஆகவே, கர்த்தா விஞ்ஞாதாத்மா புருஷன் என் பதாதி சாஸ்திரத்தின் அர்த்தமுடைமை கூடலின் என்பது சூத்திரப் பொருள்) நியாய நிர்ணயத்திற்கூறிய பிரகாரம் சக்ஷுராதி வேறு கரணத்தை யபேக்ஷியாத அந்தக்கரணத் திற்கு ஞானசாதனத்தன்மையின்மையினானேனும், தத்வப் ரதீபிகையிற் கூறிய பிரகாரம் கனவில் அதற்கே கஜாதியாகா ரமாகப் பரிணமத்தால் ஞானத்திற்கு விஷயமாக நிலைபெறு தலின் அக்கால் ஞானசாதனத்தன்மை கூடாமையினானே னும், பரிசேஷங் கூடலின். கனவில் அந்தக்கரண விருத்தி யிலதாயின் கிளம்பியவனுக்குக் கனவிற்கண்ட கஜாதியின் அநுசந்தானங் கூடாமையாம் என்னற்க; துயிலிற்றுணியப்

பெற்ற அவித்தை விருத்தியானே அது கூடலின், துயிலில் அவ்வவஸ்தை யுபகிதமாகிய சொரூபசைதன்யமே அஞ்ஞான சுகாதிகளை யொளிர்விப்பதாம்,"கிளம்பியவனுக்கு அனுசந்தானம் உபாதிபூத அவஸ்தை யொழிதலாலுண்டாம் சமஸ்காரத்தானே யென்னும் வேதாந்த கௌமுதியபிமத துயிலில் அவித்தை விருத்தியபாவ பக்ஷத்தில், ஈண்டும் கனக்கயமுதலியவற்றை இலக்கும் சைதன்ய உபாதிபூத கனவவத்தை விநாசஜன்யசமஸ்காரத்தால் அனுசந்தானங்கூடலினானும் அல்லது, "அவ்விதுசத்வம் எதனானேகனவைக் காண்கின்றனனோ" (சத்வம்-அந்தக்கரணம்)என்பதாதி சுருதியினானே உளதாகுக கனவிலும் கற்பதருக்கூறிய முறையேகனயானை முதலியவற்றைக்கோசரிக்கும் அந்தக்கரணவிருத்தி. இத்துணையானே பரிசேஷஅசித்தியாமே யென்னற்க; யானெனக்கவரப்பெற்றதாகிய அந்தக் கரணத்திற்கு முற்றிலும், ஜீவ ஐக்கியமாக அத்தியஸ்தமாதலினானே உலகதிருஷ்டியால் அதற்கு அதினினும் வேறாகப் பிரசித்தியாகாமையின் பரிசேஷப்பொருட்டுச் சக்ஷுராதி வியாபார அபாவ மாத்திரத்திற்கே அபேக்ஷிதத்தன்மையுண்மையின் பிரசித்த திருசிய மாத்திரம் திருக்கு இலக்கத்தகுதியது என்னும்நிச்சயமிருத்தலினானே பரிசேஷப்பொருட்டு அன்னியத்தைதயவாவாமையின். ஆகையால், எல்லாவாற்றானும் கனவில் விழிமுதலியவற்றின் வியாபார அசம்பவத்தால் கனக்கஜமுதலியவற்றில் சாக்ஷுஷத்தன்மை முதலியவற்றின்அனுபவம்மயலேயாம் அற்றேல்,கனவிலும் விழியைத் திறப்பில் கஜாதி யனுபவம் அதை மூடிவில்லை யென நனவிற்போலக் கஜாதி யனுபவத்திற்கு விழியைத் திறத்தன் முதலிய செய்கை புலப்படுகின்றதே யெனின்? விழியால் யானை முதலியவற்றைக்காண்கின்றேன் என்னும் அனுபவம் போல

இதுவு மொருகனுமயலாக ஆகும். சுவப்நகஜாதி யனுபவமாகிய கேவல சாக்ஷிரூபத்தில் சக்ஷுராதியின் செய்கையேனும் அது செய்விக்கும் விருத்தியேனும் அத்தியசிக்கும் என்பது யாதோ அது மயலேயாம். பொருந்தாததாயினும் மயல்மாவை எதுபோற்றுன் செய்யாது விசேஷமாக நித்திரை வடிவமாய்ப் பரிணதமாம், எதன் மகிமையானே கனவிற்றோர் தோற்றுமோ கணத்தில் மனுடன்றேற்றுவனோ அவன் கணத்திற் பூர்ண யாவனே. கனுக்காண்போனுக்கும் பூர்வாபர விரோத அனுசந்தான மில்லையாம் ஆகையால் உடன்பாடு முதலிய செய்கையின்றேற்றம் துல்லியமாயினும் நனுக்கஜாதி யனுபவமே சக்ஷுமுதலியவற்றினின்று முண்டாயதாம், சுவப்நகஜாதி யனுபவமன்றும்.

திருஷ்டி சிருஷ்டி வாதியரோ கற்பித்ததிற்கு அஞ்ஞாத சத்வம் பொருந்தாதாம் என முழு நனுவுலகிற்கும் திருஷ்டி சம சமயத்தில் சிருஷ்டியைக்கொண்டு கடாதிதிருஷ்டிக்குச் சக்ஷு சந்நிகர்ஷச் செய்கையின்றேற்றம் திருஷ்டியின் முன்கடாதியின்மையானே பொருந்தாமல் கனவிற்போலவே பொருத்திவைப்பவராய் நனுயானை முதலியவற்றின் அனுபவமும் சாக்ஷுஷமன்றுமென்பர்.

## 26-வது சிருஷ்டி கற்பக நிரூபணம்.

அற்றேல் திருஷ்டிசிருஷ்டியைப்பற்றி முழுநனு வுலகிற்கும் கற்பிதத் தகைமையை யங்கீகரிக்கின் அதனது கற்பகம் யாது? உபாதியற்ற ஆன்மாவா? அவித்தையுபகிதமா? ஆதியது ஆகாதாம், மோக்ஷத்திலும் சாதனந்தர நிரபேக்ஷயோடு கூடிய கற்பகமிருத்தலின் பிரபஞ்சம் தொடரவே சமுசார துல்லிய வழக்காதலின். இரண்டாவது மேலாதாம்:—அவித்

தைக்கும் கற்பனீயத் தன்மை யுண்மையின் அதன் கற்பனை யின் முன்னரே கற்பக சித்தி கூறவேண்டியிருத்தலின். ஈண்டுச் சிலர் கூறுவதாவது:—பூர்வ பூர்வகற்பித அவித்தையுபஹிதம் உத்தர உத்தர கற்பகமாம். இது முதற்றன்மையின்மையினும் கற்பக கற்பனைப் பிரவாகத்திற்கு வரம்பின்றி யோடற்றோடமில்லையாம். அவித்தைக்கு அநாதித்தகைமை யங்கீகரித்துண்மையின் இப்பிவெள்ளிபோலக் கற்பிதத்தகைமை பொருந்தாதாம்; அன்றாயின் சாதி அநாதியென்னும் விபாகம்கூடாமையின் எனக் கூறற்க; கனவிற் கற்பியா நின்ற கோபுராதி சிறிது முற்சித்தத் தன்மையானே கற்பிக்கப்படும், சிறிது அக்காலுண்டாக்கப்படுந் தன்மையானே கற்பிக்கப்படும். இவ்வாறே நனவிலும் சிறிது கற்பிக்கப்படுவது சாதித்தன்மையானே கற்பிக்கப்படும், சிறிது மாறாகவென அத்துணையானே சாதியநாதிவிபாகங் கூடலின். இதனானே காரியகாரண விபாகமும் வியாக்கியானிக்கப்பட்டதாகும் என்பதாம்.

மற்றையரோ:—உண்மையாகவோ அவித்தை முதலியவை யநாதி யேயாம், ஆண்டுத் திருஷ்டி சிருஷ்டி அங்கீகரிப்பதின்றாம்; மற்றோ அதனினும் அயலாய பிரபஞ்ச மாத்திரத்தில் என நிகழ்த்துவர்.

அற்றேல் இவ்வாறாயினும் சுருதி மாத்திரத்தாற் றோற்றப்படும் வியோமாதி சிருஷ்டி அதன்முறை முதலியவற்றைக் கற்பிப்பது யாது? யாதொன்றுமின்றாம், ஆயின் "ஆன்மாவினின்றும் ஆகாயமுண்டாயிற்று" என்பதாதி மறைகள் என் விடயத்தனவாம்? நிஷ்பிரபஞ்சப் பிரஹ்மாத்மைக்கியத்தை விடயமாகவுடையனவாமெனஅறிதி. அத்தியாரோப அபவாதங்களால் நிஷ்பிரபஞ்சப் பிரஹ்மப்பிரதிபத்தி யுண்டாகின்றது

என அந்த ஞான உபாயமாகச் சுருதிகளில் சிருஷ்டி பிரளய உபந்நியாசமாம்; இன்றுங் கருத்தானே யென்னும் ஸ்ரீமத்பாடியாதி உத்கோஷமாமென்க. ஆயின், கருத்தின்றேல் வியத்பிராணபாதங்களில் விண் முதலியவற்றின் சிருஷ்டி அதன் முறை முதலியவற்றை விஷயம் செய்யும் சுருதிகட்குப் பரஸ்பர விரோத பரிஹாரப் பொருட்டுமுயல்கைவீணும். வீணன்றும். நியாய விற்பத்தியின் பொருட்டுக் கருத்தைகொண்டு அதன் முயல்கை கூடலின். சாஸ்திர தர்ப்பணத்திற் கூறப்பட்டுமுளது:—"மறைகட்குச் சிருஷ்டியின் கருத்தை மருவியே, இஃதீண்டியம்ப லாயது பிரம, ஆன்மைக்கிய பரத்தன்மையிஞுே, அவைகட்கஃதின்றே யாமன்றே" என்பதாம். சோதிட்டோமாதி சுருதியால் போதிக்கப்பட்டதன் அனுஷ்டானத்தால் பலசித்திகளுச்சுருதியாற்போதிக்கப்பட்ட அனுஷ்டானத்தாலுண்டாய பலசம்வாதநுல்லியமேயாம், சோதிட்டோமாதிசுருதிகட்கும் சித்தசுத்தி வாயிலாய்ப் பிரஹ்மத்திற் கருத்திருருத்தலின் அப்ராமாண்ய மின்றென்பதாதி திருஷ்டி சிருஷ்டிவியுற்பாதனப் பிரக்கிரியையின் விஸ்தாரம் ஆகரகிரந்தங்களிற் காணத்தக்கதாம். இஃதொரு திருஷ்டி சம சமய விசுவ சிருஷ்டியென்னும் திருஷ்டி சிருஷ்டி வாதமாம்.

மற்றையதோ, திருஷ்டியே விசுவ சிருஷ்டியாம், திருசியத்திற்குத் திருஷ்டி பேதத்திற் பிரமாண மின்மையின். "அறிஞரிவ்வுலகை அறிவேயென்பர், பொறியிலாக் குதர்க்கம் புரிசுழல் மூடர், மறிதரு பொருளெனக் காணுவர் மயலே, என்னும் மிருதியினுனும் எனச்சித்தாந்த முக்தாவலி முதலியவை காண்பித்த திருஷ்டி சிருஷ்டி வாதமாம்.

இருவிதமாய திருஷ்டி சிருஷ்டி வாதத்திலும் மனோவிசுவாசம் அடையாதவராய சில ஆசிரியர் சிருஷ்டி திருஷ்டி

வாதத்தைச் செப்பா நிற்பர்:—மறையறிவித்த முறையானே பரமேச்சுரரானே சிருஷ்டிக்கப்பட்ட அஞ்ஞாதசத்தையோடுகூடியதேயாம் விசுவம், அவ்வவ்விடயப் பிரமாண வெழுச்சியில் அவ்வதற்குத் திருஷ்டி சித்தியாம். இங்ஙன் பிரபஞ்சத்திற்குக் கற்பிதத் தன்மையின்மையுறவே சுருதியாதியாலடைவுற்றதும், சிருஷ்டி பிரளயாதி யுடையதும், காட்சியாதியாலடைவுற்ற அர்த்தக்கிரியாகாரியுமாகிய அதற்குச் சத்தியத் தகைமையே யங்கீகரிக்கப் பட்டதாகும் எனக் கூறற்க; சுக்திரஜதாதி போலச் சம்பிரயோகசமஸ்காரதோஷரூபத்தானேனும் அதிஷ்டான ஞான சமஸ்கார தோஷரூபத்தானேனும், காரணமூன்றானே அஜன்னியமாதலினான் கற்பனையின் சமசயத்தன்மையின்றேனும், ஞானத்தானே நீக்கமுடைமை வடிவ,சத்தசத்விலக்ஷணத்தன்மைவடிவ,அடைவுற்ற உபாதியிலிருக்கும் முக்காலத்திய நிடேதப்பிரதியோகித்தன்மை வடிவ மாயாதல் மித்தியாத்தன்மையையங்கீகரித்திருத்தலின். சத்தியத்வ பக்கத்தில் பிரபஞ்சத்திற் கூறிய வடிவமித்தியாத்வமின்மையானே அதனினும் பேதமுண்மையின்.

அற்றேலிவ்வாறு அகங்கார அதன்றருமங்கட்கும் கூறிய வடிவமித்தியாத்வம், வியதாதிபோலும் கற்பிதத்தன்மையின்றேனும் சித்திக்கின்றதென ஸ்ரீமத் பாடியடீகை விவரணங்களில் அதனத்தியாசப்பொருட்டு முக்காரணசம்பாதன முயல்கை வீணுமாலோ வெனின்? அகங்காராதிகட்கும் கேவல சாக்ஷி வேத்யத்தன்மையானே சுக்திரஜதம்போலப்பிராதிபாசிகத்வம் அபிமதமாமென்பர் சிற்சுகாசிரியர்.

அங்கீகரித்துக் கூறியமாத்திரமேயாம் பாடியாதி, அத்விதீய அதிஷ்டானப் பிரஹ்மாத்மப் பிரமாண சைதன்யத்தின்

என்பதாதியாக ஆண்டுள்ள காரண மூன்றைறச்சம்பாதனைிராந் தம், சைதன்யம் பிரமைம்பின் காணமாயின் வேதாந்த கா ணத்வாதி கற்பனையின் பங்கப்பிரசங்கத்தான் பிரௌடிவாத மெனல் வெட்ட வெளியாமாதலினென்பர் இராமாத்வயா சிரியர்.

## 27-வது மித்தியார்த்தத்திற்கு அர்த்தக்கிரியாகாரித்வம்.

அற்றேல், திருஷ்டி சிருஷ்டிவாதத்திலும் சிருஷ்டி திரு ஷ்டிவாதத்திலும் மித்தியாத்வம் அடைவுறுதலின், யாங்ங னம் பொய்யாயதற்கு அர்த்தக்கிரியா காரித்வம்? கனுக்கடுப்ப வெனக் கழறுவேம். அற்றேல் கனு நீர் முதலியவற்றானே சாதிக்கப்பெற்ற முழுகுதல் வடிவ அர்த்தக்கிரியை அசத்திய மேயாம்; ஜாக்ரத்ஜலாதி சாத்தியமாகிய அது சத்தியமாமோ வென்? இரண்டிடத்தும் துல்லியத்தகைமை யிருத்தலின். தனது சமான சத்தையையுடைய அர்த்தக்கிரியாகாரித்வமெ ன்பர் சிலர்.

அத்வைதவித்யாசிரியர் கூறுவதாவது:—கனுப்பொருள் கட்குக் கேவலம் பிரபோதபாத்திய அர்த்தக்கிரியாமாத்திர காரித்தகைமையின்றாம். சுவப்பன அங்கனைபுஜங்காதிகட்குப் பிரபோத அபாத்திய சுகபயாதி ஜனகத்தகைமையும் காண்ட லின்; கனுவிஷய ஜன்னியமாயினும் சுகபயாதிகள் பிரபோதத் தின்பின் பாதம் அனுபவிக்கப்படவில்லையன்றே, மாறாக, விழி த்தபின்னரும் மனமகிழ்ச்சி சரீரகம்பனாதிகளோடு அதன்றொ டர்பு காண்டலின் முன்னரும் உண்மையே யெனத்துணியப் பெறும். அதனானே பிராணிகட்கு மீண்டும் சுகஜனக விஷய கோசரசுவப்பனத்தில் வாஞ்சையாம், அத்தகைய தல்லாத கனவில் த்வேஷமாம். கனவின் கண்ணும் ஞானமுடையாங்

த்க்காண விருத்திரூப சுகபயாதிகளின் உதயம் சம்பவித்தலு மாம்: சுவப்பன அங்கனுதி ஞானமே சுகாதிஜனகமாம் அது வும் சத்தேயாம் எனச்சாற்றற்க; தரிசன பரிசனுதி விருத் திரூப சுவப்பனப் பிரபஞ்ச சாக்ஷியிலத்திபஸ்தமாகிய அதற் கும்கற்பனு மாத்திரசித்தத்தன்மையுண்மையின். உபரதியையு டைய இந்திரியத்திற்குச்சக்ஷு முதலிய விருத்திகள் சத்தியங் களாய்ச்சம்பவியா. அவ்வவ்விஷய அபரோக்ஷ மாத்திரம் சுக ஜனகமாம் அதுவும் சாக்ஷி ரூபமாம் சத்தேயாம் எனக்கூறற்க; காமினியினுடைய தரிசனத்தானே அவளது பரிசனத்தி லும் அவளது பதத்தாற் பரிசனத்தால் காத்தால் பரிசனத் திலும், பாம்பினது வாலிற் பரிசனத்தாற் சிரத்திற் பரிசனத் திலும், சுகவிசேஷத்திற்கும் பய விசேஷத்திற்கும் அனுபவ சித்தத்தன்மையுண்மையானே கனவின்கண்ணும் அவ்வச்சுற பயாதி விசேஷத்திற்குக் கற்பித தரிசன பரிசனுதி விருத்தி விசேஷ ஜன்னியத்தகைமை கூறவேண்டியிருத்தலின். அவ் வாறே நனவிலும் கடாதிகளை யொளிர்விக்கும் ஆற்றலையு டைய ஆண்டுள்ள வேறு புருஷராற் பார்க்கப்பட்ட ஒளியு டை யில்லத்தில் விரைவிற் புகுந்தபோது கற்பித இருளிற்கு வாஸ்தவ இருட்குத்தகுதியாய அர்த்தக்கிரியாகாரித்தன்மை கண்டோம். அதனுல் அவனுக்குக்குடமுதலியவற்றின் மறை ப்பாம் விளக்குவரவே அதனீக்கமாம் அதைக் கொடு செல் வின் மீண்டும் மறைப்பாம் என்பதாதியைக் காண்டலின் என வுஞ் சிலர் கூறுவர்.

மற்றையரோ:—குடித்தல் குடைதல் முதலிய அர்த் தக்கிரியையில் நீர்முதலிய சொரூபமாத்திரம் உபயோகியாம்; அதன் கண்ணிருக்கும் சத்தியத்தன்மையன்றும்; சத்தியத்வ

த்திற்குக்காரணத்தன்மை அதனவச் சேதகத்தன்மைகள் இன்மையின் எனச்சத்தியத்தன்மையானென்னே? இன்னணமாகவே கானனீர்இப்பிவெள்ளிமுதலியவற்றிற்கும்பிரசித்த உதகாதிகட்குசிதமாகியஅர்த்தக்கிரியா காரித்வ வழக்காமென்னற்க; கானனீரில்உதகத்வஜாதியில்லையென அதன் விஷயமாகியமயற்குஉதகசப்தக்கூறுபாடோ அதனைப்புலனுறுத்தும் பூர்வானுபவ சமஸ்காரஜன்யத்தகைமையாலாக்கப் பெற்றதாம் என்று தத்வசுத்திக்காரர் முதலியோர் மதத்தில் அவ்வவ்வர்த்தக்கிரியையின்பிரயோஜகமாகியஉதகத்தன்மைமுதலியஜாதியின்மையினுனேஅதன் பிரசங்கம் வராதொழிதலின். ஆண்டும் உதகத்தகைமைச்சாதியுளதாம்; இன்றாயினே அதன்சம்பந்தத்தையுணர்த்தும்மயன்முரணவினுனும் நீர்வேண்டியோனுக்குஆண்டுமுயல் கையினபாவ வழக்குறுதலினுனும் எனப் பிராதிபாசிகத்தில் முன்னர்க்கண்ட சஜாதீயத் தன்மை வியவகார அனுசாரிகளின் மதத்தில் சிலபால் அதிஷ்டான விசேஷஞானத்தில் மூல சகித அத்தியாச நாசத்தான், சிலபால் அதிஷ்டான சாமானியஞான உபரமத்தானே கேவல அத்தியாச நாசத்தான், சிலபால் குன்றிமணிக்கொத்தில் விழியால் வன்னியாதியத்தியாச ஸ்தலத்தில் தாகபாகாதிப் பிரயோஜகமாகிய வெம்மைப் பரிசாதியின் அத்தியாசமின்மையானும் ஆண்டாண்டு அர்த்தக்கிரியாபாவம்பொருந்தலின், சிலபால் சிலஅர்த்தக்கிரியைகளை இட்டப்பட்டித்தலினுனும்; கானனீரைவிலக்குவதாகிய அர்த்தக்கிரியோபயோகிரூபம் கூறவேண்டியவழியோ சுருதி விருத்தமாகிய சாக்ஷி முதலியவற்றிற்குத் துர்க்கிரகமாம், முக்கால அபாத்தியத்தகைமையை விடுத்து தோஷவிசேஷத்தால் அஜன்னிய ரஜதத்தன்மை முதலியவற்றிற்கே இரஜதர்திபுசித அர்த்தக்கிரியோப யோகிரூபத்தன்மை கூற

முடியுமாதலினானுமென்க; ஆகையால்மித்தியாத்தன்மையின் கண்ணும் அர்த்தக்கிரியாகாரித்வசம்பவத்தான் மித்தையே பிரபஞ்சமன்றிச்சத்தியமன்றாம் என்றுணர்க.

## 28-வது மித்தியாத்தன்மைக்கு மித்தியாத்தன்மையிருப்பினும் பிரபஞ்ச மித்தியாத்தன்மையின் பொருத்தம்.

அற்றேன், மித்தியாத்தன்மையாகிய பிரபஞ்ச தருமத்திற்குச் சத்தியத்வமாயினோ பிரஹ்மாத்வைத க்ஷதியாதலின் அதுவும் மித்தையேயாமெனக்கூறவேண்டும், வேண்டவே பிரபஞ்சத்திற்குச் சத்தியத்வக்ஷதியுறுமாறு யாங்ஙனங்கொல்! மித்தியா பூதமாகிய பிரஹ்மத்தினுடைய சப்பிரபஞ்சத்தகைமை நிஷ்பிரபஞ்சத்தன்மையின் விரோதியல்லவாம் என நீர் கூறிய முறையேமித்தியாபூதமித்தியாத்வத்திற்குச்சத்தியத்வ அவிரோத முண்மையின்.

இதன்கண்ணியம்பப்பெற்றுளது அத்வைததீபிகையில்:- வியதாதி பிரபஞ்சசமானசுபாவம் மித்தியாத்வமாம், அதுவும் தருமிக்குச் சத்தியத்தகைமையைநீக்குவதும்தருமத்திற்கு தனக்கு விருத்தமாய தருமநீக்கத்தகைமையில் உபயவாதி சித்தமாகியதர்மிசமசத்வம்பிரயோஜகமாம், பாரமார்த்திகத்வமன்றும் கடத்தன்மையை நீக்குவதில் படத்தன்மையில் நம்மனோர்க்குப்பாரமார்த்திகத்வ அடைவுவராமையின். பிரஹ்மத்தினது சப்பிரபஞ்சத்வம் தர்மிசமசத்தையையுடையதன்றென நிஷ்பிரபஞ்சத்தன்மையை நீக்குவதாகாதாம். இதனானே மித்யாத்வத்திற்கு வியாவகாரிகத்வமேல் அதன் விரோதியாகிய அப்பிரதிபாசிகப் பிரபஞ்சசத்யத்வத்திற்குப் பாரமார்த்திகத்வம் ஆமென்பது நீக்கப்பட்டது; தர்மிசமசத்தையையுடைய மித்யாத்வத்திற்கு வியாவகாரிகத்தன்மையேல் தருமி-

க்கும் வியாவகாரிகத்வ நியமத்தான் என்க. அல்லது யாது ஏதனது தன்விஷய சாக்ஷாத்கார அநிவர்த்தியமாகிய தருமமோ, அது ஆண்டுத் தன் விருத்ததர்மத்தை நீக்குவதாம். சுக்தியில் சுக்திதாதாத்மியமாம் அதன் விஷய சாக்ஷாத்கார அநிவர்த்தியமாம் அசுக்தித்வத்திற்கு விரோதியாம், ஆண்டே இரஜததாதாத்மியம் அதனுனிவர்த்தியமாம் அரஜதத்வ அவிரோதியாம் என்னும் விவத்தை காண்டலின். இவ்வாறாகவே, பிரபஞ்ச மித்தியாத்வம் கற்பிதமாயினும் பிரபஞ்ச சாக்ஷாத்காரத்தானே அநிவர்த்தியமாம் எனச் சத்தியத்வத்தை நீக்குவதேயாகும். பிரஹ்மத்தினது சப்பிரபஞ்சத் தன்மையோ பிரஹ்ம சாக்ஷாத்கார நிவர்த்தியம் என நிஷ்பிரபஞ்சத்தன்மையை நீக்குவ தாகாதாம் என்க. இதனானே சப்தத்தானுணரப் படுவதாகிய பிரஹ்மத்திற்குச் சத்தியத்வமாயின் சப்த யோக்கியத்தன்மைக்கும் சாப்த போதப் பிராமாண்யத்திற்கும் சத்தியத்தன்மை கூறவேண்டும். பிராதிபாசிக யோக்கியதையையுடைய அநாப்தவாக்கியத்தானே வியாவகாரிக அர்த்தத்திற்கேனும், வியாவகாரிக யோக்யதையையுடைய அக்கினிஹோத்திராதிவாக்கியத்தானே தாத்விகமாகிய அர்த்தத்திற்கேனும் சித்தியின்மையானே யோக்யதைச்சமானசத்தையையுடையதாகிய சப்தார்த்தத்திற்கே சித்தி நியமமாதலின். அர்த்த அபாதரூபப் பிராமாண்யத்திற்கு அசத்தியத்தன்மையுமுருவின் அர்த்தத்திற்குச் சத்தியத்தன்மை கூடாமையானும் இங்ஙனமாகவே பிரஹ்மத்தினும் வேறாகிய சத்தியவஸ்துண்மையானே துவைதமவசியமிருத்தலின் வியதாதிப் பிரபஞ்சமும் சத்தியமாகுக வென்பது நீக்கப்பட்டது. வியாவகாரிக அர்த்தக்கிரியாகாரித்வம் ஸ்தாபிதமாதலின் வியாவகாரிக யோக்யதைக்கும் சத்தியப் பிரஹ்மசித்தி சம்பவமாதலின்,

பிரஹ்மபரமாகிய மறைமுடியில் சத்தியாதிபதமிருத்தலின் பிரஹ்மசத்தியத்வ சித்தியாதலின் அக்கினிஹோத்திராதிவாக்கியத்தில் அத்தகையபதமின்மையின் அதன்சத்வத்திலும் பிரபலமாகிய பிரஹ்மாத்வைத சுருதிவிரோதத்தானே அதனத சித்தி என்பதாக வைஷம்யம் பொருந்தலின். சப்த அர்த்த யோக்யதைகட்குச் சமானசத்தை யுடைமைநியமம் பிரமாணமற்ற தாதலின். கடஞானப் பிராமாண்யத்திற்கு அசட கடிதத்தன்மை போலும் (கடத்வவைசிஷ்ட்யமிருத்தல்போலும்) சத்தியபூத பிரஹ்மஞானப் பிராமாண்யத்திற்கும் அதனினும் வேறாகிய பிரஹ்மத்வவைசிஷ்ட்ய கடிதத்தன்மையானே மித்தியாத்வம்பொருந்தலினாலும் என்க. ஆகையால் ஆரம்பணாதிகரணத்திற் கூறிய நியாயத்தானே வியதாதி சர்வப்பிரபஞ்சத்திற்கும் மித்தியாத்தலக்ஷ்மை வஜ்ஜிர லேபமேயாம்.

அற்றேல், ஆரம்பணசப்தாதிகளானே அசேதனங்களாகிய வியதாதிப்பிரபஞ்சத்தின் மித்தியாத்தன்மை சித்தித்தபோதினும். அபவர்க்கத்தைச் சேவிக்கும் சேதனங்கட்குமித்தியாத்வங் கூடாமையின் அத்விதீயப் பிரஹ்மத்தில் சமன்வயங் கூடாதாம். அவற்றிற்குப்பிரஹ்ம அபேதம் முற்கூறியது பொருந்தமின்றாம் பாஸ்பரம்வேற்றுமையுற்ற அவற்றிற்கு ஒரு பிரமத்தோடு அபேதம் அசம்பவமாதலின். அதன் பேதம் அசித்தமா மென்னற்க; சுகதுக்காதி விவஸ்தையினானே அதன் சித்தியாதலின் எனின்? அற்றன்றாம், அவற்றிற்கபேத மிருந்தபோதினும் உபாதிபேதத்தானே அதன் விவஸ்தை கூடலின்.

அற்றேல் உபாதி பேதமிருந்த போதினும் அதனபேதம் நீங்காமையின் யாங்ஙனம் விவஸ்தைகூடும்? ஆசிரய பேதத்தானே பிரதிபாதிக்கத்தக்கதாகிய விருத்ததரும் அசங்கரம்

அதனினும் வேறாகிய யாதானுமொரு பேத அங்கீகாரத் தானே சித்தியாதாம்.

இதிற்சிலவர் கூறுவதாவது:— அந்தக்கரண உபாதிபே தத்தானே சுகதுக்காதி விவத்தை சித்திக்கின்றதே யாகும். "காமம், சங்கற்பம், சம்சயம், சிரத்தை, அசிரத்தை, திருதி, அதிருதி, இலஜ்ஜை, விருத்திஞானம், பயம் என்பவையா வும் மனமேயாம். விஞ்ஞானம் யஞ்ஞத்தை வித்தரிக்கின்றது" என்பதாதி சுருதிகளானே அதற்கே சகல அநர்த்தாசிரயத் தன்மைப் பிரதிபாதனமிருத்தலின். "இப்புருடன் அசங்கனே யாவன் அசங்கன்பற்றான்" என்பதாதி சுருதிகளானும் சேதனத்திற்குமுற்றினுமே உதாசீனத்தன்மைப் பிரதிபாதனத் தன்மை யிருத்தலினும் என்க. இவ்வாறாகவே கர்த்திருத் வாதிபந்தத்திற்குச் சைதன்ய சாமாநாதிகரண்ய அநுபவவிரோதமாமென்னற்க; அந்தக்கரணத்திற்குச் சேதனதாதாத்மி யத்தானே அத்தியஸ்தத்தன்மையுண்மையின் அதன்றருமங் கட்குச் சைதன்ய சாமாநாதிகரண்ய அநுபவங் கூடலின். அந்தக்கரணத்திற்குக் கர்த்திருத்தகைமைமுதலிய பந்தாசிர யத்தன்மையேல் சேதனன் சம்சாரியாகான் என அறையற்க; கர்த்திருத்தகைமை முதலியபந்தாசிரய அகங்காரக்கிரந் திதாதாத்மிய அத்தியாச அதிஷ்டானத்தன்மையே அவனுக் குச்சம்சாரம் என அங்கீகரித்தலின். இத்துணையானேபயஹே துத்தன்மைக்காசிரய சர்ப்பதாதாத்மிய அத்தியாச அதிஷ் டானமாகிய இரஜ்ஜு முதலியவற்றில் இதுபயவேதுவானதெ ன்னும் மயலுடை ஆன்மாவிற்கு அநர்த்தாசிரயத்வ அபிமா னங்கூடலின். இக்கருத்தைப்பற்றியே "தியானஞ்செய்வதே போலும், லீலைசெய்வதே போலும்" "அகங்காரவிமூடான்

மா அகங்கர்த்தாவென்றெண்ணுவன்" என்பதாதி சுருதிஸ்மிருதிதரிசனத்தானும் என்க; ஒரே யான்மாவின்கண்ணே விசித்திரசுகதுக்காசிரய அவ்வவ் வந்தக்கரணங்கட்கத்தியாசமிருத்தலின் ஆன்மாவில் அபிமானத்தாலாய சுகதுக்காதிவியவஸ்தை இவ்வாறுயினும் சித்திக்கமாட்டாதென உரையாடற்க; அத்தியாசத்தாலாய தாதாத்மியத்தை யடைவுற்ற அந்தக்கரணத்திருக்கும் அநர்த்தக் கூட்டத்திற்கே போலும் அதன் கண்ணிருக்கும் பரஸ்பர பேதத்திற்கும் அபிமானத்தானே தன்னதென்னலின் ஆன்மாவிற்கு அநர்த்தத்தை யடைவுறுந்தகைமை யெத்தகைத்தோ அத்தகைய பேதத்தானே அந்த விவத்தை கூடலின். இதனானே சுகதுக்காதிகட்கு அந்தக்கரண தன்மத்தன்மை யிருப்பினும் அதனனுபவம் சாக்ஷிரூபம் என அதற்கு ஒருமை புண்மையின் சுகதுக்க அனுபவரூபயோக வியவத்தை சித்தியாதாம் என்பது நீக்கப்பட்டது; அவ்வவ் வந்தக்கரண தாதாத்மிய அடைவினானே அவ்வவ் வந்தக்கரணபேதத்தானே பேதமுடைய சாக்ஷிக்கே அவ்வவ் வந்தக்கரண சுகதுக்காதி அனுபவரூபத்தன்மையானே அந்த வியவஸ்தைக்கும் பொருத்த மிருத்தலின் என்பதாம்.

மற்றையரோ:—ஜடத்திற்குக் கர்த்திருத்வாதி பந்தாசிரயத் தகைமை கூடாமையின்; "கர்த்தா சாஸ்திரார்த்தமுடைமையின்" எனச்சேதனத்திற்கே அதனாசிரயத் தன்மையைப் பிரதிபாதிக்குஞ் சூத்திரத்தால் அந்தக் கரணத்திற்சிற்போலி பந்த ஆசிரயமாம். பிம்பத்தினும் வேறாகிய அசத்தியமாகிய அதற்கு அந்தக்கரணந்தோறும் பேதமிருத்தலின் அறிஞன் அறியான் சுகிதுக்கி கர்த்தா அகர்த்தாதி விவத்தையாம். இவ்வாறு அந்தியஸ்தத்திற்குப் பந்த ஆசிரயத்வமாயின் பந்தமோக்ஷங்கட்கு வேறு நிலைக்களத் துளதா

தலினடைவாம். இச்சிதாபாசன் அந்தக்கரணவச்சின்னத்தில் சொரூபமாகவே சத்தியமாதலின் முக்தியின் சேர்க்கைபுற்ற பரமார்த்த ஜீவன்பால் அத்தியஸ்தமாதலினானே கர்த்திருத்வ ஆசிரயசிதாபாச தாதாத்மிய அத்யாச அதிஷ்டானத் தன்மை அவனுக்குப் பந்தமாம் என அங்கீகரித்தலின் எனக் கூறுவர்.

மற்றையரோ:—"ஆகம் பொறி மனமுற்ற ஆன்மாவை அறிஞரறைவர் போக்தாவெனவன்றே" யெனச் சுககாரித் தன்மையானே தேகேந்திரிய தாதான்மியத்தோடும் மனத்தோடும் உற்றசேதனத்திற்குப் போக்தாத் தன்மைச் சிரவணத்தானே அந்தக்கரணபேதத்தால் அதன் விசிஷ்டபேதத்தினின்றும் விவத்தையாம். இங்ஙனமேல் விசிஷ்டத்திற்குப் பந்தம் சுத்தத்திற்கு மோக்ஷமென வேற்று நிலைக்களத்தாதலாம் என்னற்க; விசிஷ்டத்திருக்கும் பந்தத்திற்கு விசேஷியத்தில் சேர்க்கையின்மை யின்மையின் விசிஷ்டத்திற்கு வேற்றுமை யின்மையின் என்பர்.

இதரரோ:—கேவல சேதனம் கர்த்திருத்வாதி பந்தாசிரயமாகுக, வெம்பணிச் சிவப்புநியாயத்தானே கர்த்திருத்வாதி யாசிரய அந்தக்கரணத்திற்கேனும் அதன் விசிஷ்டத்திற்கேனும் சந்நிதான மிருத்தலின் சேதனத்திலும் வேறு கர்த்திருத்வாதிகட்கு அத்தியாசம் அங்கீகரிக்கப் படுதலின். அதற்கு ஏகத்வாதி விவத்தைகூடாமற் போமென்னற்க; உபாதி பேதத்தானே அது கூடலின். அன்னிய பேதத்தால் பிறவிடத்தில் விருத்த தருமங்கட்கு விவத்தை பொருந்தாதாமெனப் புகலற்க; அடி நுனி வடிவ உபாதி பேதமாத்திரத்தானே தருவில் சம்யோக அதனபாவ விவத்தை காண

லின் அவ்வப்புருட கர்ணபுட உபாதி வேற்றுமையானே சுரோத்திரத் தகைமையை யடைவுற்ற ஆகாயத்திற்கு ஆண்டாண்டுச் சப்தத்தோற்றல் தோற்றுமை, உச்சமந்த இட்ட அநிட்டமாகச் சப்தந்தோற்றன் முதலியவை சித்திரிய தரிசனத்தானும் என்பர்.

ஒருவரோ:—ஆசிரய பேதத்தானே விருத்ததரும விவத்தையின் பிரதிபாதன நியமமாயின் சாரபூதமாகிய சேதனத்திலே உபாதியின் வயத்தால் பேதகற்பனை யுளதாருக. கற்பிதமற்ற ஆசிரயபேதமே விவஸ்தையின் பிரயோஜகமென எவ்விடத்தும் அடைவுறுமையின் மணி தர்ப்பணவரண் முதலிய உபாதி கற்பித பேதத்தானே முகத்தில் கறுப்பு வெளுப்பு வட்ட தீர்க்கத்தன்மை முதலிய தருமங்கட்கும்.

உபாதி கற்பித பேதத்தானே தீபத்தில் பின்னதாந்தகைமை முன்னதாந்தகைமை முதலிய தருமங்கட்கும் வியவஸ்தையினிது பொருந்தலின் என்பர்.

## 30-வது உபாதி பேதமாயினும் சுகாதியனுசந்தான அனனுசந்தான விவத்தையின் உபபாதனம்.

இவ்வாறு உபாதி வயத்தால் விவத்தை சம்பவிக்கவே ஜீவர்கட்குப் பரஸ்பரசுகாதி யனுசந்தான மின்மைப் பிரயோஜக உபாதி யாதென்பது நிரூபிக்கத் தக்கதாம்.

இதன்கட் சிலர் கூறுவதாவது:—போகாயதன அபேத அதன் பேதங்கள், அனுசந்தான அனனுசந்தானப் பிரயோஜக உபாதிகள். சரீர அவச்சின்ன வேதனை அதனவச்சின்னமாகவே அனுசந்தானிக்கப் படுதலினானும், சாருவச்சின்ன வேதனை கராவச்சின்னத்தானே அனுசந்தானிக்கப் படாமையானும்; ஹஸ்தாவச்சின்னனாகிய யான் பாதாவச்சின்ன

வேதனையை அனுபவிக்கின்றேன் எனப் பிரதீதி யின்மையின் என்க. ஆயின் யாங்ஙனம் காலிற்பட்ட முள்ளையெடுக்கும் பொருட்டுக் கரவியாபாரங் கூடும்? இக்கரவியாபாரம் ஹஸ்தாவச்சின்ன அனுசந்தானத்தால் ஆகாதாம், மற்றே, அவயவ அவயவிகளாகிய சரண சரீரங்கட்குப் பேதமின்மையானே சரணாவச்சின்னவேதனை சரீர அவச்சின்னமால் யான் சரணத்தில் வேதனையை யுடையேன் என அனுசந்தானிக்கப்படும் என்பதாக அதன் அனுசந்தானத் தாலாமென்றுணர்க. இங்ஙனம் சைத்திரமைத்திரசரீரங்கட்கு அபேதமின்மையின் சைத்திர சரீர அவச்சின்ன வேதனை மைத்திரசரீராவச்சின்னமால் அனுசந்திக்கப்படமாட்டாதாம். இருசரீரத்துந் தொடர்ந்து நிற்கும் வேறு அவயவியவச்சின்னமால் அனுசந்திக்கப் படுகின்றதென்பது மின்றாம். இரண்டினு முட் டொடர்ந்த அவயவியாகிய போகாயதனத்திற்கே அபாவமாதலின் எனச்சைத்திர தேகத்திற்பட்ட முள்ளெடுக்கும் பொருட்டு மைத்திர சரீர வியாபார வழக்கின்றாம்.

அன்னியரோ :—சிதிலமாகிய உபாதி பேதம் அனுசந்தானுபாவப் பிரயோஜகமாம், ஆகவே ஹஸ்தாவச்சின்னனுக்குச் சரணாவச்சின்ன வேதனையின் அனுசந்தான அங்கீகாரமிருந்தபோதினும் கோதின்றாம். இவ்வாறாயின், கருவிலிருக்குங்குழவிக்குத் தாயின் சுகானுசந்தான வழக்காம். ஓரே அவயவியில் அவயவத் தன்மையானே புகுதாதவை விசிலிஷ்ட சப்தத்தால் கூறும் வேட்கைப் படுதலின். தாய் கர்ப்ப சரீரங்கட்கு அவ்வாறாந் தன்மை யுண்மையின் என்பர். “ஓங்கிய ஆயுதபாகு தண்டங்களை யுடையனவாயகவந் தங்களுமே (தலையிலாவுடல்களுமே) வீழ்ந்த தஞ்சிர விழிகளினுனீண், டரிகளைப் பார்த்தே வீழ்த்தினவன்றே” என்னும்

பாதக்கூற்றானே விசிலேஷத்திலும் அநுசந்தானம் அறியப்பெற்றதாம் என அறையற்க; ஆண்டும், தலைமுண்டங்கட்கு ஒரே அவயவியில் அவயவத் தன்மையானே புகுத்தப்பெற்ற தாந்தன்மை யுண்மையின். சிரத்தை வெட்டிய பின்பு மூர்ச்சை மரணமென்னும் இரண்டனு லொன்றின்றியமையாதிருக்கவேண்டு மாதலின் கண்டதினும் விருத்தப் பொருள் வாய்ந்த அத்தகைய வசனத்திற்குக் கைமுத்திய நியாயத்தானே போர்வீரனதற்காக அதிசயப் புகழ்ச்சி பரத்தன்மை யுண்மையின் அத்தகைய பிரபாவத்தோடு கூடிய புருஷ விசேஷ விஷயத் தன்மையானே பூதார்த்தவாதத் தன்மையிருந்தபோதினும் கூறிய நியமத்திற்கு இயற்கை யுண்மையின் அனநுசந்தான தந்திரத்வ அவிகாதத் தன்மை யுண்மையினானும் என்க. அதனானே, கூறிய கூறப்படும் பக்ஷங்களில் ஜாதிஸ்மரண யோகிகட்கு வேறு சரீரவிருத்தாந்த அநுசந்தானத்தில் தோட அடைவு வரமாட்டாதாம்.

மற்றையரோ, சரீர ஐக்கிய பேதத்தில் அநுசந்தான அதனபாவப் பிரயோஜகமுபாதி; பாலியத்திலும் வேறு பிறப்பிலும் அநுபவித்தவற்றிற்கு அநுசந்தானமும் அஃதின்மையும் காணப்படுதலின். பாலிய யவ்வனங்கட்கும் சரீர பேதம் சங்கிக்கத் தக்கதன்றாம்; பிரத்தியபிஞ்ஞானத்தான். பரிமாண பேதத்தானே அதன் பேத உணர்ச்சியா மென்னற்க; ஒரு தருவில் அடிமுடிப்பேததானே போலும்கால பேதத்தால் ஒன்றன் கண் அநேக பரிமாணச் சேர்க்கை கூடலின் அற்றேல்அவயவவிருத்தியிலாமல் பரிமாணபேதமின்றாம். அவயவங்களும் பின்னர் வருவனவாய்ப் பூர்வசித்த தேகத்தை உபாதானமாய் நின்று தாங்குவனவாகாவாம் எனப் பரிமாண பேத முளதாகவே சரீரபேத மின்றியமையாத தாம் எனின்?

அற்றன்றும், விளக்கேற்றும் சமசமயத்திலாம் வீட்டினுள் வியாபிக்கும் ஒளிக்கூட்டத்தின் விரிவு, விளக்கையணைத்தசம சமயத்திலாம் அதன் குவிவுகளை யங்கீகரியாத பரமாணு முறையாயாரம்பிக்கும் ஆரம்பவாதத்தை யங்கீகரிக்க முடியாமையின். விவர்த்தவாதத்திலோ இந்திரஜாலக்காரன் காண்பித்த காயமுமாய் அவயவ விருத்தியின்றியே மாயையாற் சரீரத்திற்கு விருத்திகூடலின் எனக்கூறுநிற்பர்.

மற்றையரோ, அந்தக்கரண அபேத அதன் பேதங்களானே அநுசந்தான அனநுசந்தான விவத்தையை விளம்பாநிற்பர். இப்பக்கமும் முன் மொழியப் பட்டது.

சிலரோ:—அஞ்ஞானங்கள் ஜீவபேத உபாதி பூதங்கள் நானுவாமெனக் கொண்டு அதன் பேத அபேதங்களானே அநுசந்தான அனநுசந்தான விவத்தையை விளம்புவர்.

ஈண்டுச் சிலர்:—"அங்கிசம்பன்மையாயமைறுதலினன்றே" என்னுமதிகரணத்தில், "அதிர்ஷ்ட நியமமின்மையின்" "அபிசந்தியாதிகளினும் இவ்வாறேயாம்" "அமை யிடமுளதெனின் அன்றுள்ளடங்கலின்" என்னுஞ் சூத்திர அதற்குறும்பாடிய முறையை யுட்கொண்டு ஒரே ஆன் மாவின் கண்ணுபாதி பேதத்தானே விவத்தையை யங்கீகரியாதொழியின், கணுதாதி முறையே ஆத்மபேத வாதத்திலும் விவத்தையின் கூடாமை துல்லியமேயாமென்பர். அங்ஙனமன்றே:—சைத்திரனது சரணத்திற்குறைத்தமுள்ளால் சைத்திரனுக்கு வேதனையுண்டான சமயத்தில் மற்றைய ஆன்மாக்கட்கும் வேதனையுண்டாகாமை யாது காரணம்? எல்லா ஆன்மாக்களும் எங்குமிருத்தலின் சைத்திர சரீரத்துண்ணிற்றலொப்பேயாதலின். எவனது காயத்தில் முட்டைத்தலா

தியோ அவனுக்கே வேதனையாம் மற்றையருக்கின்றாம் என விவத்தையா மென்னற்க; சர்வான்ம சந்நிதியிலுண் டாகுஞ் சரீரம் ஒருவனுக்கே, மற்றையருக்கில்லை யென நியமிப்பான் முடியாமையின். எவனதிர்ஷ்டத்தாலுண் டாக்கப்பட்டது எத்தேகம் அது அவனதாம் என்பது நியம மாம் என்பதுங்கூடாதாம்; அதிர்ஷ்டத்திற்கும் நியமத்துணி பின்மையின். எக்கால் அவ்வதிர்ஷ்டத்தைபுண்டாக்கும் பொ ருட்டு ஒரு ஆன்மாவோடுமனம் சேரும்போழ்து அஃதன்னி யஆன்மாக்களோடும் சேர்வதேயாகும். காரணம் பொதுவா யுற்ற வழி சில பாலே அவ்வதிர்ஷ்ட முற்பத்தியாகுக வென்ப துயாங்ஙனமாம்? அற்றேல், மனச்சையோகமாத்திரம் பொது வாயிருப்பினும் "யானிப்பயனை யடைந்தவனாவேன்" என் னும் பல இச்சை அதிர்ஷ்டத்தைபுண்டாக்குவதாம், அதன னுகூல முபறசி யென்பதாதியாக விவஸ்தை செய்யப் பெற்ற தென்னும் அதனானே அதிர்ஷ்டநியமம் உண்டாம் எனின் அற்றன்றும், பலேச்சை முதலியவற்றிற்கும் சாதாரணமனச் சையோகாதியில் உண்டாக்கப்படுந்தன்மையுண்மையின் விவ த்தை துணியப் பெறாமையின். அற்றேல் தனது மனச்சை யோகம் பலேச்சை முதலியவற்றின் காரணமாம் என மனச் சையோகமே அசாதாரணமாயாகும் எனின்? கூடாதாம். நித் தியஞ் சர்வாத்மாவோடு கூடிய மனமானது ஒருவனுக்கே தன்னதென நியமிப்பான் கூடாமையின். அதிருஷ்டவிசேஷத் தானே ஆன்ம விசேஷங்கட்கும் மனத்திற்கும் சுவசுவாமிபாவ சித்தியுமின்றும்; அவ்வதிர்ஷ்டத்திற்கும் முன்போல விவத் தை துணியப் போறாமையின் அற்றேல் ஆன்மாக்கள் விபு வாக இருந்தபோதினும் அவர்தம்பிரதேச விசேஷமே பந்தத் தைச்சேவிப்பதாம் என மற்றைய ஆன்மாக்கட்குச்சைத்திர

சரீரத்தில் அந்தப்பிரதேசவிசேஷமின்மையின் சுகதுக்காதிவிவத்தையுண்டாமெனின்? அன்றும் எப்பிரதேசத்தில் சைத்திரன் சுகாதிகளை யனுபவித்து அந்தப்பிரதேசத்தினின்றும் அகன்றனனாக ஆங்கே மைத்திரன் வர அவனுக்கும் ஆண்டுச் சுகதுக்காதி தரிசனத்தான் வேறு சரீரத்தில் வேறுன்மைப்பிரதேச விசேஷத்திற்கும் உள்ளடக்க முண்மையின். ஆகையால் ஆத்மபேதத்தின் கண்ணும் விவத்தை விளம்பமுடியாததேயாம். ஒருவாறுகக்கூற முடியுமாயின் மறைமுறையனுசரித்தும் எளிதிற்கோடலானும் ஆன்மைக்கியங்கொண்டு ஆண்டே அதன் பிரதிபாதனம் செய்தல் பொருத்த முடைத்தாம்.

## 31-வது ஜீவ அணுத்வநிராகரணம்.

ஆயின் அணுக்களேயான்மாவாகுக, விபுத்தன்மை வேண்டினன்றே விவத்தையினிதியம்ப முடியாமற் போகின்றது? அவ்வாறறையற்க, ஆன்மாக்கட்கணுத்தன்மையேல் ஒருகால் சர்வாங்க சுக உதயத்திற்குக் கரசிரசரணப்பிரோரணை கூடாமையின். யாதீண்டுபுதுமையாயகற்பனமோ, கிளம்புகை, செல்கை, வருகைக், கேள்விவேறோராற்றாற் பெறப்படாமையானே, "அணுவே இவ்வான்மா, எதனை இவை பந்தியாநிற்குமோ, அறமும் மறமும்." "கேசநுனியின் நூற்றிலொரு கூறு" என்பதாதி சுருதிகளில் நேரே அணுத்தன்மைக் கேள்வியானே அணுக்களே ஜீவர்கள் ஆவர்கள். அவர்கள் அணுக்களாயிருந்தபோதினும் விளக்கொளி நியாயத்தானே பற்றுக்கோட்டினும் வேறாகிய இடவிசேட வியாபியாய குணங்கள் ஞானசுகாதிகள் ஆதலின் சர்வாங்க சுகப்புலப்பாடின்மையின்றாம். "துரோணம் பிருகஸ்பதியின் பாகமாம்" என்பதாதி ஸ்மிருதியை அனுசரித்து ஜீவர்கட்கு அம்சமுண்மையின். காசிர சா

ஞுதித்தொடர்புற்றவற்றில் சுகதுக்காதி ஏககாலத்துதித்த லும், காயசமுதாயங்களிற் சேர்ந்தவற்றில் யோகிகட்குப் போக வைசித்திரியமும், யாதொருகூடாமையையும் உடைய னவாகாவாம். இவ்வாருகவே ஜீவர்கட்கு அணுத்தன்மையுண் மையானேசங்கரமின்மையின்சுகதுக்காதிவிவத்தைதயும்விபுவா கிய ஈசுவரரினின்றும் பேதமும் என்பதாம். இதிவியம்பப் பெற்றுளது அத்வைத தீபிகையில்:— இவ்வாருயினும் யாங் ஙனம் விவத்தையின்றுணிபாம், சைத்திரனது பாதத்தில் வேதனை, சிரசில் சுகமெனத்தன்னங்கிச பேதத்திலிருக்கும் சுகதுக்க அனுசந்தானம் போலும், மைத்திரனிடத்திருக் கும் சுகதுக்க அனுசந்தானத்திற்கும் நிக்க முடியாமையுண் மையின்; சைத்திரனுக்குத் தன்னங்கிசத்தினதே போலும் மைத்திரனது பேதம் சமானமேயாம். காயவியூகத்தலத்திலோ விபாகத்தைதபுற்றுப்பிறவிடத்தே விரியுமாற்றலையுற்ற அங்கி சங்கட்கு ஜீவனினின்று மின்றியமையாமல் வேற்றுமையுற வேண்டியிருத்தலினானும், அங்கிச அங்கி கட்குன்றாற் பே தா பேதம் அங்கீகரிக்கப் பட்டிருத்தலினானும். சுத்த பேதமா னது அனனுசந்தானப் பிரயோஜகம் எனக்கூறற்க; சுத்தத்தன் மையோ பேதத்திற்கு அங்கிச அங்கிபாவ உடநிகழ்ச்சித்தன் மையின்மை யேனும், அபேத உட நிகழ்ச்சித்தன்மையின்மை யேனும்ஆம். ஆதியதாகாதாம், "பரமான்மாவிற்கிவனங்கிசன்" "எமதங்கிசம் ஜீவலோகம்" "அங்கிசம்பன்மையாய்ப்பகரலின்" என்னும் மறைமிருதி சூத்திரங்களான் ஜீவனுக்குப் பிரஹ்மாம் சத்தன்மைப் பிரதிபாதனத்தானேபிரஹ்மஜீவர்கட்குப்போகக் கலப்பின்வழக்காதலின். அற்றேல், ஜீவ அங்கிசங்கட்கு ஜீவன் பொருட்டே போலும், ஜீவனுக்குப் பிரஹ்மப்பொருட்டு அங்கிசத்தன்மையில்லை; மற்றேு, சந்திரபிம்பத்திற்குக்குரு

பிம்பம் நூறு கூறுமென்பதேபோல ஒப்புமையோடு கூடிய தனினும் குறைவுடைமை மாத்திரம் உபசாரமாய அங்கிச த்வமெனின்? அதனினும் வேருகிய முக்கிய அங்கிசத்வம் என்னே ஜீவன்பொருட்டு ஜீவராங்கிசங்கட்காவதோ, எஃ‌தீண்டு அனனுசந்தானப் பிரயோஜக சரீரத்தில் புகுத்தப் பெறுமோ. ஆண்டு ஆடைப் பொருட்டு நூற்கட்கே போலு ம் ஆரம்பகத்தகைமை யணுகாதாம்; ஜீவனுக்கனுதித்தன் மையுண்மையின். மகாககனப் பொருட்டு கடககனுதிகட்கே போலும் பிரதேசத்தன்மையுமில்லையாகும்; உளியாற் சிதறு ண்டகற்சல்லி முதலியவற்றிற்கேபோலும் கண்டத்தன்மையு மில்லையாகும்; அணுத்தன்மையுண்மையானே இடமுண்மை யின்மையினுனும் சேதிக்கப்படாமையினுனும் என்க. பின்னு பின்னப்பொருண்மை அங்கிசத்தன்மையென அங்கீகாரமாம் எனின்? அற்றன்றும்; அற்றுயினுே ஜீவ ஈசுரர்கட்கும் ஜீவர் கட்கும் போகக்கலப்பின் வழக்காதலின். சுயமாகவே பின்ன ங்களாகிய அவற்றிற்குச் சேதனத்தன்மை முதலியவற்ருனே அபேதமும் உன்னுலங்கீகரிக்கப்பட்டிருத்தலினுனும் சமூக சமூகிகட்குப்பேதா பேதங் கூறும் வாதியாய நினது மதத்தில் ஒரு சமூகத்துள்ளடங்கிய ஜீவர்கட்குப்பரஸ்பரமும் அபேதமி ருத்தலினுனும் தேவதத்த அபின்னசமூக அபின்னயஞ்ஞதத் தனுேடு தேவதத்தனுக்கும் அபேதத்தை நீக்க முடியாமை யின். சம்யோகாதிகட்கும் ஜாதிக்கும் அநேகத்தைப்பற்றி யிருக்குந்தன்மையாயின் குண குணியாதிகட்கபேதமிருத்த லின் கடாபின்ன சம்யோக பின்ன படாதிகட்கும் கடாபேத மடைவுறும் என்பதாதியாய்க் கூறுமுன்னுல் அதன் அபின்ன அபின்னத்திற்கும் அதனபேத நியமத்தையங்கீகரித்தலின். வேறு ஜீவர்களிடத்தும் பொதுவாயிருக்கும் சேதனத்தன்மை

முதலியதருமை ஏகரூபத்தையுடைய ஏகசமூகத்துள்ளடங்கிய தன்மை முதலியவற்றுனே யாக்கப்பெற்ற அபேத விலக்ஷண மாகியவே றபேதம்அங்கிசஅங்கிசிகட்குளதாம்,பேதத்திலும் அனுசந்தானப்பிரயோஜகம் ;எதனையீண்டதிப் பிரசங்கின்மை யின் பொருட்டுக் கூறவேட்கைப்படலாமோ என்னற்க; அவ் வாறுகவே அதற்கே சிறப்பித்துக்கூறவேண்டுந்தன்மையுறுத லின். தருமஏகரூபமுடைமை முதலியவற்றுனேஆக்கப்பெறு த்தகைமை அங்கிச அங்கிசிகளின் அபேதத்திற் சிறப்பாமெ னின்? அன்றும், ஜீவ அதனங்கிசங்கட்குச் சேதனத்தன்மை முதலியதருமஏகரூபமுடைமையுண்மையானும் ஏகசரீர அவ ச்சேதத்திலும் காய வியூகச் சேர்க்கையிலும், சமூகத்தன்மை யானும் அவற்றினபேதத்தில் தர்ம ஏக ரூபமுடைமையாதியா லாக்கப்பெற்றதாந்தன்மைக்கும் இருப்புண்மையின். தருமஏகரூபமுடைமையாதிலாக்கப்பெற்ற அபேதாந்தர இருப்பி னும் ஜீவஅதனங்கிசங்கட்கு அங்கிச அங்கிசிபாவப் பிரயோஜக அபேதம் அதனுலாக்கப் பெற்றதல்லவாமெனின்? அற்றன் றும், அவற்றிற்கபேத இருமையின்மையின். நின்மதத்தில் அதிகரணமைக்கியமாகிய வழி பேதத்திற்காதல்அபேதத்திற் காதல், பிரதியோகி பேதத்தாலேனும் அதனுகார பேதத்தா லேனும் அநேகத்தன்மையை அங்கீகரியாமையின். ஆகையான் முதற்பக்கத்தில் அதிப்பிரசங்கம் திரநிலை பெற்றதேயாகும். இதனுனே இரண்டாவது பக்ஷமும் நீக்கப்பெற்றதாம். அபே த உட நிகழ்வின்மைப் பேதத்திற்கு அனனுசந்தானப்பிர யோஜகத்தன்மையேல் மொழிவுற்ற முறையாய் நின் மதத் தில்ஜீவப்பிரமங்கட்கும்ஜீவர்கட்கும்அபேதமுமிருத்தலினுனே அதிப்பிரசங்கத்தை நீக்க முடியாமையின். அற்றேல் அபேதப் பிரத்யக்ஷம் அனுசந்தானத்திற் பிரயோஜகம் என அதனின்மை

யுறவே அனனுசந்தானம், தனக்குந்தனகபேதமும் தனதங்கிக அபேதமும்பிரத்யக்ஷமாம்என அதனைக்காண்பவனுக்குத் துக்காதியனுசந்தானம் ஆம் வேறு ஜீவனுலபேதமிருந்தபோதினும் அவனப்பிரத்யக்ஷனுதலின் அத்துக்காதியனுசந்தானமில்லையாம். முற்பிறப்பின் ஸ்மரணமுடையவர்க்கு முற்பிறப்பி லுளதாய வடிவத்தானும் அபேதப் பிரத்யக்ஷமுண்மையின் அவ்விருத்தாந்த அனுசந்தானமாம். மற்றையர்க்கஃதின்மையின் இல்லையென்பதாதியாவும் இனிது பொருந்தும் எனின்? ஆயின் ஏகான்மவாதத்திலும் சர்வாத்மகன்மைமையை நீக்கும் அஞ்ஞான மறைப்பால் சைத்திரனுக்கு மைத்திர ஆத்மாதியபேதப்பிரத்யக்ஷமின்றும் என அதனுனே சர்வவிவத்தைகளும் பொருந்தலின் சுருதிவிருத்த ஆன்மபேத அங்கீகாரம்வீணும், இன்னணமாயினும் பிரபஞ்சதத்வவாதியாகியநினக்குவிவத்தையின் நிர்வாகமின்றும்; எல்லாமுணருமீச்சுரருக்குண்மையாக ஜீவாந்தரஅபேதப்பிரத்யக்ஷம் இன்றியமையாதாதலின் துக்கிகளாகிய ஜீவர்களிடத்தில் யான்றுக்கியென்னும் அனுபவ அடைவாதலின். எமது மதத்திலோ ஈசுவரர் தமத பின்ன ஜீவர்பாலற் சம்சாரத்தை பிரதிபிம்ப வதனத்தில் மலினத்தன்மையிருப்பதே போலக் கண்டும் பொய்ம்மைத் துணிபானே சோகிப்பதில்லையென இவ்வழுக்கின்றும். உளதாகுக இது :--அம்சபேதமாகா தொழிக, காசி ராணுதிகளினதூஉம் காயவியூகத்தினதூஉம் பிரோகமாகிய ஆன்மதீபத்திற்கு ஞானப் பிரபை வியாபகமாயுளதெனை அதுவே சர்வப்பிரோகமாகுமெனின்? ஆகாதாம், ஞானத்தைப்போல ஆன்மதருமமாகிய சுகதுக்கபோகத்திற்கு ஞானத்தைப்பற்றி பொருந்துதல் சம்பவியாமையானே காசராணுதி அவயவபேதத்தானும் காயவியூகவானுக்குக் காயபேதத்தானும்போக

வைசித்திரிய அபாவ வழக்காதலின். சுகதுக்கபோகாதிஞான தருமமேயாம் ஆன்மதருமமன்றுமென வங்கீகரிக்கின்ற அதன் வைசித்திரியத்தானே ஆன்மகுணமாகிய ஞானத்திற் குப்பேதஞ்சித்தித்தபோதினும்ஆன்மாவிற்குப்பேதஅசித்தியி னுனே போக வைசித்திரியாதியானே ஆன்மபேத நீக்கங்கூடா மையினுனும் போகாதியினுசிரயமாகிய ஆன்மாவிற்கணுத்தன் மை யுண்மையினுனேகாயந்தோறும்பிரிவுபட்டிருத்தலின் அத ன் வியாபித்தன்மைவாதத்திற் போலும், அதனபேத வாதத் திற்போலும் சர்வதருமக்கலப்பினடைவின்றுமெனமதஹானி யினுனும். ஆகையால் ஜீவனுக்கு அணுத்தகைமையயங்கீகரி த்தலினுனே விவத்தையை விளம்பல் பொருத்தமின்றிய தேயாம் என்க. அதனுனே ஈசுரரினின்றும் அதற்குப் பேத சாதனம் கூடுமென்பதுங் கூடாதாம்; கிளம்பு கை முதலியவை கேட்கப்படுதலினுனும் நேராக அணுத்வங் கேட்கப்படுதலினுனும். அணுஜீவனெனக் கூறும் நினது மத த்தில் "அதைச்சிருஷ்டித்து அதிலே புகுந்தது உட்புகுந்தது ஜனங்களின் நியந்தாவாம், பரனுக்குப்பாதியிடமுகிய இருதய ஆகாயத்திடைமதிக்குகையில் புகுந்தன" என்பதாதி சுருதிக ளில் பிரவேசாதி கேட்கப்படுதலினுனும்; "அவ்விது அணு எனதுள்ளிருதயத்தில் இவ்வான்மாவுளது நெல்லினும் கோது மையினும் அணுதரமாயது" என்னும் சுருதியில் நேரே அணு த்தன்மை கேட்கப்படுதலினுனும் ஈசுரரும் அணுவேயாவர் எனயாங்ஙனம் ஈசஜீவர்கட்கு விபுத்தன்மையணுத்தன்மைக ளால் பேதந்துணிதல் யாங்ஙனம்? அற்றேல், "ஆகாரம் போ ற்சர்வகதமும் நித்தியமுமாம் தேவலோகத்தினும் அந்தரிக்ஷ லோகத்தினும் உயர்வாயதாம்" என்பதாதி கேட்கப்படுதலினு னும், சர்வப் பிரபஞ்ச உபாதானத் தன்மையுண்மையினுனும்.

பரனுக்குச் சர்வகதத்தன்மை துணியப் பெறுதலின் அதனை னுத்தன்மைச்சுருதிகள் உபாசனையின் பொருட்டனவாம்; கிரகிக்க முடியாத தன்மைக்கருத்துடையனவாகத்தான் கொள்க. பிரவேச சுருதிகளோ சரீராதியுபாதியினுனே நிர்வகிக்கத்தக்கனவாம். ஜீவன் கிளம்புகை முதலிய சுருதிகளும் மதிமுதலிய உபாதியினுனே நிர்வகிக்கமுடியுமெனச் சங்கியாதொழிக; "அச்சீவன் கிளம்பியதையனுசரித்துப்பின் பிராணன் கிளம்புகின்றது" எனப்பிராணனெனப் பெயரிய புத்தி கிளம்பு தன்முன்னரே ஜீவன் கிளம்பும்வசனங்காணப்படுதலின். "அந்நன் அறிஞன்நாமரூபங்களினின்றும்விடுபடவே மேலினும் மேலாகிய திவ்ய புருடனையடைவன்" என நாமரூபம் விடுபட்டபின்பும் கதிகேட்கப்படுதலினும். "அஃதெங்ஙனம் சகடமானது கிருக உபகரணங்களோடு கூடியதாகிச் சப்தித்துக்கொண்டு செல்வது போலவே ஜீவனுனவன் ஈசுரரால் பிரேரிக்கப்பட்டவனுகிப் பரலோகத்தையடைவன்." என இயற்கையாயகதியாகிரயசகடதிருஷ்டாந்தக் கூற்றானுமெனின்? இது சாரமுடையதன்றாம், அவ்விது மகானுகிய பிறப்பற்ற ஆன்மா எவ்விதவிஞ்ஞானமயமாமோ" "கடத்தால் வளைபட்ட ககனம் கடத்தைக்கொடுசெல்லின்கடம்செல்லுமேயல்லாது ஆகாயம் செல்லாதாம் அதுபோன்றே ஜீவன்ககன துல்லியனுவன்." என்பதாதி சுருதிகளில் ஜீவனுக்கும் விபுத்தன்மைக்கேள்வியினுனே நின்மதத்தில் பிரகிருதிக்கே ஜகதுபாதானத் தன்மையுண்மையின் பிரஹ்மத்திற்கு ஜகதுபாதானத்தன்மையின்மையின் ஜீவனுக்குக் காயவியூகத்திருக்கும் விசித்திர சுகதுக்க உபாதாத்தன்மையைப்போல அணுத்தன்மையிருப்பினும் ஜகதுபாதானத்வ சம்பவமுண்மையானும். ஆதலின் அதற்குச் சர்வகதத்தன்மை துணிவின்மையின். பிரஹ்மப்பிரவேச சுருதிகட்குச்

சரீர உபாதியுடைமையைக் கற்பித்த வழி ஜீவன் கிளம்புகை முதலிய சுருதிகட்கும் புத்தியுபாதியுடைமையங்கீகாரசம்பவமாதலின். "பஞ்சவிருத்தி மனம் மானுமுபதேசிக்கப்படும்" (பஞ்சவிருத்திர பஞ்சப்பிராணன்) என்னுஞ் சூத்திரபாடியத்தில் புத்தி பிராணன்களுக்குக் காரியபேதத்தானே பேதம் பிரதிபாதித்திருத்தலின் புத்தியையுபாதியாகவுடைய ஜீவன் முதலில் கிளம்பிய வழி பிராணனது பின் கிளம்புகை பொருந்துதலின். நாமரூபம் விடுபட்டபின்னர் பிரஹ்மப்பிராப்திச்சிரவணத்திற்கு அடையுஞ் சீவனிடத்திற் போல அடையத்தக்க பிரஹ்மத்தின் கண்ணும் விபுத்வவிரோதித்தன்மையுண்மையின் பிராகிருத நாமரூபம் விடுபட்ட பின்பும் அப்ராகிருதலோக விக்கிரகாதியுபாதியினானே பிரஹ்மத்திற்கு அடையத்தக்கதாந் தகைமையைக் கூறும் வாதிமதத்தில் அடையும் ஜீவனுக்கும் அப்பிராகிருததேகேந்திரியாதிகளின் உண்மையானே அதனுபாதியில் பிரஹ்மப்பிராப்திசிரவணவிரோதமின்மையின் இயற்கையாகிய கதியினாசிரயமாகிய சகடதிருஷ்டாந்த சிரவணமாத்திரத்தால் ஜீவனுக்கு இயற்கையாயகதி சித்தித்தவழி "குகையுட் புகுந்தன" வென இயற்கையாயபுகுதற்றுணிபு இன்றியமையாததாதலின் பிரஹ்மஜீவ உபயத்திற் சேர்ந்த ஒரு புகுதற்பதத்திற்கு ஒரு ரூபப் பிரவேச பரத்வங் கூறவேண்டியிருத்தலின். ஆகையாற் பிரமதத்தில் பிரஹ்மஜீவர்கட்கு விபுத்தன்மை அணுத்தன்மைவிவத்தை பொருந்தாமையின். ஆகையாற் பேதசித்தியின்பேராசை சேய்மையில் நீக்கத்தக்கதாம். எமது மதத்தில் பிரஹ்மாத்மைக்கிய பரமாகிய மகாவாக்கியத்தையனுசரித்து அவாந்தர வாக்கியங்கட்கடைவித்துவின் சொரூபமாகவே ஜீவனுக்கு விபுத்தகைமையாம், உபாதிசம்பந்த ரூபத்தானே பரிச்சேதமாம் எனஉபய சுருதிகளின்

பிரதிபாதனம் ஸ்ரீமத் பாடியாதிகளில் வெளியாம். ஆதலின் அசேதனப்பிரபஞ்சத்திற்குப் பொய்ம்மையுண்மையின் சேதனப் பிரபஞ்சத்திற்குப் பிரஹ்ம அபேதமுண்மையினாலும் வேதாந்தங்கட்கு அத்விதீயமாகிய வித்தையினாலே அடையத் தக்கதாய பிரஹ்மத்தில் சமன்வயஞ் செய்தற்கு யாதொரு முரணுமின்றாகு மென்றுணர்க.

---

## 3-வது பரிச்சேதம்.

---

### 32-வது கருமங்கள் விவிதிஷையின் சாதனமாதல்.

அற்றேல், வித்தையினாலே பிரஹ்மத்தினடைவு யாங்ஙனம்? கருமங்கட்கும் அதனடைவானேதுத்தகைமை ஸ்மரிக்கப்படுதலின். "அதனடைவேது விஞ்ஞானம் கருமமுமறைந் துளதருணியே" என ஸ்மரிக்கப்படுகின்றது. உண்மையே "அயல் நெறியில்லை" என்னும் சுருதியினாலே நித்திய சித்த பிரஹ்ம அடைவு கழுத்திற்கிடந்து மறந்த கனகமயமாலையை யடைவுற்றது போலாகவே வித்தையினும் வேறொன்றியதற்குச் சாதனத்தன்மை அசம்பவமாதலினாலும். பிரஹ்ம அடைவில் பரம்பரையானே கருமாபேக்ஷமாத்திரமாம் அத்தகைய ஸ்மிருதி. ஆயின் யாண்டு கருமங்கட்குபயோகம்?

ஈண்டுப் பாமதியை யினிது தொடர்ந்தோர்:—" அவ்விதனை வேதாத்தியயனத்தானும் யாகத்தானும், தானத்தானும், தபசானும், உண்டியை யொடுக்கலானும் பிராஹ்மணர் அறிய விரும்புகின்றனர்" என்னும் சுருதியினாலே வித்தையைச்சம்பாதிக்கும் வாயிலாய்ப்பிரஹ்ம அடைவின் உபாயபூதமாகிய விவிதிஷையின் கண்ணே உபயோகமாம். அற்றேலிட்டப்

பட்ட வித்தையில் உபயோகம் ஏனாகமாட்டாது? ஆகாதாம் விருத்தியின் பொருட்டு முக்கியத்தன்மையுண்மையின்; வித்தையின்சாதனத்தன்மையுண்மையின் வித்தையினுதயம்வரை யனுட்டிக்கத்தக்கனவாகும் வித்தையின் சாதனங்களென்னும் சமதமாதிகள்; விவிதிஷையின் சாதனமாதலின்றன் மிக வெளிகளாம் யாக முதலியவைகள்; என்னும் சர்வாபேக்ஷாதிகரணபாடியத்தானும் என்க. அற்றேல் விவிதிஷையின் பொருட்டு யாகாதியின் அனுஷ்டானஞ் செய்பவனுக்கு வேதன விஷயக இச்சையுடைமையேல் விவிதிஷை சித்தமாதலின் அஃதின்றேல், வேதன உபாயமாகிய விவிதிஷையில் இச்சையின் அசம்பவத்தால் விவிதிஷையின் பொருட்டு யாகாதியனுஷ்டானங்கூடாமையின் யாகாதிகட்கு விவிதிஷையில் விநியோகம் பொருந்தாதாம். எனின்? அற்றன்றும், அன்னத்வேஷத்தானே இளைத்தவனுக்கு அதனை நீக்கும்பொருட்டு அன்னபக்ஷண விஷயக அதிக அவாவிருந்தபோதினும் மிருதியாய அஜீர்ணதியாலாக்கப்படும் நாடி விஷமத்தன்மைத் தோடத்தால் ஆண்டுப்பிரவிருத்திவரையுமுள்ள ருசி யுண்டாவதின்றும் என அந்தருசியையுண்டாக்கும் ஔடதத்தைக்கொள்வதுபோல, நிரதிசய ஆனந்த ரூபமாகிய பிரஹ்மம், அதனையடைவில் வித்தைசாதனம் என்னும் பொருளில் முன்னநேகம் பிறவிகளில் அனுஷ்டித்த பயன்வேண்டாமையோடுகூடிய நித்திய நைமித்திக கர்மங்களானே யுண்டாக்கப்பட்ட மனத்தூய்மையின்மையானே அடைதற்று விசுவாசிக்குப் பிரஹ்ம அடைவிலும் வித்தையிலும் அதனதிசயமாய அவாவிருந்தபோதினும் முன்னநேகம் பிறவிகளிற்றேடிய ஆஸ்திககாமுகனுக்கு அதற்றக்க கருமத்திற்போல விடயபோகத்தில்சுழற்சியைச் சம்பாதிக்கும் அநேகபாபதோஷத்தால் தடைப்பாடுறுண்டா

ச்சயின் வித்தையின்சாதனமாகிய சிரவணாதிகளில் பிரவிருத்தி வரையுமுள்ள ருசியுண்டாவதில்லை யெனப்பிரதியந்தக நீக்க வாயிலாக அதனைச் சம்பாதிக்கும் யாகாதியநுஷ்டானங்கூடவி னென்பதாம்.

## 33-வது கருமங்கள் பிரஹ்மஞான சாதனமாதல்.

விவரணானுசாரிகள் கூறுவதாவது:— பகுதிவிகுதிப் பொருள்களுக்குள் விகுதிப் பொருட்கு முக்கியத்தன்மை யென்னும் சாமானிய நியாயத்தானே அவாவிடத்தன்மையி ல்சத்தத்தாற் போதிக்கப் பெற்றதேயாகும் சுத்தஞானசாத னத் தன்மைச் சேர்க்கையெனச் சுவர்க்ககாமாதி வாக்கியத் தில் சித்தமாய விசேட நியாயத்திற்குப் பலமுடைமையுண் மையினானும் "குதிரையாற் செல்ல விழைகின்றனன் வாளால் வெட்ட விழைகின்றனன்" என்பதாதி இலௌகிகப்பிரயோக த்தில் அசுவாதி ரூபசாதனத்திற்கும், "அது தேடத்தக்கது அது அறிவான் வேட்கத்தக்கது மனனிக்கத்தக்கது நிதித்தி யாசிக்கத்தக்கது" என்பதாதி வைதிகப்பிரயோகத்தில் விகுதி ப்பொருள் விதிக்கும் சந்விகுதி கூறிய இச்சையின் விடய த்திலேயே சமனாதியில் அன்வயம் வற்பன்னமாதலின்னும்; பகுதிபகர்த்த வித்தையில் மகமுதலியவற்றிற்கு விநியோகமா ம். அற்றேல், அவ்வாறாயின் வித்தையுதயமாகும் வரைகருமா னுஷ்டான அடைவால் "தியாகித்தவனே அஃதறியத் தக்க னாம்." என்பதாதி சுருதிசித்தமாகிய கருமத்தியாகரூபமாகிய சந்நியாசத்திற்குவித்தையின்பொருட்டாந்தன்மைபீடிக்கப்படும் மெனின்? அன்றாம், விரையை விரைப்பதன்முன் னுழுதல் அத ன் பின்னுழாமையென உழுதல் உழாமைகளானே நென் முத லியவை முளைப்பதேபோல "யோகத்திலேற விழைமுனி

தனக்குக் கருமங்காரணங்கழறப் பெறுமே, யோகத்தாலேறிய யோகிக்கேயோ, சமமே காரணஞ்சாற்றப் பெறுமால்." என்பதாதிவசனத்தையனுசரித்து மனத்தூய்மையில் அறியும் வேட்கைவடிவ ஆன்மாவையறியும் ஆற்றல் உறும்வரை கரும அநுஷ்டானமெனவும் அதன்பின் சந்யாசமெனவும் கருமஅதன் சந்யாசங்களானே வித்தையினுதயத்தை யங்கீகரித்தவினுன் நைஷ்கர்மியசித்தியினும் நிகழ்த்தப்பட்டதன்றோ:—பிரத்தியக்கான்மாவை யுணருமாற்றலை, கருமங்கண் மதிக்குக்கதுவுமாதந்து, தூய்மைவாயிலாய்ப்பயனுடையனவாய், விடவேதக்கனவாகிவாழும், கடுமைழையீற்றிற் கனமேபோலும், கருமங்கட்குவித்தையின் பொருட்டாந்தன்மைப் பக்கத்திலும் அறையும் வேட்கைவரையுமே யெனக்கரும அனுஷ்டானத்தில் அறியும் வேட்கைத் தகைமைப் பக்கமாதலின் யாதுபேதமெனின்? இது பேதமாம்:—கருமங்கட்கு வித்தையின் பொருட்டாந்தகைமைப் பக்கத்தில் வாயில் வடியமாகிய அறியும் வேட்கை கிடைத்த பின்னர் விடப்படுவதாயினும் பயன் கைவரும்வரையிருக்கும் நிவிருத்தியை முக்கியமாகவுடைய சிறப்புறு குரு,லாபம், இடையூறிலாதகேள்வி, கருதன், முதலிய சாதனங்களைச்சம்பாதித்து வித்தையை யுண்டாக்குந் தகைமை நியமமுளதாம். அறியும் வேட்கைப் பொருட்டாந் தகைமைப் பக்கத்திலோ, கேள்வி முதலியவற்றில் முயல்வை யுண்டாக்கு மாற்றலையுடைய வேகவிழைவைச் சம்பாதிக்கு மாத்திரையானே பயனடைத்தன்மையாமென இன்றியமையாது வித்தையை யுண்டாக்குந் தகைமை நியமமின்றாம். "யாவனுக்கு இந்நாற்பது சமஸ்காரங்கள்" என்னும் ஸ்மிருதிமூலத்தில் கருமங்கட்கு, ஆன்மஞான யோக்யதையைச்

சம்பாதிக்கும் மல நீக்கருண ஆக்க வடிவ சமஸ்கார பொருட்டதாந் தன்மைப் பக்கத்திற் போது மெனப்புகல்வர்.

அற்றேல், எக்கருமங்கட்கு உதாகரிக்கப்பட்ட சுருதியினுனே விநியோகம் உணர்த்தப் பெறுகின்றது? ஈண்டுச் சிலர் கூறுவதாவது:—"வேதானுவசனத்தால்" எனபிரஹ்மசாரிகருமங்கட்கும் "யாகத்தாற்றுனத்தால்" என இல்வாழ்வான்றருமங்கட்கும், "தவத்தால் உண்டியொடுக்கலால்" என வனம்வாழ்வான் றருமங்கட்கும் உபலக்கணமாமென ஆசிரமதருமங்கட்கே வித்தையினுபயோகமாம். இதனுனே "விதித்திருக்குந் தன்மையுண்மையினுனும் ஆசிரம கருமமும்" எனச்சாரீரக சூத்திரத்தில் வித்தையின் பொருட்டுக் கருமம் தனதாசிரமகருமபதப்பிரயோக மென்பதாம்.

கற்பதருவிலோ ஆசிரம தருமங்கட்கே வித்தை
யுபயோகமேன்பதாக இன்றும்,

என்னும் அதிகரணத்தில் ஆசிரமிகளல்லாதவர்களாகிய விதுராதிகளாலனுஷ்டிக்கப்பட்ட கருமங்கட்கும் வித்தையினுபயோகத்தை நிரூபித்திருத்தலின். முற்பிறப்பி லனுஷ்டிக்கப்பட்ட மகமுதலியவற்றுனே யாக்கப்பட்ட அறியும்வேட்கையையுடையவர்களாகிய ஆசிரமமற்ற விதுராதிகட்கு வித்தையின் சாதன சிரவணுதிகளில் அதிகார நிரூபணைமாத்திரக் கருத்தையுடையது அவ்வதிகரணமாம். அன்றி அவர்களாலனுஷ்டிக்கப்பட்டகருமங்கட்கும் வித்தையினுபயோக நிரூபணக் கருத்தையுடையதல்லவாமெனச் சங்கியா தொழிக; "விசேட அனுக்கிரகமும்" என, அதனதிகரண சூத்திர அதன்பாடியங்களில் அவர்களாலனுஷ்டிக்கப்பட்ட ஜபாதிரூபவ

ருண மாத்திர தருமங்கட்கும் வித்தையினுபயோகத்தைக் கண்டத்தானே கழறியிருத்தலின். "விதித்திருக்குந் தன்மை யுண்மையினுனும் ஆசிரமகருமமும்" என்னுஞ் சூத்திரத்தில் ஆசிரமபதத்திற்கு வருணதருமங்கட்கும் உபலக்கணத் தன்மையிருத்தலின் என்னுங் கருத்தானே இயம்பப்பட்டது. ஆசிரம தருமத்தினும் வேருயவற்றிற்கும் உளதாம் வித்தையுபயோகம்; ஆனல் நித்தியங்கட்கே அவற்றின் பயனுகிய பாவக்ஷயத்தை வித்தையவாவுகின்றது, காமியங்களினது பயனுகிய துறக்க முதலியவற்றை இன்ரும்; ஆண்டுப்பகுதியிற்றுணியப் பெற்ற உபகாரமா மங்கங்களை மாற்றியவழி பகுதியிலுற்ற உபகாரத்தினும் வேருகிய உபகாரகற்பனை யாகாதபோல ஞானத்தில் இனிது சேர்க்கப் பெற்றனவாகிய மகமுதலியவற்றிற்கு நித்திய சித்த பல பாவக்ஷயத்திற் கயலாய் நித்திய காமியப் பொதுவாக வித்தை யுபயோகியுபகாரகற்பனைகூடாதென்பதாம்.

சம்க்ஷேப சாரீரகத்திலோ:—நித்தியகருமங்கட்கும் காமியகருமங்கட்கும் விநியோகம் விளம்பப்பட்டுளது. யாகாதி சப்தம் சமமாதலின் பகுதியிற் சித்தமாகிய உபகாரப்பதார்த்தங்கட்குச் சித்தமாகிய பகுதி சம்பந்த உபகாரத்தை மாற்றும் வாயிலானே விகுதிகளில் மாற்றுதலானே ஒற்றுமையாம்; பதார்த்தங்களினுடைய மாற்றுதலின் பின்னுபகார கற்பனை கூடாதாமென ஆண்டுப் பகுதி சம்பந்தமாகிய உபகாரத்தினும் வேருகிய உபகார கற்பனை யடைவின்ரும். ஈண்டோ பிரத்தியக்ஷ சுருதியினனே முதற்கண்ணே இனிதுசேர்க்கப்பட்ட யாகாதிகட்கு, உபதேசிக்கப்பட்ட அங்கங்கட்கே போலும் பின்னர்க் கற்பிக்கத்தக்க உபகாரம், முதலிலுணர் விநி

தனக்குக் கருமங்காரணங்களுறப் பெறுமே, யோகந்தானெறிய யோகிக்கேயோ, சமமே காரணஞ்சாற்றப் பெறுமால்." என்பதாதிவசனத்தையனுசரித்து மனத்தூய்மையில் அறியும் வேட்கையுடைய ஆன்மாவையறியும் ஆற்றல் உறும்வரை கரும அநுஷ்டானமெனவும் அதன்பின் சந்யாசமெனவும் கரும அதன் சந்யாசங்களானே வித்தையினுதயத்தை யங்கீகரித்த வினுன் நைஷ்கர்ம்யசித்தியிலும் செழுத்தப்பட்டதன்றோ:—பிரத்தியக்கான்மாவை புணருமாற்றலே, கருமங்கள் மதிக்குக் கதுவுமாதக்கு, தூய்மைவாயிலாய்ப்பயனுடையனவாய், விடவேதக்கனவாகிவாழும், கமைபுபிற்றிக்கனமேபோதும், கருமங்கட்குவித்தையின் பொருட்டாந்தன்மைப் பக்கத்திலும் அறையும் வேட்கையையுமே யெனக்கரும அநுஷ்டானத்தில் அறியும் வேட்கைத் தகைமைப் பக்கமாதலின் யாது பேதமெனின்? இது பேதமாம்:—கருமங்கட்கு வித்தையின் பொருட்டாந்தகைமைப் பக்கத்தில் வாயில் வடியமாகிய அறியும் வேட்கை கிடைத்த பின்னர் விடப்படுவதாயினும் பயன் கைவரும்வரையிருக்கும் நிவிருத்தியை முக்கியமாகவுடைய சிறப்புறு குருலாபம், இடையூறிலாதகேள்வி, கருதல், முதலிய சாதனங்களைச்சம்பாதித்து வித்தையையுண்டாக்குந் தகைமை நியமமுளதாம். அறியும் வேட்கைப் பொருட்டாந் தகைமைப் பக்கத்திலோ, கேள்வி முதலியவற்றில் முயல்வையுண்டாக்கு மாற்றலையுடைய வேகவிழைவைச் சம்பாதிக்கு மாத்திரையானே பயனடைத்தன்மையாமென இன்றியமையாது வித்தையையுண்டாக்குந் தகைமை நியமமின்றாம். "யாவனுக்கு இக்நாற்பது சமஸ்காரங்கள்" என்னும் ஸ்மிருதி மூலத்தில் கருமங்கட்கு, ஆன்மஞான யோக்யதையைச்

சம்பாதிக்கும் மல நீக்ககுண ஆக்க வடிவ சமஸ்கார பொருட்
டதாந் தன்மைப் பக்கத்திற் போலு மெனப்புகல்வர்.

அற்றேல், எக்கருமங்கட்கு உதாகரிக்கப்பட்ட சுருதி
யினுனே விநியோகம் உணர்த்தப் பெறுகின்றது? ஈண்டுச்
சிலர் கூறுவதாவது:—"வேதாநுவசனத்தால்"என பிரஹ்மசா
ரிதருமங்கட்கும்"யாகத்தாற்றுனத்தால்" என இல்வாழ்வான்ற
ருமங்கட்கும்,"தவத்தால் உண்டியொடுக்கலால் ம. ன வனம்வா
ழ்வான் றருமங்கட்கும் உபலக்கணமாமென ஆசிரமதருமங்கட்
கே வித்தையினுபயோகமாம். இதனுனே "விதித்திருக்குந் தன்
மையுண்மையினுனும் ஆசிரம கருமமும்" எனச்சாரீரக சூத்தி
ரத்தில் வித்தையின் பொருட்டுக் கருமம் தனதாசிரமகரும
பதப்பிரயோக மென்பதாம்.

கற்பதருவிலோ ஆசிரம தருமங்கட்கே வித்தை
யுபயோகமேன்பதாக இன்றும்,

என்னும் அதிகரணத்தில் ஆசிரமிகளல்லாதவர்களாகிய
விதுராதிகளாலனுஷ்டிக்கப்பட்ட கருமங்கட்கும் வித்தையி
னுபயோகத்தை நிரூபித்திருத்தலின். முற்பிறப்பி லனுஷ்டிக்
கப்பட்ட மகமுதலியவற்றுனே யாக்கப்பட்ட அறியும்வேட்
கையையுடையவர்களாகிய ஆசிரமமற்ற விதுராதிகட்கு வித்
தையின் சாதன சிரவணுதிகளில் அதிகார நிரூபணமாத்திரக்
கருத்தையுடையது அவ்வதிகரணமாம். அன்றி அவர்களால
னுஷ்டிக்கப்பட்டகருமங்கட்கும் வித்தையினுபயோக நிரூப
ணக் கருத்தையுடையதல்லவாமெனச் சங்கையொழிக;
"விசேட அனுக்கிரகமும்" என, அதனதிகரண சூத்திர அந்
ண்டாடியங்களில் அவர்களாலனுஷ்டிக்கப்பட்ட ஜபாதிரூபவ

ருண மாத்திர தருமங்கட்கும் வித்தையினுபயோகத்தைக் கண்டத்தானே கூறியிருத்தலின். "விதித்திருக்குந் தன்மை யுண்மையினானும் ஆசிரமகருமமும்" என்னுஞ் சூத்திரத்தில் ஆசிரமபதத்திற்கு வருணதருமங்கட்கும் உபலக்கணத் தன்மையிருத்தலின் என்னுங் கருத்தானே இயம்பப்பட்டது. ஆசிரம தருமத்தினும் வேறாயவற்றிற்கும் உளதாம் வித்தையுபயோகம்; ஆனால் நித்தியங்கட்கே அவற்றின் பயனாகிய பாவக்ஷயத்தை வித்தையவாவுகின்றது, காமியங்களினது பயனாகிய துறக்க முதலியவற்றை இன்றாம்; ஆண்டுப்பகுதியிற்றுணியப் பெற்ற உபகாரமா மங்கங்களை மாற்றியவழி பகுதியிலுற்ற உபகாரத்தினும் வேறாகிய உபகாரகற்பனை யாகாததேபோல ஞானத்தில் இனிது சேர்க்கப் பெற்றனவாகிய மகமுதலியவற்றிற்கு நித்திய சித்த பல பாவக்ஷயத்திற் கயலாய் நித்திய காமியப் பொதுவாக வித்தை யுபயோகியுபகாரகற்பனைகூடாதென்பதாம்.

சம்க்ஷேப சாரீரகத்திலோ:—நித்தியகருமங்கட்கும் காமியகருமங்கட்கும் விநியோகம் விளம்பப்பட்டுளது. யாகாதி சப்தம் சமமாதலின் பகுதியிற் சித்தமாகிய உபகாரப்பதார்த்தங்கட்குச் சித்தமாகிய பகுதி சம்பந்த உபகாரத்தை மாற்றும் வாயிலானே விகுதிகளில் மாற்றுதலானே ஒற்றுமையாம்; பதார்த்தங்களினுடைய மாற்றுதலின் பின்னுபகார கற்பனை கூடாதாமென ஆண்டுப் பகுதி சம்பந்தமாகிய உபகாரத்தினும் வேறாகிய உபகார கற்பனை யடைவின்றாம். ஈண்டோ பிரத்தியக்ஷ சுருதியினானே முதற்கண்ணே இனிதுசேர்க்கப்பட்ட யாகாதிகட்கு, உபதேசிக்கப்பட்ட அங்கங்கட்கே போலும் பின்னர்க் கற்பிக்கத்தக்க உபகாரம், முதலிலுணர் விநி

யோக நிர்வாகப்பொருட்டுத் துணியப் பெறுதநாயினும் பொதுச் சத்தத்தாற் பொருந்தப்பெற்ற சகல நித்திய காமிய சாதாரணம் யாங்ஙனங் கற்பிக்க முடியாமற்போம். கருமங்களிற் கரும மீமாம்சகரானுமே உபகாரவாயிலாகப் பதார்த்தச் சேர்க்கையின்கண்ணே சித்த உபகாரநியமமாம்; பதார்த்தச் சேர்க்கையின்பின்புபகார கற்பனை செய்யிற்றே அசித்தமாயினும் இனிது சேர்க்கப்பட்ட பதார்த்தத்தை யநுசரித்து உபகாரங் கற்பிக்கத் தக்கதாம் என வுடன்பட்டே பாத அத்தியாயத் தொடக்கந் துணிதற்பொருட்டு உபகார வாயிலாக விருதிகளில் பகுதிச் சம்பந்தமாய சேர்க்கை பத்தாவதன்றியில் பொருத்தப்பட்டது; மேலும், சித்தமாய உபகாரங் கிடையாமையின் நித்தியங்கட்கே இவ்விநியோகம் என அங்கீகரிக்கின் நித்தியங்களானே பாவ க்ஷயமும், அதனானே ஞான உதயமும் அன்னியத்தாற் சித்தமாயவழி இவ்விநியோகம் விருதம். அன்னியத்தா லஃதசித்தமாகியவழி ஞானத்தாலபேக்ஷிக்கப்பட்ட உபகாரஜனகத்தன்மைஅவற்றிற் றுணியப்பெறுமென்பது சமமாதலின் நித்திய காமிய சாதாரணமாகிய விநியோகம் நீக்கமுடியாததாம். அற்றேல், நித்தியங்கட்குப் பாவக்ஷயமாத்திரஹேதுத்தகைமை அன்னியத்தானே துணியப்பெறினும் சிறப்பாக ஞானோதயத்திற்குத் தடையாகிய பாவநிவர்த்தகமுடைமை துணியப்பெறுதாம்; மற்றோ, இவ்விநியோகமுணர்தாய வழி ஞான உத்தேசத்தானே நித்தியானுஷ்டானத்தா லின்றியமையாது ஞானமுண்டாம், மாறாயிற்றோ தூய்மை மாத்திரமாம். ஞானோதயம் நியதமன்றாம் என இவ்விநியோகம் பயனுடைதாமெனின்? ஆயின் நித்தியங்கட்கும் துணியப் பெறுததேயாகிய ஞானோதயத் தடையாம் பாவநீக்கமும், ஞான சாதன விசிஷ்டகுருலாப சிரவணமனனதியைத் தரும்

அபூர்வமும் வாயிலாகக் கற்பிக்கத் தக்கதாமெனத் துணியப் பெறுத உபகார கற்பனை விசேஷத்தாற் சாமானிய சுருதியா னே சம்பாதிக்கப்பட்ட நித்தியகாமிய சாதாரண விநியோகம் ஒழிக்கப்படுமென்பதாம்.

அற்றேல், யாங்ஙனம் "கருமத்தானே கதுவுவான்பயனைச், சனகனே முதலோர் சார்ந்தனரன்றே" என்பதாதி ஸ்மரணத்தின் நிர்வாகம்? அதற்கு வித்தையின் பொருட்டாய கரும அநுஷ்டானபரத்தன்மையா மென்னற்க; விவிதிஷா வாக்கியத்தில் பிராஹ்மணக்கவர்ச்சியானே பிராஹ்மணர்கட்கே வித்தையின் பொருட்டாய கருமத்தில் அதிகாரம் புலப்படுதலின். ஆகையால் ஜனகாதியரால் அநுஷ்டிக்கப்பட்ட கருமங்கட்கு நேராகவே முக்தி உபயோகம் மொழியத்தக்கதாம். இவ்வாறியப்பறக; விவிதிஷாவாக்கியத்தில் பிராஹ்மண கிரகணத்திற்கு மூன்று வருணத்தவரின் உபலக்சணத் தன்மையிருத்தலின். இதில் புகழ்படைத்த வார்த்திக ஆசிரியர் புகல்வதாவது:— பிராஹ்மணக் கவர்ச்சி பிறங்குறு மீண்டு உயிரு பிறப்போருபலக்சணமாம், ஆன்மவுணர்ச்சியில் யாவருக்கும்மே, அதிகாரப் பான்மை சமமாயமைதலின் (உணர்ச்சியில் ஆன்மபோதன சாதன யாகாதிகருமத்தில்) "வித்தையைவேட்டவன் மகமுதலியவற்றை நிலைபெறுத்துக"வென மாறுபாடாகியவழி வித்யாகாம அதிகாரவிதியில் பிராஹ்மணபதத்திற்கு அதிகாரிவிசேஷ ஸமர்ப்பகத்தன்மை பொருந்தாதாம்; "உத்தேசிய விசேஷண மொவ்வாமையின்" "சுவராஜ்ஜியகாம. அரசன் இராஜ சூயத்தான் வேட்க" வெனச் சுவராஜ்ஜியகாம அதிகார இராஜசூய விதியில் "சுவராஜ்ஜிய காமன் அரசனைக் கருத்தாவாகவுடையஇராஜசூயத்தானேவேட்க" வெனக்கருத்

தாவாக யாகவிசேஷணத்தன்மையானே விதேயமாகிய அரச னுக்கு, அரசனைக் கர்த்தாவாகவுடைய இராஜசூயத்தை அர சனல்லாதவன் சம்பாதிக்கக் கூடாமையின் பொருளால் அதி காரிகோடியிற் புகுதலாதலே போல விவிதிஷை வாக்கியத் தில் யாகாதிகர்த்தாவாக விதேயப் பிராஹ்மணனுக்குப் பொரு ளால் அதிகாரிகோடியிற் புகுதலாம் எனப்பொருந்தாமையு மில்லையாகும். "எலாவாற்றானு மவையே இருமைக்குறியான்" என்னுஞ் சூத்திரத்திற் பிறவிடத்தில் விதிக்கப்பட்ட மகமுத லியவற்றிற்கு விவிதிஷைவாக்கியத்தில் பலவிசேஷ சம்பந் தவிதி, அபூர்வயாகாதி விதியன்றுமெனை விவத்தை செய்யப் பட்டிருத்தலின் அடையப்பெற்ற யாகாதி அனுவாதத்தான் ஒரு வாக்கியத்தில் கர்த்தாவடிவகுண விதியும் பல சம்பந்த விதியும் என உபய விதானத்தான் வாக்கிய பேத அடையா தலின் இராஜ சூயவாக்கியத்தில் அரசனுக்குக் கர்த்திருத்த கைமையிருத்தலின் விதேயத்தன்மையின்மைப் பக்ஷத்தில் அரசபதத்தோடுச்சரிதமாதன் மாத்திரத்தான்சிறப்புறுகர்த்தி ருத்தகைமை இலாபம்போலும். ஈண்டுவாக்கிய அபேதப் பொ ருட்டுக் கர்த்திருத்தகைமையானே பிராஹ்மண அவிதானமா யினும் பிராஹ்மணபதத்தோடுச் சரிதமாதன் மாத்திரத்தான் பிராஹ்மணக்கர்த்தாவுடைமையிலாபத்தால் பிராஹ்மண அதி கார முடிவுபெறுமெனை லேலாதாம்; பிறவிடத்தில் மூவருணத் திய அதிகார முடைமையின் துணியப்பெற்றவற்றிற்கு ஈண் டும் மூவருணத்திய அதிகா ராத்மவித்தைப் பொருட்டாந் தன்மையானே விதிக்கப்பட்டவையாய மக முதலியவற்றிற்கு மூவருணத்திய அதிகாரத்தகைமை பொருந்த மாதலினானே விதிசம்சர்க்கஹீன பிராஹ்மணபதத்தோடுச் சரிதமாதன்

மாத்திரத்தான் அதிகாரக் குறுக்கஞ் சம்பவியாமையின் பிராஹ்மண பதத்திற்கு அடைவிற்குத் தக்கவாறு வித்தையதிகாரி மாத்திர உபலக்கணத் தகைமையுசிதமாதலின்.

## 34 வது சூத்திரனுக்குப் பிரஹ்மவித்தையில் அதிகாரமின்மையை நிரூபித்தல்.

அற்றேல், வித்தை யதிகாரி மாத்திர உபலக்கணத் தன்மையேல் சூத்திரனுக்கும் வித்தையில் விழையுந் தன்மை சம்பவித்தலின் அவனுக்கும் வித்தைப் பொருட்டுக் கரும அதிகார வழக்காமெனின்? அற்றன்று, அத்தியயனத்தாற் கவரப்பெற்ற தனதத்தியாய ஜன்னிய அதன் பொருண்ஞானமுடையவனுக்கே வைதிகங்களிலதிகாரமாம் என அபசூத்திராதிகரணத்தில் அத்தியயன வேதவாக்கிய சிரவணாதி விதுரனாகிய சூத்திரனுக்கு வித்தையினதிகாரம் நிடேதிக்கப் பட்டிருத்தலின் "சூத்திரன் பொருட்டு மதியைக் கொடாதொழிக" என்னும் ஸ்மிருதியினானே தொடக்கத்தானும் அவனுக்கு வித்தை மகிமையினுணர்வினுபாய அசம்பவத்தால் அதனை விழைதலாந்தகைமை பொருந்தாமையினானும் அவனுக்கு வித்தையின் மாட்டு அதிகாரமின்மையின் எனச் சிலரியம்புவர்.

மற்றையர் கூறுவதாவது:—சூத்திரனுக்கும் உளதேயாகும் வித்தைப் பொருட்டாய கரும அதிகாரம். அவனுக்கு வேத அத்தியயனம் அக்கினி ஹோத்திர முதலியவை யசம்பவமாயினும் கண்டத்தாற் கழறப்பெற்ற சர்வ வர்ணாதிகார ஸ்ரீபஞ்சாக்ஷர மந்திர ராஜவித்தை முதலியவற்றின் ஜபம், பாவக்ஷயஹேதுவாகிய தபம் தானம் பாக யாகாதி சம்பவித்தலின் வேத அத்தியயனத்தான் யாகத்தான் தானத்தான்" என்பதாதி தனிக்காரகவேற்றுமைச் சுருதியானே விதுராதிகட்கு

வித்தைப்பொருட்டு ஜபதானாதிமாத்திர அனுஷ்டான அனுமதியினானும் வேதஅத்தியயனாதி சமுச்சய அபேக்ஷையின்மையின் சூத்திரனுக்கு வித்தையில் விழைவுறுந் தகைமை அசம்பவமா மென்னற்க. "கேட்பித்திடுக வருண நான்கினையும் அந்தணன்றன்னை யமைத்துமுன்பாக" என இதிகாசபுராண சிரவணத்தில் நால்வருண அதிகாரஸ்மரணத்தானே, புராணாதியாலுணரப்பெற்ற வித்தையின் மகாத்மிய முடையவனுக்கும் அதனவாவுண்மைய னுகலின் "சூத்திரன் பொருட்டு மதிமையக்கொடாதொழிக"வென்னும் ஸ்மிருதிக்கும் அவனனுஷ்டித்திடுதற்குத் தகுதியாகாத அக்கினிஹோத்திராதி கருமஞானதான நிஷேதபரத்தன்மையுண்மையின். அன்றாயினோ அவனுக்குத் தனது வருணதருமத்தையும் உணருமுபாயஞ் சம்பவியாமையானே, சூத்திரன் நான்காவது வருணத்தன் ஒருபிறப்பாளன், அவனுக்கும் சத்தியம் குரோதமின்மை, சௌசம், ஆசமனம், இதிற்கைகாற் கழுவலேயா மென்ப ரொருவர், சிராத்தகருமம் தாதரைக்காத்தல் தன்மனை மகிழ்ச்சிஇருபிறப்பாளரின் சேவை; என்பதாதியாக அவனது தருமத்தைப் பகுக்கும் வாக்கியங்கட்கு அனுஷ்டான மின்மை வடிவபொய்ம்மையடைவுறுதலின். இவ்வாறாயின் அபசூத்திர அதிகரணத்திற்கு விஷயமின்மை யெய்து மென்னற்க "சூத்திரன்பாற்பாதகஞ்சிறிது மின்றாம். சமஸ்காரத்திற்கருகனல்லன்" என்பதாதிஸ்மிருதியினானே குருவினடைவெனப் பெயரியவித்தையின் அங்க உபநயன சமஸ்காரமற்றவனாகிய அச்சூத்திரனுக்கு சகுண வித்தைகளினும் நிர்க்குண வித்தையின் சாதனமாகிய வேதாந்தசிரவணாதிகளினும், நிஷேதபரத்தன்மையுண்மையின் நிர்க்குண வித்தையில் சூத்திரனுக்கும் விஷய சௌந்தரியத்தாலாக்கப்பெற்ற விழைவுறுந்தகைமையை நிஷேதிக்கமுடியக

மையின் விதிக்கப்படாத அதன்கண்ணும் அதனினும் வேறாகிய அதிகார அடைவின்மையானே அங்கீடேதங் கூடாமையினு மென்க. அவனுக்கு வேதாந்த சிரவணம் அசம்பவமாகியவழி வித்தைப் பொருட்டாய கரும அநுஷ்டான சம்பவமாகியவழியும் வித்தை யுதயமாகாமையின் அவனுக்கதன் பொருட்டாய கரும அநுஷ்டானம் வாளாவன்றே போமென்னற்க. அவனுக்கு வேதாந்த சிரவண அதிகாரமின்றேனும் ஸ்ரீமத் பகவத்பாதரவர்களால் "நான்கு வருணத்தாரையும் கேட்பிக்க" எனவும் இதிகாச புராண முணர்வதில் நால்வருணா அதிகாரஸ்மரண மிருத்தலின் வேத பூர்வமாகச் சூத்திரர்கட்கதிகாரமின்றாட் என நிலைபெறும் என்பதாக அபசூத்திர அதிகரண உபசங்கார பாடியத்தில் பிரஹ்மாத்மைக்கியபர புராணாதி சிரவணமாகிய வித்தையின் சாதனத்தில் அதிகாரங்காட்டப்பட்டிருத்தலின், வித்தையுதய யோக்கிய விமல தேவசரீரத்தைத் திகழ்த்தும் வாயிலாய் முக்தியின் பொருட்டுண்டாகுமென மூவருணத்தினர்க்கும் கிரமமுக்திப்பயனுடைய சகுணவித்தையின் பொருட்டாய கரும அநுஷ்டானம்போலும் வேதாந்த சிரவண யோக்கிய மூவருணத்திய சரீரத்தை யாக்கும் வாயிலாக வித்தையுற்பத்தியர்த்தத்தன்மையுண்டாம் எனச் சூத்திரனுக்கு வித்தைப் பொருட்டாய கரும அநுஷ்டான விரோதமின்மையினானும் என்க. ஆகையால் விவிதிஷை வாக்கியத்தில் பிராஹ்மண பதத்திற்கு அடைவுற்றபடி வித்தையதிகாரிமாத்திர விஷயத்தன்மையானே சூத்திரனுக்கும் வித்தைப் பொருட்டாய கரும அதிகாரம் சித்திக்கின்றதேயாகும்.

## 35 வது சந்யாச ஆசிரமத்திற்கு வித்தையினுபயோகித்தன்மை

அற்றேல் கருமங்கட்குச் சித்த சுத்திவாயிலாய்வித்தை யினுபயோகமுளதாகுக; சந்யாசத்திற்கு எவ்வழியாக அத னுபயோகம்? சிலர் கூறுவதாவது:— வித்தையினுற்பத்திக் குத் தடையாகிய பாவங்கள் அனந்தமாதலின் சிலவை யாகா தியனுஷ்டானத்தால் நீக்கத்தக்கன; சிலவை சந்நியாச அபூர்வ த்தானே நீக்கத்தக்கன வெனக் கருமங் கடுப்ப மனத்தூய்மை வாயிலாகவே சந்நியாசத்திற்கும் அதனுபயோகமாம். இவ்வா றாகவே இல்வாழ்வோர்களுக்குக் கருமச்சித்திரங்களில் கேள் வி முதலியவற்றை அனுஷ்டிப்ப; அப்பிறப்பில் வித்தையினை டைவன்றாம்: மற்றோ மறுபிறப்பில் சந்யாசமுற்றேயாம். என் சனகாதியர்க்கு இல்வாழ்வோராயிருந்தும்வித்தையுளதாமோ? அவர்க்கு முற்பிறப்பில் சந்யாசத்தால் வித்தையினடையாம். ஆதலின் வித்தையின்கண்ணே சந்நியாச அபூர்வ வியபிசார சங்கையு மிலதாமென வுணர்க.

மற்றையரோ:—"சாந்தன் தாந்தன் உபரதன்" என்பதா திசுருதியில் உபரத சப்தத்தானே கவரப் பெறலின் சந்நியாசத் திற்குச்சாதனசதுட்டயத்துள்ளடங்கும் தன்மையுண்மையின் "சககாரியந்தரவிதி" யென்னுஞ்சூத்திரபாடியத்தில், அஃதுடையோனுக்கு வித்தையையுடையோனுக்கு சந்யாசிக்குப்பா லியபாண்டித்தியத்தைக்குறித்து மூன்றாவதாகிய இம்மௌனம் விதிக்கப்படுகின்றது. ஆகையால்பிராஹ்மணன்பாண்டித்தியம் என்பதாதி சுருதியில் அதனினும் முன்னர், பயிக்கமேற்றுண் பர் எனச்சந்யாச அதிகாரமிருத்தலின் எனபுகலலான் எல்லாத் தொழில்களையு மெடுத்தெறிந்தவனும், விசுவத்தை விடுவோன் விரும்பினேனும்ஆகிய அறியும் அவாவினனுக்கே, ஏகான்மத்

தன்மை எழின்மறை முடிகளில், அதற்காரித்தன்மையாமென்றறிக" என்னும் வார்த்திகக் கூற்றானும் சந்யாச அபூர்வத்திற்கு ஞானசாதன வேதாந்த சிரவணாதி அதிகாரி விசேஷணத் தன்மையாமென அதற்கு வித்தையுபயோகம் விளம்புவர்.

மற்றையரோ:—"சிரவணாதியங்கத்தன்மையானே ஆன்ம ஞானபலத்தன்மை சந்யாசத்திற்குச் சித்தமாம்" எனவிவரணக்கூற்றானே அனன்னிய வியாபாரமாகச் சிரவணாதி யாக்கஞ் செய்பு மதற்கு வித்தையினுபயோகமாம் திருஷ்டவாயிற் கிடைப்ப அதிருஷ்டகற்பனை கூடாமையின். வேறு ஆசிரமத்திலிருக்கும் ஆலசியமிலாத மதிமானாகிய புருஷசிரேஷ்டனுக்குக் கருமச் சித்திரங்களிற் சிரவணாதி சம்பவிக்கும்போது நான்காசிரமங்களுள் சந்யாச ஆசிரமத்தை யினிது கவர்தலானே கேள்வி முதலியவற்றைக் களத்தற் பாற்றாம் என்னும் நியமத்தை யங்கீகரிக்க வேண்டு மென்பதாம்.

அற்றேல் விவ்விரண்டு பக்கங்களினும் க்ஷத்திரிய வைசியர்களுக்கு யாங்ஙனம் வேதாந்த சிரவணாதியனுஷ்டானம்? சந்யாசத்திற்கதிகாரி பிராஹ்மணனாதலின் 'பிராஹ்மணன்வைராக்கிய வாயிலாய்ச்சந்யாசஞ் செய்க பிராஹ்மணன் சந்நியாசித்து, பிராஹ்மணன் இனிதுவிட்டொழிக" என்னும் சந்நியாம விதிகளில் பிராஹ்மணக் கிரகண மிருத்தலின் அதிகாரிவிசேஷத்தின்ஞானப்பொருட்டுப் பிராஹ்மணக்கிரகணமெதனானோ அதனான் க்ஷத்திரிய வைசியர்கட்குச் சுருதியின்கண்ணே சந்யாச விதியில்லையாகும்" என்னும் வார்த்திக உரையானும் எனின்? இதிற் சிலர்:—அல்லது வைராக்கிய முதிக்கின் அவலாற்றால் பிரஹ்ம சரியத்தினின்றே விடுக. கிருகத்தினின்றேனும், வனத்தினின்றேனும், என்னும் சமமஹறயானே, பிரா

ஹ்மணனேனும் க்ஷத்திரியனேனும் வைசியனேனும் கிருகத்தி னின்றும் விட்டொழித்துச் செல்லுக, மூன்று வருணங்கட்கு மிந்நான்கு ஆசிரமங்களாம்'' என்னும் ஸ்மிருதியானே, அனுக்கிரகிக்கப்பட்டதன்மையுண்மையானேக்ஷத்திரியவைசியர் கட்கும் சந்யாச அதிகாரம் துணியப்பெற்றவழி வேறுமறைக ளில் பிராஹ்மணக் கிரகணம் மூவர்க்கும் உபலக்கணமாம்.

இதனானே வார்த்திகத்திலும் ''அதிகாரி விசேஷத்தின்'' என்னும் சுலோகத்தானே பாடியக்கருத்தைப்பகர்ந்து''மூவர் க்குஞ் சமமாகச் சந்யாசம் சுருதியிற் கேட்கப்பெறுமேல் பிரா ஹ்மணக்கிரகணம் உபலக்கணப் பொருட்டாம்'' என்னும் பிற் சுலோகத்தானே தம்மதத்தில் க்ஷத்ரியவைசியர்கட்கும் சந்யாச அதிகாரங் காட்டப்பட்டதென அவர்கட்குச் சிரவணாதி யனுஷ்டான சித்தியைப் பொருத்துகின்றனர்.

மற்றையரோ:—அநேக சந்யாச விதிவாக்கியங்களில் பிராஹ்மணக்கிரகண மிருத்தலின் உதாகரிக்கப்பட்ட ஜாபால சுருதியிலிருக்கும் சந்யாச விதிவாக்கியத்தில் பிராஹ்மணக்கிர கணமின்றேனும் வேறு சுருதிசித்தமாகிய பிராஹ்மண அதி காரத்தையே சிந்தஞ் செய்து சந்யாச அவஸ்தையின்கண் ணே மகநூலிலாதவன் யாங்ஙனம் பிராஹ்மணனுவனென பிராஹ்மண ஆராய்ச்சியானும் பிராஹ்மணனுக்கே சந்யாச அ திகாரமாம். விரோத அதிகரண நியாயத்தானே (பிரத்யக்ஷ சுருதிவிரோதமாகிய ஸ்மிருதிவசனம் அப்பிரமாணமென்பது தாம்)' சுருதிக்கு விரோதமில்லாத மிருதிப் பொருள் இனிது கோடக்கிடக்கு மாதலின். சந்யாசத்திற்குச் சர்வாதிகாரித் தன்மையானே வார்த்திகவசன மியாதோ அது வித்வத்சந் யாச விஷயமாம். ஆதுர விவிதிஷாசந்யாசத்தில் பாடியக் கருத்

திற்கு விருத்தமாகிய சர்வாதிகாரப் பிரதிபாதன பரமின்றாம். சர்வாதிகாரத்தைபுஞ் சாம்புவிக்கும் விஞ்ஞானமானதடைய ப்படிமேல் சந்யாசத்திலதிகாரநியமம் யாங்ஙனம் வலிதிலாற் றல்?"என்னும் பிற்சுலோகத்தானே பிரஹ்மஞானஉதயத்தின் பின்னர்ச் சீவன்முக்தி காலத்தில் வித்வத் சந்நியாசத்தின் கண்ணே அதிகார நியம நிராகரணத்தான், இங்ஙனமாகவே, பிராஹ்மணர்கட்கே சிரவணாதியனுஷ்டானத்தில் சந்நியாசம் அங்கமாம். க்ஷத்திரிய வைசியர்கட்கு அதனவாவின்றியதாகு ம் சிரவணாதியதிகாரம் என அவர்கட்குச் சிரவணாதி அனுஷ் டான நிர்வாகமாகும். சந்யாசத்தைச் சிரவணம் அபேக்ஷிதப க்ஷத்தில் சிரவணமாத்திரத்திற்கு அதனபேக்ஷை நியமித்தல் கூடாதன்றோ. கிரமமுக்திப் பயனையுடைய சகுண உபாசனை யானே தேவபாவத்தையடைந்து கேள்விமுதலியவற்றிற் சந் நியாச அவாவற்றவனை இன்றியமையாது கூறவேண்டியிருத் தலின், தேவர்கட்குக் கரும அனுஷ்டான அடைவின்மையி ஞனே அதனது தியாக வடிவசந்யாசத்திற்கு அவர்பா லசம் பவமாதலின் என்பர்.

மற்றையரோ:—"பிரஹ்மத்தினிலே பெற்றோன் பேரமு தெய்துவானே" என்னுஞ் சுருதியுதிதமாகியபிரஹ்மத்தில் நிலை பேறு எவனுக்கு, நிலைபேறு சமாப்தி, அனன்னிய வியாபா ரத்தன்மை வடிவம் அதில் நிலைபெற்றிருத்தலாம், அவனுக் குக் கேள்வி முதலியவற்றில் முக்கிய அதிகாரமாம்."நடப்பி னு மிருப்பினும் நனவினுங் கனவினும், எவனது மனமாராய் வின் பரமேய்ந்திலே, அவன் மரித்தோனென அறையப்பெறு வன்" "துயிலலுயிர்விடுறுன்னும் வரையும் மாற்றுக காலம் மறை முடிச் சிந்தையால்" என்பதாதிஸ்மிருதிகளில் எஞ்ஞான்

றும் விசாரம் விதித்திருத்தலின், பிரமத்தில் அந்நன்னிலையே றும் சந்யாச மின்றி வேறாசிரமத்திருப்பவனுக்குச் சம்பவியா தாம். தத்தமாசிரம விகிதருமானுஷ்டான விஷேபமுறுதலின் சந்யாச மற்றவர்களாகிய க்ஷத்திரிய வைசியர்களுக்கு முக் கிய சிரவணாதியதிகாரமின்றாம். மற்றோ திருஷ்டார்த்தமாகிய வித்தையும் நிடேதமின்மைமாத்திரத்தானேயும் விலுூந்தோ ரைக் கேள்வி முதலியவற்றி லதிகாரியாக்குகின்றதாம்; என் னும் "இடையிலுமேயோ அது காணப்படலின்" என்னுமதி ரணபாடியம் பகர்ந்தருளிய நியாயத்தானேசூத்திரனைப்போ ல நிடேதிக்கப் பட்டவர்களாகிய அவர்கட்கு விதுராதிகட்கே போலும் மறுகாயத்தில் வித்தையை யடைவிக்கும் அமுக்கிய கதிகாரமாத்திரத்தானே சிரவணாதி யனுமிதியாம். "இடையி லுமேயோ அது காணப்படலின்" என்னுமதிகரணத்தில் விதுராதிகட் கங்கீகரிக்கப்பட்ட சிரவணாதி பரிதிகாம் முக்கியமாம் என வியம்புவான் ஏலோயாம்; ஆகலிலோ அ யலது மேன்மை குறியானுப்" எனச் சூத்திரக்காராரனே அ வர்கட்கு முக்கிய அதிகாரத்தை வெளிப்படுத்திபிருத்தலின் ஆண்டவர்கட்குக் கேள்வி முதலிய அதிகாரமே அமையப்ப டவில்லை. மற்றோ, அவர்கள் கருமத்திற்கு வித்தையையனுக்கி ரகிக்குந் தலைகமையாமெனச் சங்கியாதொழிக; திருஷ்டார்த் தமாகிய வித்தையும் என உதாகரிக்கப்பட்ட அதனதிகரண பாடிய முரணையின் க்ஷத்திரிய வைசியர்கட்குச் சந்யாசமின் மையின் அமுக்கிய அதிகாரமாகியவழி அதனானே அவர்க் கும் கேள்வி முதலியவற்றில் அமுக்கிய அதிகாரமேயாம். ஆகவே கிரமமுக்கியப் பயனையுடைய சகுணவித்தையினானே தேவதேகத்தை யடைந்து கேள்வி முதலியவற்றையனுஷ்டி ப்பவர்கட்கு வித்தைபெறுவான் சந்யாசத்திற்குந் தருதிய

யபிராஹ்மண ஜன்மத்தை மீண்டுங் கூறவேண்டும், வேண்ட வே "பிரஹ்மலோகத்தைப் பெரிதினிதடைந்து, கருமவிவ்வு லகைக் கதுவிலர் மீண்டே" "திரும்புகையின்று திண்மறை மொழியான்" என்பதாதி சுருதி சூத்திர முரண்பாடாம் என மொழியற்க; தேவர்கட்கு அனுஷ்டிக்கத்தக்க கரும விசேஷ மின்மையின் சுயமாகவே அனன்னிய வியாபாரத்தன்மை சம்பவிக்கின்ற தெனக்கிரமமுக்திப்பயனைபுடைய சகுண வித் தையைக் கூறும் சாஸ்திரப் பிரமாண மாதலினுன் சந்யாசமி ன்றியும் அவர்கட்கு முக்கிய அதிகார அங்கீகாரத்தான் என்பர்.

## 36-வது அமுக்கிய அதிகாரி செய்த வேதாந்த விசாரத்திற்கு மறுபிறப்பில் வரும் ஞானோபயோகித்தகைமை.

அற்றேல் அமுக்கிய அதிகாரியானே திருஷ்டபல வடிவ மாகிய வாக்கியார்த்த போதப் பொருட்டு விதிக்கப்படாது வேறு சாஸ்திர விசாரம் போலச் செய்யப்பட்ட வேதாந்த வி சாரமானது யாங்ஙனம் மறுபிறப்பின் வித்தையடைவிற்பொ ருந்தும். இன்றைக்காற்றிய ஆராய்ச்சிக்கு மறுதினத்தியஆரா யப்படு பொருளுணர்ச்சி ஹேதுத் தகைமையும் பொருந்து மென்பதாக வின்றாகவே சேய்மைத் தன்றே மறு ஜன்மத் திய அதனோதுத்தகைமை. முக்கிய அதிகாரியாகிய பரிக்ஷி ராஜகனுனே செய்யப்பட்ட கேள்வியும் திருட்டப் பொருட் டேயாம், உணர்ச்சிக்குத்திருட்டார்த்தத்தன்மையுண்மையின் அதற்குப் பிராரப்த கரும விசேஷ ரூபப் பிரதிபந்தக மிருத் தலின் இப்பிறப்பிற் பயனைப் பயக்காமல் மறுபிறப்பிற் பிரதி பந்தகமாதலினுனே பயனைப் பயக்கும் பான்மை "இம்மையி னுமிசை தடையில் வழிஅதைக்காண்டலின்" என்னுமதிகர

ணத்தில் ஆமாறு நிண்ணயிக்கப் பட்டிருத்தலின். இங்ஙனம் அமுக்கிய அதிகாரியாற்றியதற்குமாமெனை அறையற்க: சாஸ்திரீய அங்கத்தோடு கூடிய சிரவணம் அபூர்வ விதித்தன்மைப் பக்கத்தில் பயனுறுகாறும் அபூர்வம், நியமவிதித்தன்மைப்பக்கத்தில் நியம அதிட்டமேனும் பயக்குமாகலின் அஃதும் பிறப்பிலே நிணைப்புறுவதையடைவிக்கும் அதிட்டம்போல முன்னுண்டாகியிருப்பதாகிய சமஸ்காரத்தை வெளிப்படுத்தி அதற்கு மூல பூதமாகிய ஆராய்ச்சிக்கு மறுமையிலுறும் வித்தையுபயோகித் தகைமையைப் பொருத்திவைக்கும் எனப் பொருந்துறும். சாஸ்திரீய அங்கமற்ற சிரவணம் அதிர்ஷ்டத்தைப்பயப்பதாகாதாம் என யாங்ஙனம் அதற்கு மறுமையிலுறும் வித்தையுபயோகித்தகைமை பொருந்தும்? உள்ளடங்கிய அதிர்ஷ்டமின்றி மறுமையளவை வியாபாரத்திற்கு மறுமை யுணர்ச்சியேதுத்தகைமையை யங்கீகரிக்கில் மிகுவழக்காதலின்.

உரைக்கப்படுகின்றது:—விவிதிஷையுதித்த அமுக்கிய அதிகாரியினுலும் செய்யப்பட்ட சிரவணம், துவாரபூதமாகிய விவிதிஷையையுண்டாக்கும் பிராசீனவித்தைப் பொருட்டாய யாகாதி அனுஷ்டான ஜன்னிய அபூர்வத்தாலாக்கப்பெற்றதாம் என அதே அபூர்வம் வித்தைவடிவப்பயன் காறும் வியாபாரிக்கும் மறுமையிலுறும் வித்தையிலும்தான் செய்வித்த சிரவணத்திற்குஉபகாரித்தன்மையைப்பொருத்துவிக்கும் எனப்பொருந்தாமையின்றும்.சிரவணுதிகளில் விதியபாவப்பக்கத்திலோசந்யாச வாயிலாகச் செய்த சிரவணத்திற்கு அதிர்ஷ்டத்தை யுண்டாக்காத்தன்மையுண்மையின் தடையுற்றவழி அதற்கு மறுமையிலுறும் வித்தையின் ஹேதுத்தகைமையிவ்வாறே நிர்வகிக்கத்தக்கதாம்.

ஆசிரியரோ, நியமவிதிபக்கத்திலும் இதுவே நிர்வாகமாம். கேள்வியைப்பயில்வோனுக்குப்பலப்பிராப்தியின் பின் பெரும்பான்மையும் அந்நியம அதிர்ஷ்டம் உண்டாகாமையின். அதற்குப்பல பரியந்தமிராத குணத்தோடு கூடிய சிரவண அனுஷ்டான நியம சாத்தியத் தன்மையுண்மையின். நியம அதிர்ஷ்டத்தை தயுண்டாக்கும் சிரவண நியமம் பலபரியந்தம் ஆவர்த்தியாநின்ற கேள்வியின்உபக்கிரமமாத்திரையானே நிகழ்வதில்லையாம்; எதனானே அதனாலாகிய நியம அதிர்ஷ்டத்திற்கும் பலபரியந்த சிரவண ஆவிருத்தியினானே முன்னரே உற்பத்தி சம்பவிக்கலாமோ. குத்துதலைப்போலும் ஆவிருத்தி குணத்தைதயுடைய கேள்விக்கே பல சாதனத்தன்மையானே பல சாதனபதார்த்தமுண்டாதலின் முன் அந்நியம நிகழ்ச்சிவசனத்திற்குப்பற்றுக் கோடின்மையுண்மையின் கேள்விகுத்துதன்முதலியவற்றைத்தொடங்கன் மாத்திரையானே நியமமுண்டாகிய வழி அத்துணையானே நியம சாஸ்திர அனுஷ்டானம் சித்தமாமென அதன் ஆவிருத்தியில்லாவிடினும் கேடின்மை வழக்காதலினானும் என்பர்.

சிலரோ:—திருஷ்டார்த்தமாகிய வேதாந்த சிரவணத்திற்கே "நாடொறுங்குருபரன்களின சேவையினான், அடைதவலான அன்பொடுஞ்சிவணிய, உபநிடச்சிரவண முயர்வாமதனான், எண்பது கிருச்சிரப்பயனெய்துறுமே" என்பதாதிவசனம் பிரமாணமாதலினான் சுதந்திரமாக அதிர்ஷ்டத்தையுதிப்பிக்குந்தகைமையும் உளதாம். எங்ஙனம் அக்கினியின் சமஸ்காரப்பொருட்டாயஆதானத்திற்குப்புருட சமஸ்காரங்களில் எண்ணிக்கையிருத்தலின் அவன் பொருட்டாந்தகைமையுமாமோ, அங்ஙனமேவசனபலத்தால்இரண்டன்பொருட்டாந் தகைமை

பொருந்தலின். இங்ஙனமாகவே நிலைந்தோறுமாற்றிய சிரவணத்தாலுண்டாகிய அதிர்ஷ்ட மகிமையினாலேயே இம்மைவித்தையுபயோகித்தன்மை சிரவணமனனாதி சாதனங்கட்காமென மொழிவர்.

## 37-வது நிர்க்குணத்தையும் உபாசித்தல் கூடும்

இன்னணம் சிரவணமனனாதி சாதனானுஷ்டான ஆற்றலாற்றவனுக்கு வித்தையினடைவு ஆமென்னும் பொருளில் எல்லாமறைகளிலும் பொருந்தி நின்ற வழிபாரதீதீர்த்தர் தியான தீபத்தில் வித்தையினடைவின் மாட்டு வேறுபாயத்தையும் விளம்புவர்:—"அக்காரணம் சாங்கிய யோகங்களானேதானுயடையப் பெறும்" "எது சாங்கியரானே அடையத்தக்க இடமாமோ அது யோகிகளானும் அடையப்படும்' என்னுஞ் சுருதி மிருதி காணப்படுதலின். சிரவண சப்தத்தானே செய்யப்பட்ட மனனாதிசகாயத்தோடு கூடிய சாங்கியமெனப் பெயரிய வேதாந்த விசாரம் வித்தையடைவினுபாய மாவதே போல யோகசப்தத்தானே கூறப்பட்ட நிர்க்குணப் பிரஹ்ம உபாசனையும் ஆம். நிர்க்குணத்திற்குபாசனையேயில்லை யெனச் சங்கியா தொழிக; பிரசின உபநிடதத்தின் சைப்பியப்பிரசனத்தில் "யாவன் மீண்டும் இம்மூன்றுமாத்திரையோடு கூடிய பரம புருடனை ஓ மென்னு மிவ்வக்ஷரத்தானே தியானிக்கின்றானோ" என நிர்க்குணத்திற்கே உபாசனை பிரதிபாதிக்கப்பட்டிருத்தலின். அதன் பின்னர் "இஜ்ஜீவகனப்பரத்திலும் பரமாகிய பரமான்மாவைத் தியானிப்போன் இதயககனத்தில் மதிக்கரியாயிலங்குவதாய்ச் சாக்ஷாத்கரிப்பன்" என உபாசனையின் பலவாக்கியத்தில் சாக்ஷாத்காரத்தின் செயப்படு பொருளாகக் குறிப்பிக்கப்பட்ட நிர்க்குணப்

பிரஹ்மமே உபாசனை வாக்கியத்திலும் தியானத்தின் செயப்படு பொருளாம்; அயலல்லவாம். நேரேகாணல்தியானங்கள்காரிய காரணங்களாதலின் ஒரு விடயத்தை நியமமாய் வேண்டும், என்னுமிப்பொருள் ஈக்ஷதிகருமாதி கரணத்தில் ஸ்ரீமத் பாடியக்காரர் முதலியோரானே அங்கீகரிக்கப் பட்டிருத்தலின். தாபநீய கடவல்லியாதி சுருதியந்தரங்களாகிய பிறவிடத்தும் நிர்க்குண உபாசனை வித்தரிக்கப் பட்டிருத்தலினானும் என்க. ஸ்ரீமத் சூத்திரக்காரரானும், உபாசிக்கத்தக்கவரையறுப்பான் றொடங்கப்பட்ட குண உபசம்ஹார பாதத்தினும் நிர்க்குணத்தின் மாட்டும் "ஆனந்தாதிகள் பிரதானத்திற்காம்" என்னுஞ் சூத்திரத்தானே பாவரூபங்களாகிய ஞான ஆனந்தாதி குணங்கட்கு "அக்கரத்தறிவுகட்கோ ஆமுபசங்காரம்" என்பதாதி சூத்திரத்தானே அபாவ ரூபங்களாகிய அத்தூலத்தன்மை முதலியகுணங்கட்கும் உபசம்ஹாரங்காணிக்கப் பட்டிருத்தலினானும். அற்றேல், ஆனந்தாதிகுண உபசங்காரமுற்றுழி உபாசிக்கத்தக்கது. நிர்க்குணமே யாகாதாமெனின்? அற்றன்றும், ஆனந்தாதிகளானும் அத்தூலத்வாதிகளானும் உபலக்ஷிதமாகிய அகண்ட ஏகாசப் பிரஹ்மம் யானுயுளன் என நிர்க்குணத்தன்மையை நீக்காமலேஉபாசனையொவ்வுதலின். அற்றேல் "அஃதே பிரமமென்றறிதி நீயே, இஃதன்றெவ்விஃதுபாசிக்கலாமோ" என்னும் மறையான் பரப்பிரஹ்மம் உபாசிக்கத்தக்கதன்றா மெனின்? "அஃதறியப்பெறுவதனினின்றும், அஃகுதலில்லாவயலதேயாகும்" என்னும் மறையான் அதற்கு அறியப் பெறாந்தகைமையும் அசித்தமாதலின், வேறு வேதங்களில் பிரஹ்மஞானப் பிரசித்தியிருத்தலின் அறியப்பெறாச் சுருதி உண்மையபாய அறியப்பெறாமைப் பரமாமேலாயின் ஆதர்வணுதிகளில் அதனுபாசனை

பிரசித்தமாதலின் அதனையுபாசித்தலாகாதெனுஞ் சுருதியும் உண்மையாயேயுளதாகுக. இங்ஙனமாகவே, "கேள்வியினிடந் தும் கிளரகேகரினுன், நாள்வரையாது நண்ணிடப்படாதால்" எனக் கேட்கப் பெறுதலின் எவர் தமக்கு மந்தமதியினுதல் நியாயவிற்பத்திகுசலத்தோடு கூடிய ஆசிரியர் கிடைக்கப் பெருமையினுதல், சிரவண முதலியவை சம்பவியாதோ, அவர் அத்தியயனத்தானே கவரப்பெற்ற வேதாந்தங்களானே தொடக்கத்திலே அறியப் பெற்ற பிரஹ்மான்ம பாவமுடையராய், அவ்வாராய்வின்றியே பிரசின உபநிடதாதி கூறிய, இருடிகளாலியம்பப்பட்ட பிராஹ்மவாசிஷ்டாதி கற்பங்களிலும் பஞ்சீகரணாதிகளிலும் அநேகஞ் சாகைகளிற்கலந்து கிடந்த சர்வார்த்த உபசங்காரத்தானே, கற்பசூத்திரங்களில் அக்கினி ஹோத்திராதி போலும் நிர்ணயிக்கப்பட்ட அநுஷ்டானப் பிரகாரமாயநிர்க்குணஉபாசனத்தைச் சம்பிரதாய மாத்திரத்தையுணர்ந்துள்ள ஆசிரியர்பால் நிச்சயித்து அதனையனுட்டானத்தான் முறையாய் உபாசிக்கத்தக்கதாகிய நிர்க்குணப் பிரஹ்மசாக்ஷாத்காரத்தையடைவர். பயனுறும்மயல் நியாயத்தானே உபாசனையும் சிலபாற்பலகாலத்தில் பிரமையாக முடிவுறுதல் கூடலினுனும்; கரத்திலேந்து பலகறையை வைத்து மூடிக்கொண்டு எவனேனும் கையிலெத்துணைப் பலகறையெனக் கடாவுவானுயின் ஐந்து பலகறைகள் கையிலுள்ளனவென அதற்கு விடை விடுப்பவனுடைய வாக்கியப் பிரயோக மூலபூதமாகிய எண்ணிக்கை விசேடவுணர்வு மூலப்பிரமாணமற்றதாய் ஆகார்ய ஆரோபமாயிருந்தபோதினும் உண்மையாயொளிர லொப்பப், பிரஹ்மத்தின் அவ்வாறுந்தகைமையைத் துணியும் ஐயப்பாடின்றிய மூலப் பிரமாணத்தையவாவாததும், தகராதியுபாசனையொப்ப உபாசனை சாஸ்திர

மாத்திரத்தைப் பின்பற்றிச்செய்வதாயினும் நிர்க்குணப்பிர ஹ்ம உபாசனம் உண்மையாக யதார்த்தத்தன்மை யுண்மை யானே தகராதியுபாசனையாற்போலும் நிர்க்குணஉபாசனத்தா லுண்டாக்கப்பட்ட தன் விடய சாக்ஷாத்காரத்திற்குச் சிரவ ணாதிப்பிரமாணாதி ஜன்னிய சாக்ஷாத்காரம்போலுமே தத்து வார்த்த விடயத்தன்மை யின்றியமையாது கூடலினாலும் என் றுணர்க. இத்துணையோ சிறப்பாகும்:—தடையற்றவனுக்கு க்கேள்வி முதலிய முறையானே பிரஹ்மசாக்ஷாத்காரம் விரை விற் சித்திக்கும் எனச்சாங்கிய மார்க்கம் முக்கிய கற்பமாம்' உபாஸ்தியினானே தாமதத்தானென யோக மார்க்கம் அநுகற் பமாம் என்க.

## 38-வது பிரஹ்ம சாக்ஷாத்காரத்திற் கரணம்.

அற்றேல் இவ்விரண்டு பக்கத்திலும் பிரஹ்ம சாக்ஷாத் காரத்தில் யாது கரணம்?

சிலர் கூறுவதாவது:—உணர்வின் பயில்வு வடிவமாகிய பிரசங்கியானமேயாம். யோக நெறியில் தொடக்க உபாச னை வடிவமும், சாங்கிய நெறியில் மனனத்தின் பின்னர்த்தா கிய நிதித்தியாசன வடிவமும் ஆகிய அதற்கு இருப்புண்மை யின். அதற்குப் பிரஹ்மசாக்ஷாத்கார கரணத்தன்மையில் அளவையின்றாமென அறையற்க; "சிறப்பறுசிவனைச் சிந்தனை புரிவோன்,மறப்பறுமதனானதனையே காண்பன்," எனக்கேட்க ப்பெறுதலின். காமத்தாற் பீடிக்கப்பட்டவனுக்குத் தடையு ற்ற காமினி சாக்ஷாத்காரத்தில் பிரசங்கியானத்திற்குக் கரண த்தகைமைதுணியப்பெற்றிருத்தலினாலும். "ஆவிபோங் காறு ம் ஆண்டுமே கண்டேம்" என்னுமதி கரணத்தினும் "விகற்ப

மாமபின்னப்பயனுடைமையினே" என்னுமதிகாணத்தினும் தகராதியசங்கிரக உபாசகர்கட்குப்பிரசங்கியானத்தானே உபா சித்தற்குரியசகுணப் பிரஹ்மசாக்ஷாத்கார அங்கீகாரத்தானும் என்றுணர்க. அற்றேல், பிரசங்கியானத்திற்கு அளவையெ ண்ணிக்கைகளில் எண்ணிக்கையின்மையின் அதனினின்றுமுள தாய பிரஹ்ம சாக்ஷாத்காரம் பிரமையாகாதாம்' காகதாலீய மாய்ப்பயனோடுகூடிய பலகறையெண்ணிக்கை விசேஷ ஆஹா ர்யவுணர்வொக்கப் பொருட் பாதமிலாமையின் அளவையாத ல் பொருந்தும் என்னற்க; அளவையல்லாததை மூலமாகவு டையதற்குப் பிரமையாதல் கூடாமையின், ஆகார்ய விருத் தியும் உபாசனை விருத்தியையொப்ப வுணர்வினும் அயலாகிய ஞானதக்கிரியை வடிவாதலினானே இச்சை முதலியவற்றைப் போலும் பாதிக்கப்படாத பொருளை விடயஞ்செய்வதாயினும் பிரமையாதலை யங்கீகரியாமையின். இங்ஙனமியம்பற்க, சித் தமாகிய பிரமையின் கரண அமூலகத்தகைமையிருப்பினும் ஈசுரர துமாயா விருத்தியைமானும்பிரமைத்தன்மை கூடலின் விடயபாதமிலாமை சமமாதலின். இருநெறியினும் பிரசங் கியானத்திற்கு ஆராய்ந்ததேனும் ஆராயாததேனும் ஆகிய அருமறைமுடியினின்றுமுளதாய பிரஹ்மஞானத்தை மூலமா க உடைத்தானமையின் பிரசங்கியானத்தினின்றுமுண்டாய பிரஹ்ம சாக்ஷாத்காரத்திற்குப்பிரமாண மூலகத்தன்மையுண் மையினானும் என்க. கற்பதருக்காரரானே கூறவும் பெற்று ளதாம்:—"மறை முடித்திகழ்மகாவாக்கியத்துண்டாம், இறை புணர்வென்னும் பாவனையினும், கறையறுகாட்சிக்கண்ணேமூ ல், மறையளவைத்திடத்தன்மையின்மாண்பை, இறையளவே னும்மயந்திடாதன்றே" பிரமாணமாதல் பிறிதானதலினடை

வாமாலென்னற்க; அப்பிராமாண்ய சங்கையை யகற்றற்பொ ருட்டு மூலசுத்தியை யனுசரித்தலின் என்பதாம்.

மற்றையரோ "இவ்வணுவான்மாவெழின் மனத்தானே செவ்விதிற்காண்க, சிறக்கவே காண்பர், தவ்வறக்கூரியதண்ம தியானே" என்பதாதி மறையான் மனமே பிரஹ்மசாக்ஷாத் காரத்திற்கரணம், அதற்கு உபாதியோடுகூடிய ஆன்மாவில் அகம் விருத்தி ரூபப்பிரமையின்கரணத்தன்மை துணியப்பெ ற்றுளதாமாதலின் "கணுவுலகவிபரீதப்பிரமாதாஞானசாதன அந்தக்கரணத்திற்" கென்பதாதி பஞ்சபாதிகை விவரணக்கி ரந்தங்களானும் அங்ஙனமேயறையப்பட்டிருத்தலின், "யானே இவ்வியாவும் யாவுமாயுள்ளேன், எனவே யெண்ணுவனிவன் றனக்கதுதான், பரம மாமுலகம்" என்னுஞ்சுருதி கூறிய கனவில் பிரஹ்மசாக்ஷாத்காரத்தின்கண்ணே மனத்திற்குக்கரண த்தன்மை இனிது பொருந்துதலின் அக்கால் வேறு கரணமி ன்மையின் பிரசங்கியானமோ மனச்சககாரித்தன்மையினானும் பொருந்துதலின். வாக்கியார்த்த பாவனைப்பரிபாக சகிதமாகிய மனம் துவம்பதார்த்தமாகிய அபரோக்ஷப்பொருட்டு அவ்வ வ்வுபாதியாகார நிடேதத்தானேதற்பதார்த்தத்தன்மையைஅ டையுமா செய்கின்றது என்னும் பாமதி வசனத்தான். "நிட் களமதனைத்தியானமே நிகழ்த்தும்; புட்கரவிசுத்தசத்துவப்பு னிதன், உட்கருதலினான், மனவொருமையினுன்நிட்களமதனை யே நிரந்தரங்காண்பன்" என்னுஞ்சுருதியினும் ஞானப்பிரசா தசப்தத்தான்அறையப் பெற்ற சித்த வொருமையின் ஹேது வாகவே தியானத்தைக்கோடலின். பிரசங்கியானமானது சுய ங்கரணமாகாதாம், அதற்கோரிடத்தும் ஞானகரணத்தன்மை சித்தமாகாமையின். காமப்பீடையனது காமினிசாக்ஷாத்காரா

தியினும் பிரசங்கியானசகாயமுற்றமனமே கரணமெனல் கூட லின் சித்தமாகியஞானகரணத்தினும் வேறாகியதொன்றைக்க ற்பித்தல் கூடாமையி னென்பர்.

மற்றையரோ "இவனாசிரியாலெழிலதையறிந்தனன், தமத்தநிட்டானத்தைத்தரிசிப்பித்தனன், ஆசிரியனையுறுமன் பனறிந்தனன், அவனுக்கத் தூணேயே தடையாகும்" என்ப தாதி மறைகளின் மாட்டு ஆசாரிய உபதேசத்தின் பின்னரோ பிரஹ்ம சாக்ஷாத்காரம்உதய முற்றூழி ஜீவன் முக்தி செவி கொளப்படுதலின். "வேதாந்த விஞ்ஞான விளங்கு நிச்சயப் பொருள்" என வேறுதியான அவாவின்மை கேட்கப் படுதலி ன். "அவ்வுபநிடதமறைதருபுருடனை" எனப் பிரஹ்மத்திற் கு உபநிடதமொன்றானே கவரப்பெறுந்தன்மை கேட்கப்படு தலினாலும் உபநிடதசம்பந்தமாகிய மகாவாக்கியமே பிரஹ்ம சாக்ஷாத்காரத்திற் கரணம், மனமன்றாம் "யாது மனத்தான் மனனிக்கலாயிடா" என அதற்குப் பிரஹ்மசாக்ஷாத்காரகர ணத்தன்மையின் நிடேதமிருத்தலினாலும். அபக்குவமனத் தின் விடயமாமிஃதென்னற்க; எதனான் மனமறிந்திடப்படு மென்றறைவர்" என்னும் வாக்கிய சேடத்தில் மனோமாத்தி ரங்கவரப்பெறுதலின், இங்ஙனமேல் "யாதுவாக்கானும் இலக்கிடப் படாதோ" எனச்சப்தத்திற்கும் அதன்கரணத் தன்மை நிடேதிக்கப்படுகின்றது. எனச் சங்கியாதொழிக மனத்தைக் கரணமென்னும் வாதிகட்கும் சப்தத்தை நிர்வி சேடத்தில் பரோக்ஷ ஞானகரணமெனவுடன்பாடுண்மையின் அம்மறைக்கு "எதனினின்றும் வாக்கடையாமன் மனத்தி னொடு மருண்டுதிரும்பும்" என்னும் மறையை யனுசரித்துச்சு ப்தார்த்த அடைவு வடிவசக்தி வாயிலாய்ச் சப்தத்திற்கு அத

ன் கரணத்தன்மை நிடேதமாகிய வழிதாற்பரியஞ் சாற்றவேண்டலின் சக்கியசம்பந்தரூப இலக்கணைவாயிலாகச் சப்தத்திற்கதன்காரணத்தன்மை மூராணுருமையின் "மனத்தானே தான் மாண்புறக்காண்பது" என்னுஞ் சுருதி சித்தமாகியமனத்திற்குமதன் கரணத்தகைமை நூக்குவான் ஏலாதா மெனநுதலற்க சாப்தசாக்ஷாத்கார ஜனனத்தினும் அதனொருமை விரும்பப்பெறுதலின் ஹேதுத்தன்மை மாத்திரத்தானே மூன்றும் வேற்றுமை கூடலின். மனத்தாலிதனைக்காண்கின்றனன் மனத்தாலிதைக்கேட்கின்றனன்" என்பதாதியில் அவ்வாறே காணப்பெறுதலின் ஸ்ரீமத் பகவத்கீதையின் விவரணத்தில் ஸ்ரீமத் பாடியக்காரராற் கூறப்பட்ட மனக்கரணத்தன்மை வசனம் வேறுமதக்கருத்தானே பிரவிருத்தித்தலின் என்பர்.

## 39-வது பிரஹ்ம விடயமாகிய சாப்த ஞானத்திற்கும் அபரோக்ஷத்தன்மையை யறைதல்.

அற்றேல்ஆயினும் சப்தத்திற்குப் பரோக்ஷ ஞானத்தை பயக்குந் தன்மையியற்கையுடைமையின் அபரோக்ஷஞானத்தைப்பயக்கும் பான்மை பொருந்துறுதாம் எனின்? ஈண்டுச் சிலர்:—தானுகச்சமர்த்தநற்றதேனுஞ்சத்தம், சாஸ்திரசிரவணமனனபூர்வகவுணர்வின்பயில்வால் உண்டாக்கப்பட்ட சமஸ்கார சமூகத்தாற் கிடைக்கப்பெற்ற பிரஹ்மத்தி லொருமையையுடைய மனக்கண்ணுடியான் அனுக்கிரகிக்கப்பட்டதாகிய பரோக்ஷஞானத்தை; சாஸ்திரீய சமஸ்காரத்தோடுகூடிய அக்கினியை யதிகரணமாகவுடைய ஹோமம் அபூர்வத்தைப் பயப்பதேபோலும் பயக்குமெனக் கற்பிக்கப் பெறும். "கடக்கின்றுன் சோகத்தைக் கண்டவனுன்மாவை" என்னும், சாத்திரத்தானே அபரோக்ஷ கர்த்திருத்துவ அத்யாசத்

திற்கு அபரோக்ஷமாகிய அதிஷ்டான ஞானமிலாது நீக்கங் கூடாமையின், உபஹிதப்பிரதிபாத்தியப் பிரஹ்மத்தின் கண்ணும் வேறளவை பிரவிருத்தியாமையின் சத்தத்தானும் அபரோக்ஷஞானம் உளதாகாதொழியவே மோக்ஷமின்றென்னும் பிரசங்கம் வருதலின் என்பர்.

மற்றையரோ :—பாவனைக் குழுவோடு குழுமிய வெளியிலசமர்த்தமாகிய மனத்திற்கு மரித்தவனிலையின் சாக்ஷாத்காரத்தைப் பயக்கும் பான்மையைக் காண்டலின், நிதித்தியாசனத்தோடுகூடிய சத்தத்திற்கும் அபரோக்ஷ ஞானத்தைப் பயக்குந்தன்மை பொருந்துமெனக் கண்டதைக் கொண்டு பொருத்துகின்றனர்.

வேறு சிலரோ :—ஞானத்திற் கபரோக்ஷத் தன்மையென்பது அபரோக்ஷ அர்த்தவிஷயத்தன்மையாம், வேறொன்றை விளம்ப முடியாமையின். அர்த்த அபரோக்ஷத் தன்மையோ அபரோக்ஷ ஞானவிடயத் தன்மையன்றாம், எதனுன் அன்னியோன்னிய ஆசிரயமெய்துமோ ; மற்றே, அவ்வப் புருட சப்பந்தமாய சைதன்ய அபேதமாம் ; அந்தக் கரண அதன்றருமங்கட்குச் சாக்ஷியாற் கற்பிதமாந்தன்மையுண்மையின் அதனபேத மிருத்தலின், பாகியசைதன்யத்திற்கற்பிதங்களாகிய கடாதிகட்குப் பாகிய சைதன்யத்தில் விருத்தியாலாக்கப்பட்ட அவ்வப்புருட சம்பந்தமாயசைதன்ய அபேத அபிவியக்தியினனே அதனபேத மிருத்தலினனும் யாண்டும் அவ்வியாப்தியின்றாம். அந்தக் கரண அதன்றருமங்களாகிய ஞானதிகட்கே போலும் தருமாதரும சமஸ்காரங்கட்கும் சாக்ஷியிற் கற்பிதமாந்தன்மை சமமாயுண்மையின் அபரோக்ஷ அடைவாமென்னற்க : அவைகட்கு வெளிப்பாடின்மையின்,

வெளிப்பட்ட ஜடத்திற்கே சைதன்ய அபேத அபரோக்ஷத் தன்மையென அங்கீகரித்திருத்தலின் இவ்வாறுகவே, எஞ்ஞான்றும் எல்லாப் புருட சைதன்ய அபின்னத் தன்மையுண்மையின் "எது சாக்ஷாத் தபரோக்ஷமாகிய பிரஹ்மமோ" என்னுஞ் சுருதியினுனே, சுயமாகவே அபரோக்ஷம் பிரஹ்மமென அபரோக்ஷார்த்த விடயத்தன்மை யுண்மையின் சாத்தமாகிய பிரஹ்மஞானத்திற் கபரோக்ஷத் தன்மையைக் கூறும் ஊகம்பொருத்த முடையதேயாமென்பர்.

அத்வைத வித்யாசாரியரோ :—ஞானத்தினது அபரோக்ஷத் தன்மை அபரோக்ஷார்த்த விடயத் தன்மையன்றும், சொரூபசுக அபரோக்ஷரூப சொரூபஞானத்தில் வியாபியாமையின், சுவவிடயத் தன்மை யிலக்கண சுவப்பிரகாசத் தன்மை நிடேதிக்கப் பட்டிருத்தலின்; மற்றே, அவ்வப்பொருட்குத் தம் வியவகார அனுகூல சைதன்ய அபேத அர்த்த அபரோக்ஷத் தன்மை யிருப்பதேபோல அவ்வவ் விவகார அனுகூல சைதன்யத்திற்கு அவ்வப்பொருளபேதம் ஞான அபரோக்ஷத் தன்மையாம். ஆகவே சைதன்ய தருமமே அபரோக்ஷத் தகைமையாம், அனுமிதித்தன்மை முதலியவற்றைப்போலும் அந்தக்கரணவிருத்தி தருமமன்றும். இதனுனே சுகாதிப் பிரகாச வடிவசாக்ஷியின்பால் சொரூப சுகப் பிரகாசரூப சைதன்யத்தின்பாலும் அபரோக்ஷத் தன்மையாம் கடாதி யிந்திரிய சம்பந்த விருத்தியில் அதனனுபவிரோதமாமென்னற்க; அனுபவம் விருத்தியவச்சின்ன சைதன்யத்திருக்கும் அபரோக்ஷத் தன்மையை விடயஞ்செய்து பொருந்துதலின். அற்றேல், கூறிய ஞானர்த்தங்களின் அபரோக்ஷத் தன்மை இருதயாதி கோசரசாத்த விருத்திசாத்த விட-

யங்களில் அதிவியாப்தமாம், ஆண்டுத் தெய்வ யோகத்தான் ஒருகால் விருத்தி விஷய சம்சர்க்க முளதாகிய வழி விருத்தி யவச்சின்ன சைதன்யத்திற்கும் விஷயாவச்சின்ன சைதன் யத்திற்கும் அபேத அபிவியக்தி யிருத்தலினுனே அகற்ற முடியாத தன்மை யுண்மையின் எனின்? அற்றன்றும், பரோ க்ஷவிருத்திக்கு விஷயாவச்சின்ன சைதன்யத்திருக்கும் அஞ்ஞானத்தை யகற்று மாற்றலில்லாமையின் ஆண்டஞ்ஞா னத்தானே மறைபட்ட விடய சைதன்யத்திற்கு மறைபடாத விருத்தியவச்சின்ன சாக்ஷி சைதன்யத்தோடு அபேத அபிவி யக்தியில்லாமையின் அபரோக்ஷத் தன்மையின் அடைவின் மையின். இதனுனே, ஜீவனுக்குச் சமுசார தசையில் உண்மை யாகப் பிரஹ்ம அபேத மிருந்தபோதினும் அதனபரோக்ஷத் தன்மையில்லையாம். அஞ்ஞான ஆவரணமாக்கிய வேற்றுமை யிருத்தலின். இவ்வாறு பிரஹ்மத்திற்கு ஜீவ அபரோக்ஷத் தன் மை சம்பவியாமையின் அசர்வஞ்ஞத் தன்மையினடைவா மென்னற்க, அஞ்ஞானமானது ஈசுரனை மறையாமையின் அவர்க்குச் சீவபேதத்தைச் சேர்விப்பான் முடியாததாம் எவற்கு எவ்வஞ்ஞானம் மறைப்பாமோ அதற்கு அவற்கு அதனதாசிரயபேதத்தைச் சேர்விக்குந் தன்மை யுண்மையின் இதனுனே சைத்திர ஞானத்தான் அவனுக்குக் கடாஞ்ஞா னம் நீங்கியவழி நீங்காததாகிய மைத்திர அஞ்ஞானம் மைத் திரனுக்கே விஷய சைதன்யத்தின் வேற்றுமையைச் சேர்விக் கும், எனச்சைத்திரனுக்குக் கட அபரோக்ஷத் தன்மையின் அனுபவங்கூடாமையு மின்றும். அற்றேல், இன்னணம் விருத் திவிடய சைதன்ய அபேத அபிவியக்தி இலக்கண அபரோ க்ஷத்தன்மைக்குத் தன் விடய சைதன்யத்திருக்கும் அஞ்

ஞான நீக்கப்பிரயோச்சியத் தன்மை யுளதேலாயின் அதற்கஞ்ஞான நீக்கப் பிரயோஜகத் தன்மை கூடாமையின் ஞானமாத்திரமே அஞ்ஞானத்தை நீக்குவதாகுமெனின்? ஆகாதாம் எந்த ஞானமுண்டாவதாய்த் தன் காரணமகிமையானே விடய சம்பந்தமாயே யுண்டாமோ அதுவே அஞ்ஞானத்தை நீக்குவதாம் எனச் சிறப்பித்தலின், இந்திரிய சம்பந்த வுணர்வுகட்கு அவ்வாறுந்தன்மை யுண்மையின். இவ்வாறாகவே சத்தத்தானுண்டாவதாயினும் பிரஹ்மஞானம் சர்வ உபாதான வடிவமாகிய தன் விடயபிரஹ்ம சம்பத்தமாகவே யுண்டாமென அதற்கு அஞ்ஞானத்தை நீக்குந் தன்மையாதலும், அஞ்ஞானம் நீங்கிய வழி அதனை மூலமாகவுடையவேற்றுமை தோற்றொழிதலின் அபரோக்ஷத் தன்மையாதலும் ஆமென, இனிதாகவே இயையுமென்க. அற்றேல் இவ்வண்ணம், அத்தியயனத்தானே கவரப்பட்ட வேதாந்த ஜன்னியமாகிய அதன் ஞானத்தானும் மூலாஞ்ஞான நீங்கவே அபரோக்ஷத் தன்மை யேனுண்டாகமாட்டாது? அதன் சத்தை நிச்சயரூபத் தன்மை யின்மையின் அஞ்ஞானத்தை நீக்குவதாகாதாம் என நிகழ்த்தற்க; ஆபினும், கேள்வியாற்றினேனுக்கு ஐயப்பாடின்றிய சாத்தவுணர்வானே அதனீக்கத்தான் மனனாதி வாளாபோமெனு மடைவாமெனின்? அன்றும், கேள்வியானே ஐயப்பாடின்றிய ஞானமிருந்தபோதினும் சித்தவிக்ஷேப தோஷத்தாற்றடை யுண்மையின் அஞ்ஞான நீக்கமிலாமையின் அதை நிராகரிப்பதில் மனன நிதித்தியாசன நியமவிதியர்த்தானுஷ்டானத்திற்குப் பயனுடைமையிருத்தலினானும்; முற்பிறப்பின்கண் மனனாதி யனுட்டானத்தானே சித்தவிக்ஷேபத்தை நீக்கியவனுக்கு உபதேசமாத்

திரையானே பிரஹ்ம அபரோக்ஷத் தன்மையை யங்கீகரித்திருத்தலினானு மெனக்கூறுவர்.

## 40—வது அஞ்ஞான நிவர்த்தக நிரூபணம்.

இனியிவ்வித மாயினும் நிதித்தியாசனஞ் செய்தவனுக்கு வேதாந்த ஜன்னியப் பிரஹ்மஞானத்தாற்போலக் குட முதலியவற்றின் ஞானத்தானும் பிரஹ்ம அஞ்ஞானநிவிருத்தியேனாகமாட்டாது? அதற்குப் பிரஹ்ம அவிடயத்தன்மையுண்மையின் அதனானே பிரஹ்மஅஞ்ஞான நீக்கமின்றாம்என இயம்பற்க; குடமிருக்கின்றதென்பதாதி மதிவிருத்திக்குச் சத்வடிவமாகிய பிரஹ்ம விடயத்தன்மையை யங்கீகரித்தலின், ஆண்டுக் குடாதியாகார விருத்தியானே அதனஞ்ஞானம் நீங்கிய வழி சுயமாக விளங்குதலினானே அதனவச்சின்னசைதன்யம் சத்தெனவொளிரும், அதற்குக்குடாதியாகாரவிருத்திவிடயத் தன்மையின்றாம் எனக் கூறற்க, அஃதிலதேல்! குடவிடயம் ஞானம், அதனவச்சின்னசைதன்ய விஷயம் அஞ்ஞானம், என வெவ்வேறு விடயத்தால், ஞானத்தானே அதனஞ்ஞான நீக்கம் கூடாமையின் ஜடத்தில் ஆவரணஞ் செய்யும் வேலையின் மையின்குடம் அஞ்ஞானவிடயமல்லவாம். குடாதிவிருத்திக்கு அதனவச் சின்னசைதன்ய விடயத்தன்மை யிருப்பினும்அக ண்டானந்தஆகாரத்தன்மையின்மையின்அதனான் மூலாஞ்ஞா னநீக்கமின்றுமென்னற்க; வேதாந்த ஜன்னியசாக்ஷாத்காரத்தி னும் அஃதின்மையின் ஆண்டகண்டத்தன்மை யேனும் ஆன ந்தத்தன்மையேனும் பிரகாரமாயொன்றுள தென்பதாக இன் றன்றே! வேதாந்தங்கட்குச் சம்சர்க்க அகோசரப் பிரமை யைப் பயக்குந் தகைமையிலக்கண அகண்டார்த்தத்தன்மையி னானி வந்துறுதலின் வேதாந்த ஜன்னியஞானத்தானே அதனஞ்

க்க நியமமெனை அறையற்க; சித்தமாகிய அஞ்ஞான நிவர்த்த கத் தகைமைப் பிரயோஜகவடிவம் அயலுணர்வினும் இருத்தலின் அவ்வாறுநியமிப்பான் முடியாமையின் கடாதியாகாரவிருத்திவிஷயமாகிய அவச்சின்ன சைதன்யத்திற்கும் கற்பிதத்தன்மையுண்மையானே மூலாஞ்ஞான விஷயபூதமாகிய சத்ய அநவச்சின்னசைதன்யம்போதோ அதன் விடயத்தன்மையின்மையின் கடாதிவிருத்திகட்கு நிவர்த்தியத்தகைமையபிமத அஞ்ஞான சமானவிடயத்தன்மையிலச்சணசித்தப்பிரயோஜகமேஇன்றுமென்னற்க; ஆண்டு அவச்சேதகாங்கிசத்திற்குக் கற்பிதத்தகைமை யிருந்தபோதினும் அவச்சேத்திய அங்கிசத்திற்கு அகற்பிதமூலாஞ்ஞானவிஷய சைதன்யரூபத்தன்மைஉண்மையின், அதுகற்பிதமாயின்கடத்தைப்போலும்ஜடமாதலின் அவஸ்தாஞ்ஞானத்தின் பொருட்டும்விடயத்தன்மையெய்தாமைபின், அவஸ்தாஞ்ஞானத்திற்கு மூலாஞ்ஞான விடய அகற்பித சைதன்ய விடயத்தன்மை கூறவேண்டலின், அதனை நீக்கும் கடாதிஞானத்திற்கும் அதன் விடயத் தகைமை இன்றியமையாதியைய வேண்டிழி அப்பக்கத்தினும் அதனுன்மூலாஞ்ஞான நீக்க வழக்கை நீக்கமுடியாமையின். ஈண்டியம்புவராசிரியர்:—சைதன்யம் விழிமுதலிய வற்றுனுதித்த விருத்தி விடயமன்றும் "இது தனக்குருவமிருப்பதுவாகவிலங்கலின்றிதனை மற்றொருவன், மதமொடு விழியாற் காண்டலு மிலையான் மறைமுடிச் சுயம்புவெம் பெருமான், றிதமுறுஞ்செவிமுற் பொறிகளை வெளியிற்றிரிதர விதித்துளனதுற், கதியென வெளியிற்காண்பதேயலது கதிர்த்தவுள்ளான் மனைக்காணு" என்பதாதி சுருதியினுனே அதற்குப் பரமாணுவாதி போலும் விழிமுதலிய வற்றின் அயோக்கியத்தன்மை யுபதேசத்தானும் ஔபநிடத மெனச் சிறப்பித்தலினுனும் என்க. "எல்லாவுண

ர்விற்கும் வேத்தியமாக இன்பமாம் பிரமமிலங்காநிற்கும்" என்பதாதி வார்த்திக விரோதமாம் என்னற்க; அதற்கும் கடாதியாகார விருத்தி யுதயமாகிய வழி ஆவரண நீக்கமுண்மையின், சுயம் பிரகாசசத்வடிவப் பிரஹ்மம் கடமிருக்கின்றதெனக் கடங்கடுப்ப விவகார விடயமாமென உபசாரமாகக் கடாதி விருத்தி வேத்தியத்வ பரத்தன்மையுண்மையின். கடாதி ஞானத்திற்கு ஆவரணத்தை நீக்குந்தன்மையோயா கடாதிவிடயத்தன்மையானே பொருந்தும்; கடாதிக்கும் அஞ்ஞான விடயத்தன்மைஉண்மையின்" கடத்தையறிந்திலேன்கடஞானந்தானேகடாஞ்ஞானங்கழிந்தது" எனஅவஸ்தாஞ்ஞானத்திற்குக்கடாதி விடயத்தன்மை அநுபவிக்கப்படுதலின், ஆண்டாவர்ணமாற்றுந்தொழி லொன்றுமிலாமையின், அஞ்ஞான அங்கீகாரம் பொருந்தாதாம், அதனையிலக்கும் அநவச்சின்னசைதன்யத்திற்கு ஆவரணத்தானே அதன் அப்பிரகாசம் அமைதலின் என அறையற்க; கூறிய முறையே ஜடத்திற்குச் சாக்ஷாத்தஞ்ஞான விடயத்தன்மையின் நீக்கங் கூடிய போதினும் ஜடாவச்சின்ன சைதன்யப் பிரகாசத்தின் அஞ்ஞானந்தானேயாவரணமாம். அதனுன் நித்திய சைதன்யப் பிரகாச சம்சர்க்கத்திலும் ஜடத்திற்கு "இல்லையொளிர வில்லை" என்பதாதி வியவஹார யோக்கியத்தன்மை யெனப் பாம்பரையாய் அஞ்ஞான விடயத் தன்மையை யங்கீகரித்தலின் நேராகவேனும் ஒன்றன் வாயிலாகவேனும் எதனஞ்ஞானம் மறைக்குந்தக்கதோ அதன் விடயத்தன்மையையே ஞானத்தில் அதனஞ்ஞான நிவர்த்தகத்தன்மைப் பிரயோஜகவடிவிற் புகுத்தலின் இங்ஙன் கடாதிகட்குக் கூறிய முறையே மூலாஞ்ஞான விடயத்தன்மையுமாமெனக் கடாதி சாக்ஷாத்காரத்தானே மூலாஞ்ஞானநிவிருத்தியடைவாமென்னற்க;பலபலத்தானே அதனஞ்

ஞான காரியத்திலும் அயலாகிய அதன் விடயவிடயகத்தன்மையே அதன் நிவர்த்தகத்தன்மையிற் பிரயோஜகமாதலின்.

அல்லது மூலாஞ்ஞானத்திற்கே ஜடம் விடயமன்றும்.அவச்சின்ன சைதன்யத்தைப்பற்றி நிற்பனவாகிய அவஸ்தாஞ்ஞானங்கட்கோ அவ்வச்சடமே விடயமாம்; அன்றாயினோ, விழியான் விளைந்த விருத்தியானே சந்தனக்கட்டைச்சைதன்யமிலங்கவே அதனைச் சம்பந்தித்த கந்தத்திற்கும் அபரோக்ஷவிடய அடைவாதலின். அஃதிலங்காதொழியின் சந்தன அதனுருவங்கட்கும் அப்பிரகாச அடைவாதலின். விழியின் விளைந்த விருத்தியானே சந்தன அதனுருவ அவச்சின்னசைதன்யங்களின்இலக்கத்தானே அவற்றின்பிரகாசம் கந்தாகார விருத்தியபாவத்தானே கந்தாவச்சின்ன சைதன்யத்தின் விளக்கமின்மையானே அதன் அப்பிரகாசமும் ஆமெனின் அறையற்க; சைதன்யத்தையிருபங்காக்கி விருத்தி கூடாமையானே தமதாசிரயத்தில் யாண்டும் வியாபித்து நிற்கும் ஒரு திரவிய குணங்கட்குத்தனித்தனியாகக் ககனவச்சேதகத் தன்மைக்கே போலும் சைதன்யாவச்சேதகத் தன்மைக்கும் சம்பவமின்மையின். அவற்றிற்குத் தமதாசிரய திரவியாவச்சின்ன சைதன்யத்தானே, சுக்தி இரதமங்கிசாவச்சின்ன சைதன்யத்தானே சுக்திரஜதம்போலும் ஒளிரப் படுந்தன்மை யுண்மையானே அதன் விளக்கமுளதாயவழி கந்தத்திற்கும் அபரோக்ஷத் தன்மையினடைவாதலின் கந்தத்திற்கும் பிரகாசத்தின் விளக்க மிலதாயவழி வெள்ளி முதலியவற்றிற்கும் பிரகாச மின்மையின் அடைவாதலின். கந்தாகார விருத்தியுனுற்ற சைதன்யத்தின் கண்ணே கந்த மொளிரும் என்னும் நியமமின்றும் பிரகாச சம்சர்க்கத்திற்கே பிரகாசமான சப்தார்த்தத்தன்மையானே

அதனுகாரவிருத்தியில்லாதிருந்தபோதினும்மறைபடாத பிரகாச சம்சர்க்கத்தின்கண் ணப்பிரகாச மானத்தன்மைக் கற்பனை முரணுறுதலின். விளங்காநின்ற கந்த உபாதான சைதன்யத்திற்குக் கந்த அசம்பந்தக்கூற்றுச் சம்பவியாமையின். ஆகலின் எங்ஙனம், சைத்திரனுக்குக் கடவிருத்தியுளதாகிய வழி அவன்பொருட்டு மறைத்திருந்த அஞ்ஞானமே நீங்கும் என அவனுக்கே விடயப் பிரகாசம், மற்றையனுக்கின்றும்; அங்ஙனம், அவ்வவ்விடயாகார விருத்தியினுனே அவ்வதனைமறைத்திருக்கும்அஞ்ஞானமேநீங்கலின்வேறுவிடயம்அபரோக்ஷமாதலின்றும். அபரோக்ஷப் பொருட்கே அறிவினபேதத்தான் அபரோக்ஷமாதலாமென் றங்கீகரித்திருத்தலின்என்பதாகப்பிரமாதாவின் பேதத்தாற்போல விடயபேதத்தானும் ஒரு சைதன்யத்தின்கண்அவஸ்தாஞ்ஞானபேதத்தை விளம்பவேண்டலின் அவஸ்தாஞ்ஞானங்கட்கு அவ்வச்சட விடயகத்தன்மையாமெனக் கடாதிவிருத்திகட்குஅவஸ்தாஞ்ஞானநிவர்த்தகத்தன்மையில் யாதொரு கூடாமையுமின்றும். மூலாஞ்ஞான நிவர்த்தகத்தன்மையினடைவுதானுமன்றும். இங்ஙனமாயினும் ஜீவவிஷயமாகியஅகமாகார விருத்திக்கு மூலாஞ்ஞான நிவர்த்தகத்தன்மையி னடைவர்மென நிகழ்த்தற்க; அதற்குச்சுயம்பிரகாசமான சித்திலத்தியத்தமாகிய சித்தலாவங்கிசமாத்திர விடயத்தன்மை யுண்மையின்; சோகமென்னும் பிரத்தியபிஞ்ஞைக்கும் சுயம்பிரகாச சைதன்யத்தின்கண்ணே அந்தக்கரண வைசிஷ்டயத்தோடுகூடப் பூர்வ அபரகால வைசிஷ்டயமாத்திரவிஷயத்தன்மையானே சைதன்ய விடயத்தன்மையின்மையின் என்பதாம்.

சிலரோ:—கடாதி விருத்திகட்கு அவ்வவ்வவச் சின்ன சைதன்ய விஷயத்தன்மையை யங்கீகரித்து "எல்லாவள

வையு மெழிலறிவேய்தலான், எல்லா வளவை கட்கெழில
டை வுளவழி, வில்லாமறை முடிநியமன விளைவான், நல்லோ
ய் கேட்குக நவின்றது மொழியே" எனவார்த்திகம் வழங்
கிய கேட்கத்தக்கதென்னும் வாக்கியார்த்த வேதாந்த நியம
விதியனுசாரத்தானே வேதாந்தஜன்னியமேயாகிய நியம
அதிர்ஷ்டத்தோடு கூடிய பிரஹ்மஞானம் தடையற்றதாய்ப்
பிரஹ்ம அஞ்ஞானத்தை நீக்குவதாகும் எனக் கடாதிஞான
த்தானே அதனீக்க வழக்காகாதாம் என்பர்.

மற்றையரோ:—அது நீயாயிருக்கின்றாய் யென்னும்வாக்
கிய ஜன்னியமாய் ஜீவப்பிரஹ்ம அபேதகோசரமேயாயஞா
னம் மூலாஞ்ஞான நிவர்த்தகமாம்; மூலாஞ்ஞானத்திற்கு
அதனபேத கோசரத்தன்மை யுண்மையின் எனச்சைதன்ய
சொரூபமாத்திரத்தைக் கோசரிக்கும் கடாதிஞானத்தானே
அதனீக்க வழக்கின்றாம். தத்துவத்தைக் கவரும் பிரமாணத்
தானே யுணர்த்தப்படும் அபேதம் சைதன்யத்தினும் அயலா
யின்றே இருமையினடை வாதலின், அபேதம்சைதன்யமாத்
திரமாமென அதனைக்கவரும் கடாதிஞானமும் அபேதகோச
ரமாமென்றறையற்க; அபேத ஞானமென விடயத்தானே
விசேடம் விளம்புவேமல்லேம்; மற்றோ தத்துவம்பத வாச்
சியார்த்தங்களாகிய இருதருமியின் பராமரிசாதி ரூபகாரண
விசேஷ அதீனமாகிய சொரூபசம்பந்த விசேடத்தானே சை
தன்ய விடயத்தன்மையே அதனபேத ஞானத்தன்மையாம்.
எங்ஙனம் விசேஷண விசேஷிய அதன் சம்பந்தங்களைக் கவ
ரும் பான்மை சமமாயினும விசிஷ்டஞானத்திற்கு விசே
ஷண ஞானதிகாரண விசேஷ அதீனசொரூப சம்பந்த விசே
டத்தானே அம்மூன்றையுங்கோசரிக்குந்தன்மையே சமூகால

ம்பனத்தினும் வேறாகிய விசிஷ்ட ஞானத்தன்மையாமோ; எங்ஙனந்தான் குற்றிப்பான்மைமகன்மையுடையது என்னும் ஆகார்ய விருத்தியினும் வேறாகிய ஐயப்பான்மையாமோ; விடயத்தானே விசேடநிரூபண மிலாமையின்; அங்ஙனம் கடாதிகளினும் அதுவேயிக்குடம் என்பதாதி ஞானத்திற்குச் சொரூபசம்பந்த விசேடத்தானே கடாதிவிடயத்தன்மையே, கேவலகட சப்தாதி ஜன்னிய ஞானத்தினும் வேறாகிய அதனபேத ஞானத் தன்மையாம், அபவாய அபேதத்தையறைய முடியாமையானும்; அபாவ ஒப்புமை யாதிகளாகிய அதிகரணப் பிரதியோகி முதலியவற்றோடும் சொரூபசம்பந்த முற்றவைகட்கு அதிகரணத்தோடு ஆதார ஆதேய பாவரூப சொரூபசம்பந்தவிசேஷமாம்; பிரதியோகியோடு பிரதியோகியனுயோகி பாவரூபமாம் என்பதாதிப் பிரகாரமாய்ச் சொரூப சம்பந்தத்தில் உள்ளடங்கிய விசேடகற்பனை யிருப்பதேபோல விஷயத்திலும் சம்யோக தாதாத்மியங்கட் கதிப்பிரசங்கம் வருதலினானே விடயங்களோடு விடயவிடயி பாவரூபசொரூபசம்பந்த முடையனவாகிய விருத்திகட்கு விடயவிசேட நிரூபணஞ் சம்பவியா தொழிந்தவழி சித்தமேயாய சொரூப சம்பந்தத்தில் உள்ளடங்கிய விசேட கற்பனத்தானே அபேதஞானத்தன்மை முதலிய பாஸ்பரவைலக்ஷண்ய நிர்வாகத்தானு மென்க. இங்ஙனமாகவே பிரஹ்ம ஞானத்திற்கு அபேதமென்னும் சிறிது சம்சர்க்ககோசரத்தன்மையை யங்கீகரியாமையின் வேதாந்தங்கட்ககண்டார்த்தத்தன்மையின் ஹானியுமின்றுமென்றனைறவர்.

அற்றேல், கடாதிஞானங் கடுப்பப் பிரஹ்மஞானத்திற்கும், மூலாஞ்ஞான நிவர்த்தகத் தன்மை பொருந்தாதாம்

நிவர்த்தகத் தன்மையில் அதனிருப்பைச் சகியாமைவடிவ விரோதம் பிரயோஜகமாதலின் காரியத்திற்கும் உபாதானத் தோடுகூட அத்தகைய விரோதமின்மையின் எனின்? அன்றும், காரியகாரணங் கட்குப் பிறவிடத்தில் அத்தகைய விரோதங்காணு விடினும் ஏகவிஷயஞான அஞ்ஞானமடைவித்த அத்தகைய விரோதத்திற்கு ஈண்டிருப்புண்மையின்; காரிய காரணங்களாகிய அக்கினி சம்யோக படங்கட்கு அத்தகைய விரோதத்தைக் காண்டலினானும் என்க. அக்கினி சம்யோகத்தானே அவயவவிபாகப்பிரக்கிரியையானே அசமவாயி காரண சம்யோக நாசத்தானே படநாசமாம். அக்கினி சம்யோகத் தாலன்றா மென்னற்க; தத்த படத்திலும் முற்சையுக்த அவத்தைத் தொடர்பு காண்டலின் படைக் கலத்தாற் பொடிபட்டகுடம் போலும், அவயவ விபா கங்காணாமையின்; ஆண்டவயவ விபாகாதி கற்பனை அளவை யற்றதாதலின். ஆண்டு நூற்கட்குந் தாகமுண்மையானே சம வாயிகாரண அழிவானே பட அழிவாம் என்பதுமேலாதாம். அமுசு தந்து முதலியவைகளோடு ஒரே காலத்திற் படத்திற் குத் தாகங்காணப் பெறுதலினானே முறைக்கற்பனை முற்றா மையின். எதனானே கீழாக அவயவ அழிவின்றாமோ, ஆண் டவயவத்தில் அக்கினிசையோகத்தானே நாசங்கூற வேண்ட லின் என்பதாம்.

## 41–வது பிரஹ்மாகார விருத்திநாசகநிருபணம்.

அற்றேலாகுக அஃதவ்வாறே, ஆயினும் விலாசத் தோடுகூடிய அஞ்ஞானநாசகமாகிய இந்தப் பிரஹ்மஞான மெங்ஙனம் நசிக்கும், அபல் நாசகமொன்றுமின்மையின் எனி ன்? அன்றும், எங்ஙனம் தேற்றாம் பொடி சலிலத்தோடு

சம்பந்தித்து முற்புகுந்த மட்பொடிகளை உட்பிரிந்துறுமாறு செய்து தன் பிரிவையும் செய்துகொள்கின்றதோ; அங்ஙனம், ஆன்மாவிலத்தியஸ்தமாகிய பிரஹ்மஞானம் முன்னத்தியஸ்தப் பிரபஞ்ச முழுவதையும் நீக்கித் தன்னையும் நீக்கிக்கொள்ளுகின்றது என்பதாகச் சிலர் கூறுவர்.

சிலரோ:—அயலை நீக்கித் தானும் நீங்குவதில் சாய்ந்த லோகம் மாந்திய நீர்நியாயத்தை உரையாடுவர்.

மற்றையரோ:—ஈண்டு எரிந்த புற்குழுவெரியுதாகரணமியம்புவர். துவம்சத்திற்குப் பிரதியோகியினும் வேறாகியது கொண்டுண்டாகுந்தன்மை நியமமாமென்பதுங் கூடாதாம்; அனுகூல ஊகமின்மையினானும் விறகற்றதீயழிவிற்பிறழ்ச்சினானும் என்க. துவம்சத்திற்குப் பிரதியோகி மாத்திரஜன்னியத்தன்மையேல் மிகுவழக்காதலின் வேறுகாரணமொன்று தலையாய் விளம்பவேண்டும், விறகற்றதீமுதலியவற்றின் ஒழிவினும் கால அதிட்ட ஈசுர இச்சை முதலிய காரணங்கள் வேறுளவாம் என வியம்பற்க; மிகு வழக்காதலை யறியாமையின். கடாதிதுவம்சத்திற்கும் காரணாந்தரக்காதலுண்மையாமென மிகு வழக்காமென்னற்க; துவம்சமாத்திரத்திற் காரணாந்தரக்காதலுண்மையைக் கழறுமையின். கடத்துவம்சத் திருஷ்டாந்தத்தானே பிரஹ்மஞானத் துவம்சத்திற்குக் காரணாந்தரக்காதல் காரணமெனக்கழறற்க; அத்திருஷ்டாந்தத்தானே கதையின் வீழ்ச்சிக்காதலுக்கும் காரணம் அடைவாதலின். ஞானத்துவம்சத்தன்மைச் சமத்தன்மையான் கடஞானாதியின்றுவம்சத்திற்கும் காரணாந்தரக்காதலுண்மையாமென மிகு வழக்காமாலோவெனின்? ஆகாதாம், விறகோடுகூடிய தீத்துவம்சத்திற்கு நீர் தெளித்தன் முதலிய திருஷ்டகார

ணக் காதலிருந்தபோதினும், விறகற்ற தீத்துவம்சத்திற்கு அதனவா வேண்டாமைபோலும்; நனுஞானத்துவம்சத்திற்கு விரோதி விசேஷ குணம் வேறொன்றன் விழைவிருந்தபோதினும், துயின் முன்னுணர்வின்றுவம்சத்திற்கு அதனவா வேண்டாமைபோலும்; மூலாஞ்ஞான நிவர்த்தகஞானத்துவம்சத்திற்குக் காரணாந்தரக்காதலிருப்பினும் அதனிவர்த்தக ஞானத்துவம்சத்திற்கு அதனவாவின்மையமைதலின். காரணாந்தரக் காதலிலதேல் தனதுற்பத்தியின் பிற்கணத்திலே அழிவாம் என மிகுவழக்காமெனலும் வெறுமையே; இட்டமாதலின். அதனுற்பத்தியின் பிற்கணத்திலே பிரஹ்மத்தி லத்தியஸ்தப்பிரபஞ்ச முழுவதன்றாகத் தான் அதனுட்பட்ட அதற்கும் அஞ்ஞான்றே தாகத்தை யங்கீகரித்தலின் விறகின்றிய தகனத்துவம்ச நியாயத்தானே பிரஹ்மஞானத்துவம்சத்திற்கும் கால அதிர்ஷ்ட ஈசுர இச்சை முதலிய காரணாந்தரஜன்னியத்தன்மை யிருந்தபோதினும் விரோதமிலாமையினு னு மென்றுணர்க. சர்வப்பிரபஞ்ச நிவர்த்தியின் பின் னேகசேஷ பிரஹ்மஞானத்திற்கு நிவர்த்தியென அங்கீகரியாமையின் ஒரே காலத்தில் சர்வதாகமாகவே முற்கணத்தில் சிதவித்யாசம்பந்த ரூப வேறு திரவியரூப காலத்திற் காதல், ஈசுரப் பிரசாதரூப அந்தக் கரண குண விசேட அதிட்டத்திற்காதல், பிறவற்றிற்குமிருப்புண்மையின். ஆண்டு ஞானத்தினும் வேறாகியகாரணத்தை யவாவினும் பிரஹ்மஞானத்திற்குப் பொய்ம்மையின்மை வழக்காம் ஞானகநிவர்த்தியத்தன்மை மித்தியாத்தன்மையென அங்கீகரித்தலின் என அறையற்க;ஞானமடங்காச் சாமக்கிரியகற்றும் லோடும் ஞானமகற்றல் என்பதே யதன் பொருளாதலின் ,'அயனெறியின்றும்'' என்னுஞ் சுருதியினும் ஆண்டே

கருத்தாதலின். ஆகலின் பொருத்தமுடைத் தேயாகும் தத்த தாகியதகனாதி நியாய மென்றுணர்க.

சிலரோ:—விருத்திரூபமாகிய பிரஹ்மஞானம், அஞ்ஞானத்தையும் அதனை மூலமாகவுடைய பிரபஞ்சத்தையுமகற்றுதாம், அஞ்ஞானத்திற்குப் பிரகாச நீக்கத்தன்மையின் நியமத்தானே ஜடரூப விருத்தி நீக்கத்தன்மை கூடாமையின்; மற்றோ அதனாரூடமாகிய சைதன்யப் பிரகாசம் அதன் நிவர்த்தகமாகும். சொரூபமாக அதற்கு அஞ்ஞானாதி சாக்ஷித்தன்மையானே அதை நீக்குமுடியாதாயினும் அகண்டாகார விருத்தியின் மீதாரோகணித்தது அதனை நீக்குவதாக அமைதலின். "இம்மகிழிரவியெழி லொளிபுன்முத, றம்மை யிலக்கினுந் தக்கும் புல்லைக் கம்மற்சூரியகாந்தத்தேறி, அம்முறையதனை யாண்டமைத்திடுக" எனப் பெரியோர் கூறியிருத்தலின். இங்ஙனமாகவே சிறிது விறகிலேறிக்கிராம நகராதிகளைத் தகித்துத் தகனம் அக்காட்டத்தையும் ஒருதலைபாய்த்தகிக்குமா போல அந்திய விருத்தியிலாரோகணித்து நிகிலப் பிரபஞ்சத்தையும் நீறுக்கிய அகண்ட சைதன்யப் பிரகாசம் அதனை யழிப்பதிலும் ஆற்றலுடையதாம் என அதனழிவில் யாதொருகூடாமையுமின்றூ மென்பர்.

மற்றையரோ :—பிரஹ்மஞானம் அஞ்ஞானத்தின் நிவர்த்தகமேயாகும். ஞானஞ்ஞானங் கட்கே நேரே விரோதமுண்மையின். பிரபஞ்சத்திற்கோ உபாதான நாசத்தானே நாசமெனப் பிரபஞ்சத் துள்ளடங்கிய பிரஹ்ம ஞானத்திற்கும் அதனானே யழிவாம். பிரபஞ்சம் ஞான அநிவர்த்யமாயின் மித்தியாத்வங்கூடாதாம் என்னற்க; பிரபஞ்ச நிவிருத்திக்கு நேராக ஞானத்தாலாந் தன்மையின்றேனும் ஞான

ஜன்னியமாகிய அஞ்ஞான நாசஜன்னியத்தன்மை யுண்மையின் நேராகவேனும் பரம்பரையாகவேனும் ஞானஏகநிவர்த்தியத் தன்மை மித்தியாத்தன்மையென அங்கீகரித்தலின். இவ்வாறாகவே தத்துவ சாக்ஷாத்கார முதயமாயினும் ஜீவன் முக்தனுக்குத் தேகாதித்தோற்றம் பொருந்தும் நுகர்வினையாய தடையானே தத்துவ சாக்ஷாத்கார முதயமாயினும் நுகர் வினை அதன் காரிய காயாதித்தோற்றத் தொடர்பினுடைய உபாதானமாகிய அவித்தையின் இலேசத்தொடர்பு கூடலின் அஞ்ஞானத்தைப்போலப் பிரபஞ்சத்திற்கும் நேராகப் பிரஹ்ம சாக்ஷாத்கார நிவர்த்தியத்தன்மையேல் இது பொருந்துமதன்றே. விரோதியாகிய பிரஹ்ம சாக்ஷாத்கார முளதாகவே நுகர் வினைக்குத் தானாகவே இருப்பின்மையினானே அவித்தை லேச நிவர்த்திப் பிரதிபந்தகத்தன்மை கூடாமையின் என்பர்.

மூன்றாவது பரிச்சேதம் முற்றும்.

## நான்காவது பரிச்சேதம்.



### 42-வது அவித்தையின் லேசநிரூபணம்.

இனியிவ்வவித்யாலேச மென்பதியாதாம் எதன்றொடர்பாற் சீவன் முக்தியாமோ ஆவரண விக்ஷேப சக்தியோடு கூடிய மூல அவித்தையினது, நுகர் வினை நிகழ்காலக்காயமுதலியவற்றின்றொடர்பாட்டின் சாதகமாகியவிக்ஷேபசக்தியினது அம்சமெனச் சிலர் கூறுவர்.

கழுவிய காயம் வைத்த பாண்டந்தொடர்ந்த காயவாதனை கடுப்ப அவித்தையின் சமஸ்காரமென்பர் பலர்.

தத்தபட நியாயம் போலத்தொடரும் மூலஅவித்தையே யென்பர் சிலர்.

சர்வஞ்ஞான்ம ஆசிரியரோ:—விரோதியாய சாக்ஷாத்காரமாகியவழி இலேசமேனும் அவித்தையின் அநுவிருத்தியசம்பவமாதலின் ஜீவன் முக்தி சாஸ்திரம் சிரவணவிதியர்த்தவாதமாத்திரமாம். சாஸ்திரத்திற்குச் சீவன்முக்திப்பிரதிபாதனத்திற் பயனின்மையின். ஆகையால் நிதித்தியாசனமாற்றினோனுக்குப் பிரஹ்மசாக்ஷாத்கார உதயமாத்திரத்தானே சவிலாச வாசனை யவித்தையின் நீக்கமெனவும் ஒருபக்கங்கூறுவர்.

## 43-வது அவித்யாநிவிருத்தியின் வடிவம்.

இனியிவ்வவித்யாநிவிருத்தி யென்பதியாதாம்? ஆன்மாவேயாமென்பர் பிரஹ்மசித்திக்காரர். அதற்கு நித்தியத்தன்மையானே சித்தத்தன்மையாதலின்ஞானம்வாளாபோமென்னற்க; ஞானமிலதாயவழி அனர்த்தஹேதுவா மவித்தையிருத்தலினனே அநர்த்தமும் நிற்கும் என அதனைத்தேடலினனும் எஃதிருப்பின் அடுத்தகணத்தில் எதனதிருப்பாமோ எஃதில்லாதிருப்பின் இலதாமோ, அது அதனாற்சாதிக்கப்பெறுவதாம் என்னும் இலக்கணத்தைய்னுசரித்து ஆன்மரூபமாயினும் அவித்யாநிவிருத்திஞானசாத்தியமாதலினனும் என்றுணர்க. ஞானமிருப்பின் அடுத்த கணத்தில் ஆன்மரூப அவித்தையின் நிவிருத்தியிருக்கும், அஃதிலதேலாயின் அதன் பிரதியோகியாகிய அவித்தைவடிவ அதனபாவம் ஆமெனை அறைந்த இலக்கணமிருத்தலின்.

ஆன்மான்னியமேயாகும்அவித்தையின் நிவிருத்தி; அதுவும் சத்தல்ல, அத்வைதஹானியாதலின். அசத்தல்ல, ஞானத்தாற் சாதிக்கப்படுதல் நண்ணுமையின். சதசத்து வடிவுமல்ல, முரண்படுதலின். அநிர்வசனீயமுமல்ல, உற்பத்தியையுடைய அநிர்வசனீயத்திற்கு அஞ்ஞான உபாதானமுடைமைநியமத்தானே முக்தியின்கண்ணும் அதனுபாதான அஞ்ஞான அனுவிருத்தியடைவாதலின், ஞானநிவர்த்யத்தன்மையின் அடைவாதலினனுமென்க; மற்றுரே உரைத்த நால்வகையினும் மேலாகிய ஐந்தாவதுவகையா மென்பர் ஆனந்தபோத ஆசிரியர்.

அவித்தையையொப்ப அதன் நீக்கமும் அநிர்வாச்சியமேயாகும். அதனனுவிருத்தியாயவழி அதனுபாதானஅஞ்

ஞானத்திற்கும் அநுவிருத்தியனுகளின் பிரசுதியின்றென்னு ம்வழக்காம் என்னற்க அதனனுவிருத்தியிற் பிரமாணமில்லாமை யின். உற்பத்திக்கு முதற்சமயமாத்திரசம்சர்க்கிகமாயிருக்கும் தன்மைபோலும் நிவிருத்திக்கும் கடைக்காலமாத்திரசம்சர்க்கி பாவவிகாரப்பான்மை கூடலின். இதனுனே, எங்ஙனம், உற்பத் திக்கு முன்னும் பின்னும் உற்பத்தியாம் உற்பன்னமாயது என ச்சிர்வு இறவாக விலக்கிக்கும் உற்பத்திக்கு முதற்சமயமாத்தி ரத்தில் உற்பத்தியாகின்றது என நிகழ்வின் வியவகாரமோ அங்ஙனம், நிவிருத்திக்கு முன்னும் பின்னும் நிவிருத்திக்கும் நிவிருத்தியாயது எனச் சிர்வு இறவாகவிலக்கும் நிவிருத்திக் குக் கடைக்காலமாத்திரத்தில், நிவிருத்திக்கின்றது தேய்கின் றது, துவம்சமாகின்றது என நிகழ்வின் வியவகாரமாம்.

நிவிருத்தியனுவிருத்தியாயிரேனு தெடிகாட்டு முன்முன் டுபட்ட குடத்திலும் இஞ்ஞான்று நிவிர்த்திக்கின்றது என்பா தாதி விவகாரமாம். விகுதிகட்குப்பகுதிப்பொருளின் கருத்து வ்ள நிகழ்வு முதலியவற்றினர்த்தத்தை யமையுந்தன்மையுண் மையின். அற்றேல், அவைகட்குத் தத்தமவையமைப்பொருளு எண்ணிக்கையைப்பற்றிய பகுதிப்பொருளின் எழுவாய் செயப் படுபொருள்களிருக்கும் நிகழ்வு முதலியவற்றின் பொருளை யமையுந்தன்மையாதல், தம்மாற் கூறப்பட்ட பகுதிப்பொரு ளின் அனுகூலமாகிய வியாபாரத்திருக்கும் நிகழ்வு முதலிய வற்றின் பொருளையமையுந்தன்மையாதல் உளதாகுக; ஆகவே நிவிர்த்திக்கிரியையின் கர்த்தாவாகிய தெடிகாட்டுநாளிக்க கடா த்திற்கும், அதன் கண்ணிருக்கும் நிவிருத்தியனுகூல வியாபா ரத்திற்கும் நிகழாமையுண்மையின்கூறிய மிகு வழக்கின்றுமெ னின்? அற்றன்றும், ஆகியதில், உற்பன்னமாகிய கடத்தினும்

உற்பத்தியாகின்றது என்னும் விவகாரம் அடைவுறுதலின். உற்பத்திக்கிரியையின் கர்த்தாவாகிய கடத்திற்கு நிகழுதலுண்மையின்; மற்றதில், ஆமவாதரோகார்த்தப்பட்ட கலேபரத்தில் எழுச்சியனுகூல வியாபாரமிருப்ப எழுச்சியுண்டாகாதபோதினும் எழுகின்றதென்னும் விவகாரம் அடைவுறுதலின்; விகுதிப்பொருளாகிய, பகுதிப்பொருளான எழுச்சியனுகூல முயற்சிவடிவ வியாபாரத்திற்கு நிகழ்வுண்மையின். ஆகலின் பகுதிப்பொருளின் சன்னிருப்பதேயாகும் நிகழ்வு முதலிய விகுதிப்பொருள் எனத் துவம்சத்திற்கு நிலைபேறுற்றவழிநீள்பகலுடைந்த கடத்தும் நிவிருத்திக்கின்றதென்னும் விவகாரம் நீக்கமுடியாததாம். படைக்கல முதலியவற்றானே துண்டாக்கப்பட்ட குடத்திற்றுவம்சம் என்பதோரபாவம். அதனைப் பிரதியோகியாகவுடைய நிலைபெற்ற பூதலாதியாசிரிதமாக அங்கீகரிக்கப்படுமாயின்; கபாலமாலையை நீக்கியவழியும், அதனை நீக்காத வழியும் பானைசட்டி முதலியவற்றின் கபாலத்தினின்றும் வேறுபட்ட கபால சம்ஸ்தான விசேட தரிசனமிலாத வழியும் அது காட்சிப்படாதுதென்னைகொல்? கபாலசம்ஸ்தான விசேடத்தானே கருதத்தக்கதாம். கடத்துவம்சம் காட்சிப்படுவதன்றுமெனின்? அதனாற் படைக்கலவீழ்ச்சிக்காலத்திருப்பதற்கு உற்பத்தி யொப்பப்பாவவிகாரரூபமாதலினானே பிரதியோகியாசிரித துவம்சத்தின் அனுமானம்சம்பவிக்கின்றதாமெனை அதனாற்பின்னர்த்தொடர்ந்துநிற்கும்பிரதியோகியதிகரணத்தைப்பற்றியஅபாவரூபத்வம்சசித்தியாகாதாம். "ஈண்டுப்பூதலத்திற் கடந்துவஸ்தமாயது" எனப்பூதலத்தில் துவம்சாதிகரணத்வ விவகாரத்திற்கு "ஈண்டுப்பூதலத்தில் கடமுண்டாயது" என்பது போலப் பாவவிகாரத்தோடு கூடிய பிரதியோகியதிகரணத்வ விஷயத்வங் கூடலினானும்; கடத்

துவம்சத்தின் பின்னர்ப் பூதலத்தில் கடாபாவ விவகாரத்திற்குக் கடத்தை விலக்கியபின் அதனபாவ விவகாரம் போலும் சமய விசேஷ சம்சர்க்கியத்தியந்தாபாவத்தைப் பற்றலானே கூடலின் துவம்சவிடயத்வ கற்பனை வேண்டாமையினாலும் என்றுணர்க. இவ்வாறாகவே கட உற்பத்தியின் முன் அதனபாவவிவகாரமும்அத்தியந்தாபாவத்தானேபொருந்து மாறாகலாமென முன்னின்மையும் வேண்டாமாலோவெனின்? அதுவும் வேண்டாம். அற்றேல் இங்ஙனம் முன்னின்மையின் ஆதாரகாலம் முற்காலம் பின்னின்மையின் ஆதாரம் பிற்காலம் என இயம்பமுடியாமையின் காலத்தில் முன்பின் முதலிய விவகாரம்எதனைப் பற்றியதாயாம்? கடாதிகளில் பிரதியோகித் தன்மைமுதலிய விவகாரம் போலும் அகண்ட சிறிது தரும கோசரமாகுக. அபாவவடிவ நிலைப்பான துவம்சத்தை யங்கீகரித்த போதினும் அவற்றில் துவம் சத்தன்மையகண்டமே யெனக் கூறவேண்டலின். ஜன்ய அபாவத்வரூபமாகிய சகண்டமே துவம்சத்தன்மை யென்னற்க; துவம்சபிராகபாவரூபமாகிய கடத்திற்கு அதன்றுவம்சத்தன்மையினடைவாதலின் ஏழாவது பதார்த்த ரூப அபாவத்தன்மை அறையும் வேட்கை யெனின்; என்னற்க, கடத்திற்கு முன்னின்மைப் பொருட்டும் துவம்சத்வாபாவப்பிரசங்கத்தானே கடகாலத்தில் பிராகபாவப்பிறகாலத்தன்மை விவகாரம் பற்றுக்கோடின்றியதாகப் போமாதலின். பிரதியோகியினும் வேறாகியது பிராகபாவத்வம்சம் என்னற்க; அங்ஙனமாயின் சமநியாயத்தானே துவம்சப்பிராகபாவமும் பிரதியோகியினும் வேறேயாம் எனப் பிராகபாவத்துவம்சத்திற்கும் பிராகபாவம் அயலாம்; அதற்கும்மாறுதுவம்சம்; அதற்கும் பிரா

கபாவமயல் எனப் பிரமாண எல்லையில்லாத துவம்சப்பிரா கபாவகற்பனையினடைவாதலின். ஆன்மாசிரயாதி யிலாமல் அயலானதுவம்சத்வம் அறைய முடியாதன்றோ? இவ்வாறு பிராகபாவத்வமும் என இதன் விரிவுபிறவிடத்திற்காண்க. ஆகலின் முன் பிராகபாவமென்பதும், பின்றுவம்சாபாவ மென்பது மின்றாம். இடையிற் கேவலம் சிறிதுகாலம் அநிர்வசனீய உற்பத்திதிதிதுவம்சரூபபாவவிகார முடைய கடாதியத்தியாசமாம். இங்ஙனமாகவே அவித்தையின் நீக்கமும் பிரஹ்மசாக்ஷாத்கார உதயத்தின் பிற்கணத்திருப்பதாகியவொரு பாவவிகாரமாமெனா அதற்கு முக்தியில் அனுவிருத்தியபாவமாதலின் அதை யநிர்வசநீய மென்பதில் யாதொரு கோதுமின்றாமென்பர் அத்வைதவித்யாசிரியர். அற்றேல் இவ்வண்ணம் அவித்தையி னிவிருத்திக்குக் கணிகத்தன்மையேல் மோக்ஷம் நிலைபெற்றபுருடார்த்தம் ஆகாதொழியுமாலோவெனின்? மயங்கினோனையினைகொல் அவித்தையின் நீக்கம் தானுகவே புருடார்த்தம் அதற்கு ஞானசாத்தியத்தன்மை யங்கீகரிக்கப்படுமென்பதாக இன்றன்றோ? அதற்குச் சுகதுக்காபாவ இதரத்தன்மை யுண்மையின்; மற்றோ, அகண்டானந்தத்தை மறைக்கும் சமுசாரதுக்க ஹேதுவாகிய அவித்தையைச்சேதித்தலானே அகண்டானந்தவிளக்கமும் சமுசாரதுக்கநீக்கமும் ஆமெனா அதனுபயோகித்தன்மையானே அதற்குத் தத்துவஞான சாத்தியத்தன்மை யங்கீகரிக்கப்படும்.

சிற்சுக ஆசிரியரோ துக்காபாவமும் முக்தியின் கண்ணே சுயமாகப் புருடார்த்த மாகாதாம். யாண்டுந் துக்காபாவத்தைச் சொரூப சுக அபிவியக்தித்தடையபாவமெனக் கொண்டு சுகஅங்கமாக்கலின் சுகமே தானே புருடார்

த்தமாம். பிறயாவுமதற்கங்கமாம், என்பதாகச்சுகசாதனத்தன்மையுணர்வே பிரவர்த்தகமாகப் பொருந்துறும்போழ்து, துக்காபாவத்தையும் சுயமாய புருடார்த்தமென இனிது கற்பித்து அதன் சாதனப் பிரவர்த்தக சங்கிரகப்பொருட்டு இஷ்டசாதனத்தன்மை ஞானத்திற்கு இச்சை விடயத்தன்மைப்பிரவேசத்தானே அரிதிற் கோடலடங்கியதைப்பிரவர்த்தகமெனக்கற்பிக்கக்கூடாமையின். துக்காபாவமே தானே புருடார்த்தம், அதனதங்கமாக சுசம் விரும்பத்தக்கது என விபரீதஅடைவாகாததென்னை? ஆகாதாம், நீள்கால துக்கசாத்தியமானகணிகசுகத்தைதப்பயக்கும் இகழத்தக்க ஆலிங்கனாதிகளில் பிரவிருத்திகாணப்படுதலின்; ஆண்டுக்கணிக சுககாலத்ததாய துக்காபாவத்தைப் புருடார்த்தமெனின் அதன்பொருட்டு நீள்காலதுக்க அனுபவங்கூடாமையின். ஆண்டுக்கணிக சுகத்தைதப்புருடார்த்தமெனினும்கூறியகுற்றஞ்சமமன்றோ வென்னற்கபாவரூப சுகத்தில் மேன்மை தாழ்மையனுபவசித்தமாதலின் கணமாயினும் மிக மேன்மைச்சுகப்பொருட்டு நீள்காலத்துக்கானுபவங்கூடலின்; துக்காபாவத்திலோமேன்மைசம்பவியாமையின். ஆகையால் முக்தியில் சமுசாரதுக்க நீக்கமும் அவித்தையின் நீக்கமே போலச்சுகத்தினங்சமாம் என அநவச்சின்னஆனந்த அடைவே தானகப் புருடார்த்தமாம் என்பர்.

## 44-வது பிரமானந்தத்திற்குப் பிராப்பியத்தன்மை.

அற்றேல்அநவச்சின்னஆனந்தம் பிரத்தியக்கான்மவடிவத்தானே எப்போதுமே அடையப்பட்டுளதேயன்றோ? உண்மையே, அநவச்சின்ன ஆனந்தம் நித்தியப்பிராப்தமாயினும் அதை மறைத்து அதனினும் விபரீதமாகிய அநர்த்தத்தைதக்காண்பிக்கும் அவித்தையினனே சம்சாரதசையில் அசத்

தொப்பாந்தகைமைபடைவிக்கப்பட்டது எனக் கிருதார்த்தத் தன்மையிலதாமென்றுபது. அஃதொழியவே, எல்லா அநர்த்த விக்ஷேபங்களும் உள்ளப்பெற்றுத்தன் கழுத்திருக்கும் மறந்தகனகாபரணம் போலும் பெற்றதேபோன்மெனஉபசாரமாம். அதனது அடையத்தக்கமை யென்பர் சிலர்.

மற்றையரோ:—சம்சாரதசையில் இல்லை இலங்கிலது என்னும் விவகாரயோக்கியத்தன்மைவடிவ அஞ்ஞானாவரணத்தாலடிபடு மெனக்கு நிரதிசய ஆனந்தமின்றுமென்பதான உணர்ச்சி எங்கும் வெளிப்படையாம். அதன்பற்றுக்கோடுற்ற ஒரு பிரஹ்மானந்தத்தின் அபாவம் அவித்தைதொடர்ந்திருக்கும்வரைகற்பிக்கப்பெற்றதாம். அவித்தை யழியவே அதனை மூலமாக வுடைத்தாதலின் நீங்குகின்றதாமெனஎஃதிருப்ப அடுத்த கணத்தில் என்பதாதியிலக்கணத்தைப் பின்பற்றிமுக்கியமேயாம். அதனது அடைபத்தக்கமை யென மொழிவர்.

வேறு சிலரோ:—அறியப்படாததற்குப் புருடார்த்தத் தன்மையுண்மையின் சமுசாரதசையில் அநவச்சின்ன சுகமிருந்தபோதினும் அபரோக்ஷ விடயமாகாமையின் புருடார்த்த மன்றும். சொரூப ஞானத்தானே அபரோக்ஷ விடயமாதல் அக்காலும் உளதாம். அதற்கெக்காலும் சொரூபசுகாபின்னத் தன்மையுண்மையின் விருத்தி ஞானத்தனே அபரோக்ஷவிடயமாதலோ முக்தியின்கண்ணுமின்றும் என்னற்க; தனது விவகார அனுகூல சைதன்ய அபேத மாத்திரம் அபரோக்ஷத்தன்மையல்லவன்றே! கடாவச்சின்ன சைதன்ய அபிவியக்தியாயபோழ்து அதனோடபேத முற்ற கடகந்தத்திற்கும் அபரோக்ஷத்தன்மையினடைவாதலின்; மற்றே, மறைபடாத பொரு

ட்கு அதனபேதமாம். ஆகவே, மறைபடா அங்கிசம் தத்துவ சாக்ஷாத்காரமுளதாய வழியேயென நிரதிசயசுகசைதன்யபுருடார்த்தம் வித்தையாற் பிரத்தியக்கமாயடையத்தக்கதாமெனல் பொருத்தமுடைத்தாமென்பர்.

மற்றையரோ:—உளதாகுக விவகார அநுகூல சைதன்ய அபேதமாத்திரம் அபரோக்ஷத்தன்மையென. ஆயினும் அஞ்ஞானமகிமையானேன் ஜீவபேதம்போலும்சிதானந்தபேதமும்அத்தியஸ்தமாமெனச் சம்சாரதசையில் வேறுபுருடனுர்க்கு வேறுபுருடனுடைய சைதன்ய அபரோக்ஷ விடயமேபோல அநவச்சின்ன சுக அபரோக்ஷ விடயமும் இன்றும்; அஞ்ஞானம் நீங்கப்பெறின்றே சிதானந்தபேதமிலாதொழியவே அஃதபரோக்ஷ விடயமாம் என அதற்கு வித்தையாற் சாதிக்கப்படுந்தன்மையாம் எனச்சாற்றுவர்.

## 45–வது முக்தனுக்கு ஈசுரபாவ அடைவை மேழிதல்.

இனி வித்தையினுதய முற்றவழி உபாதியொழிந்துபோதலின் ஜீவபாவ மகன்றவனுக்கு ஈசுரபாவ அடைவுளதாகின்றதா? அல்லது சுத்த சைதன்யமாத்திர ரூபமாக நிலைபெற்றிருத்தல் உளதாகின்றதா? எனப்பகுக்கத்தக்கதாம். கூறப்படுகின்றது:—ஏகஜீவவாதத்தில்அவனதேக அஞ்ஞான கற்பித ஜீவஈசுராதியெல்லாப்பேதப்பிரபஞ்சமும் அவனது வித்தையினுதயமாகியவழி ஒழிந்துபோதலின் நிர்விசேஷ சைதன்யரூபமாகவே நிலைபேறடைதலாம். அநேகஜீவவாதத்தையங்கீகரித்துப் பத்தமுத்தவிவத்தையையங்கீகரிப்பினும், ஒருவனுக்குவித்தையினுதயமாகியவழி அவனது அவித்தையாலாக்கப்பட்டபிரபஞ்ச விலயமாயினும், அன்னியபத்தபுருடாவித்தையாலா

க்கப்பட்ட ஜீவேசுர விபாகாதிப்பிரபஞ்சந் தொடர்ந்துநிற்கு மென்றபோதினும் ஜீவனைப்போல ஈசுரரும் பிரதிபிம்ப விசேஷமென்னும்பக்கத்தில் முக்தனுக்குப்பிம்பபூத சுத்தசைதன்ய ரூபமாகவே நிலைபேறும். அநேகஉபாதிகளில்ஒன்றற்குப்பிரதிபிம்ப முளதாய வழி ஒரு பாதி விலயமாகவே அதன் பிரதிபிம்பத்திற்குப் பிம்பபாவமாகவே நிலைபெறுதல் தகுதியாதலின் வேறுபிரதிபிம்பத்தையடைவுறல் சம்பவியாமையின். அதுசம்பவிக்குமாயின் ஒருகால் ஜீவ ரூபப்பிரதிபிம்ப மயலொன்றுயமைவதினடைவை யுமாற்றவொண்ணாமையின் அவச்சேதபக்ஷத்திற்போல முக்தனுக்கு மீண்டும் பந்தத்தினடைவாம். அதனானே அநேக ஜீவவாதத்தில் அவச்சேதபக்ஷம் ஆதரிப்பதின்றாம். எதன் வரைவானே முக்தியோ அதன் வரைவானே அந்தக்கரணமயலொன்று சம்பந்திக்கின் மீண்டும் பந்த அடைவாம். பிரதிபிம்பன் ஜீவன், பிம்பத்தானீயர் ஈசுரர், இரண்டினும் புகுந்தொளிர்வது தூய சைதன்யம் என்னும் பக்ஷத்திலோ முக்தனுக்குச் சர்வ முக்திவரும்வரை சர்வஞ்ஞத்வ, சர்வகர்த்திருத்வ, சர்வேசுரத்வ, சத்திய காமத்வாதிகுண பரமேசுரபாவ அடைவினங்கீகாரமாம். எங்ஙனம் அநேகந்தருப்பணங்களில் ஒருமுகத்திற்குப் பிரதிபிம்பமுற்றவழி ஒரு தருப்பணமொழிக்கின் அந்தப்பிரதிபிம்பம் பிம்பபாவமாகநிலைபெறும்; முகமாத்திர ரூபமாக அன்றாம். அஞ்ஞான்றும்வேறு தருப்பண சந்நிதானத்தாலாக்கப்பட்ட பிம்பத்தன்மை வதனத்தில் அகலாமையின். அங்ஙனம் ஒரே பிரஹ்மசைதன்யத்திற்கு அநேக உபாதிகளில் பிரதிபிம்ப அடைவுறவே ஒருபிரதிபிம்பத்தில் வித்தையினுதயமாகஅதனான்அதனுபாதியகலவே அந்தப்பிரதிபிம்பத்திற்குப் பிம்பபாவமாக நிலைபெறுதலின் றியமையாததாய் முடியும். முக்தனுக்கவித்தையிலாமையின்

சத்தியகாமத்வாதிகுணவிசிஷ்ட சர்வேசுரத் தன்மையினடைவு கூடாதாமென்னற்க; அவனதவித்தையின்றேனும் அக்கால் வேறுபத்தரது அவித்தையிருத்தலின். ஈசுரரது ஈசுரத்தன்மையும் சத்தியகாமாதி குணவைசிஷ்டியத்தன்மையும் தமது வித்தையாலாக்கப்பெற்றதன்றன்றே; அவர்க்கு நிரஞ்சனத்தன்மையுண்மையின்; மற்றோ பத்தரது அவித்தையாலாக்கப்பெற்றதேயாகும் அவையாவும் என அங்கீகரிக்கத்தக்கதாம், "எத்தகைக்குணமுடையீசத்தியானவா, னித்தனாயிடையேயிசைகுவானோ, அத்தகையீசனையாகம்வீழ்ந்தடைவன்" "எவ்வெக்குணத்தொடுமீசனை யேத்துவர், அவ்வக்குணமுடையவனாயேயடைவர்" என்பதாதிசுருதிகளில் சகுண உபாசகர்கட்கும் ஈசுர சாயூச்சியங் கேட்கப்படுதலின் முத்திக்குச் சகுண வித்தையின் பலச்சம அடைவாம் என்னற்க; சகுண உபாசகர்கட்கு அகண்ட சாக்ஷாத்காரமின்மையின் அவித்தையின் நீக்கமின்றாம், அவரது மூல அகங்கார நீக்கமுமின்றாம், ஆவரணம் நீங்காமையின் அகண்டானந்த விளக்கமின்றாம். "உலக வியாபார மொழியும் பிரகரணத்தான் முன்னிலையின்மையினானும் "போகமாத்திரம் ஒப்புமைக்குறியானும்" என்பதாதி சூத்திரத்திற்கூறிய நியாயத்தானே அவர்கட்குப் பரமேசுரரோடு போகசமானத் தன்மையிருந்தபோதினும், சங்கற்பமாத்திரையானே தமது போகத்திற்குப் பொருத்தமான திவ்ய தேகேந்திரிய வனிதை முதலியவற்றைச் சிருஷ்டிக்கும் ஆற்றலிருந்தபோதினும், சகலஜகத்சிருஷ்டிசங்காராதிசுவாதந்திரிய இலக்கணம் வாய்ந்த நிரதிசயஐசுவரியமின்றாம் முத்தர்களோ எல்லாவடிவானுமே ஈசுரபாவத்தையடைந்து அவையாவற்றையுமேயடைவர் என்பதாகப் பெருஞ்சிறப்புளதாம்.

பரமேசுரருக்கு இரகுநாதாதி யவதாரத்தில் அறியாமை யோடுற்றமை துன்ப அடைவுமுதலியவைகேட்கப்படுதலின், முக்தர்கட்கு ஈசுரபாவ முறவே மீண்டும்பந்த அடைவாம் என்னற்க; அவர்க்கு விப்பிரசாப அமோகத்தன்மை முதலிய தாம்பியற்றிய மரியாதையைக்காக்கும் பொருட்டுத்தம்மிச்சை யினுனே பிருகுசாபாதிகள்சத்தியத்தன்மையையடைவுறுமா றுநடனகுப்ப ஈசுரருக்கு அதன் அபிநய மாத்திரபரத்தன்மை யுண்மையின்; அன்றியின் அவர்க்கு நித்தியமுக்தத்தன்மை யையும் தடையற்ற சுவாதந்திரிய ஒப்புயர்வுஇல்லாமைமுதலி யவற்றையுங்கூறு மறைமுரணன்றேவாம்.ஆகலின் சர்வமுக் திவரை பரமேசுரபாவம் முக்தனுக்காமெனப் பிம்பஈசுரபாவத் தில்யாதொரு கோதுமின்றும்.

இப்பக்கமே சுருதிசூத்திரபாடியாதியனுகுணமானதாம். அங்ஙனமன்றே:—சமன்வய அத்தியாயத்தில் ஆண்டு "தகர உத்தரங்களான்" என்னுமதிகரணத்தில்"'இனிப்பிரமபுரமாமி வ்வாகத்தில், தனிபெவ்விம்மனைத் தகர வீடுண்டோ, நனியத னுட் சிறு நபந்தானன்றே" என்பதாதி சுருதிகுறிப்பித்த தகர ஆகாசம் பூதாகாசமன்றும், ஜீவனும் அல்லனுவன்;மற்றே பரமேசுரரே, உத்தர வாக்கியசேடங்களானே,"இதனுளேவி ண் ணுமண்ணிரண்டுமிருப்பன,எத்துணையிந்நயம் அத்துணையி துவாம்,அந்தரிருதய ஆகாசமான்மா, இது மற மற்றது இகழ் ஜரையற்றது, மரணமுமற்றது மயல்துயரற்றது, பசூணபா னம் பாறிய விழைவது, சத்தியகாமம் சத்யசங்கற்பம்." என் பதாதியாற் பிரதிபாதிக்கப்பட்டவிண்மண்ணாதிகளின்ஆதார த்தன்மையிலக்கணங்களாகிய ஹேதுக்களானே என நிண்ணய ஞ்செய்து "உத்தரத்தாலெனின்பாரமார்த்திகமாயவடிவமோ"

என்னும் வேறுசூத்திரத்தானே, தகர வித்தையின் பின்னர் இந்திரப்பிரஜாபதி சம்வாதத்தில் "எவ்வான்மாப்பாவமற்றதோ" என்பதாதியானே பாபாதியற்ற பான்மைமுதலிய எண் குணத்தோடுகூடிய ஆன்மாவாகிய உபதேசிக்கத்தக்க வத்துவையினிது தொடங்கி "எவ்விவனக்கியிற் புருடன் காண்பன் இஃதான்மா" என நனவில் காண்போனுந்தன்மையானேவிழி முன்னிலைப்பட்டதற்கு "எவ்விது கனவில்இனிதுபூசிக்கப்படுவதாயனுபவிக்கின்றதோ இது ஆன்மா" எனக் கனவவத்தை கதுவியவனுக்கு, "யாண்டவ்விவன்றுயின்றிடுவன் எக்கரணமும், மாண்டுத்தனித்து மாவின்புறுவன், ஆண்டுக்கணுவையறியானிதான்மா" எனத்துயிலவத்தைப்பட்டவனுக்கு, "நலமுடனிருந்திது நனியுடலிதினின், றிலகிடவெழுந்துயரின்றொளியினிதடைந்,துலவுறுதன்னுருவாயொளிர்ந்திடுவன், றலையுறுமவனுத்தமமாம் புருடன்" என அவத்தாத்திரயங்கடந்த ஜீவனுக்குபதேசங்காணப்படுதலின் ஜீவனும் பாவமற்ற தன்மை முதலிய குணஷ்டகமுடையவனுவன் என அத்தகராகாசத்திற்குப் பரமேசுரத்தன்மையின் றுணிபுகூடாதாம்.எவ்விவன்கனவிலென்பதாதிபரியாயங்களுள் ஒவ்வொரு பரியாயமும் "இதனையே நினக்கு இனிது மீண்டுரைப்பல்" எனக்கேட்கப்படுதலின் வெளிப்படையான சுவப்நாதி ஜீவ லிங்கங்களையுடைய இரண்டாவது முதலிய பரியாயங்கட்கே ஜீவ விஷயத்தன்மையாம், பிரதம பரியாயத்திற்கும் பிரஹ்ம விஷயத்தன்மையாமெனச்சங்கைக்கிடமின்மையின் எனக்கடாவி ஆண்டு நான்காவது பரியாயத்தில் நிரூபிக்கப்படுவதாகிய சகல பந்தமுக்தத் தன்மையானே ஆவிர்ப்பூத சொரூபத்தையுடைய ஜீவன் பிரதிபாதிக்கப்பட்டவனுவன். சாம்சாரிக அவஸ்தாபேதகளங்கிதனுகான்; ஆண்டுச் சத்தியசங்கற்பத் தன்மை முதலிய குணம்

பாதிக்கப்படுதலின். அவஸ்தாத்திரய உபந்யாசமானது அவ்வவ்வவத்தையின்றேட மறைதலானே நான்காவதுபரியாய வுபதேச அங்கமாக அறியப்பெறுதலின் எனச்சமாதானிப்பவராய்ச் சூத்திரக்காரர் நான்காவது பரியாயத்திற் பிரதிபாதிக்கப்பட்ட முக்தனுக்கு ஈசுரபாவ அடைவை வெளிப்படையாய் விளம்புகின்றார். அஃதின்றேல் முக்தனிடத்தும் சத்திய சங்கற்பத்தன்மைமுதலியவை கூடாமையின் உபக்கிரமத்திற்கேட்கப்பட்டகுணஷ்டகத்திற்கு ஈசுரரினும்வேற்றிடத்திலிருப்பாதலின் செய்தசங்காபரிகார இலாபமின்மையினுனுமென்றுணர்க அச்சூத்திரத்தில்.ஆதலின் எவ்வவித்தையானே நிலைப்படுத்தப்பட்ட பாரமார்த்திகமல்லாத ஜீவசம்பந்த ரூபம் கர்த்திருத்வ போக்த்திருத்வ இராகத்வேஷாதி தோஷத்தாற்றாடிக்கப்பட்ட அநேகஅநர்த்தத்தோடுகூடியதோ அதன் இலயப்படுதலானே அதனினும் விபரீதமாகிய பாபமற்றதன்மை முதலிய குணத்தோடு கூடிய பரமேசுர ரூபத்தை வித்தையினனே அடைவன் என ஸ்ரீமத் பாஷ்யக்காரரும் மிக வெளிப்படையாய் முக்தனுச்குச் சகுண ஈசுரபாவஅடைவைக்கூறியுள்ளார். அவிரோத அத்தியாயத்திலும் "இவரேயினியஎழிற்ரெழிலியற்றுவித்,தவனையமவுலகலாவுயருலகை, நவுமுற நண்ண நாடா நிற்பர், இவரே யினிதிலாவெரிதொழிலியற்றுவித், தவனையமவுலகடைத்திடவவாவுவர்" என்பதாதிசுருதிக்கு அவ்வக்கருமத்தைச் செய்வோனுந்தன்மையானேயும் அவ்வக்கருமங்களைச் செய்வித்திடுவோனுந்தன்மையானேயும் உபகாரிய உபகாரகபாவத்தானேஉணரப்பட்டஜீவஈசுரர்கட்குஅங்கிச அங்கிசிபாவரூபசம்பந்தநிரூபணப்பொருட்டாந்தன்மையானே அவதரித்த "அங்கிசம் நாளுவாகநவிறலின்"என்னுமதிகரணத்தில் ஜீவனுக்கீசுர அம்சத்தன்மையையங்கீகரிக்

கில் அவனது சம்சார துக்கபோகத்தானேஈசுரருக்குந்துக்கித்
தன்மையாம்;உலகில்ஹஸ்தபாதாதியுளேதாவிதாரேங்கிசத்தா
ற்ற துக்கத்தானே அங்கிசத்தேவதத்தனுக்குத்துக்கித்தன்மை
யாமாபோலும்.அதனானேஅவரையடைந்தவர்க்குப் பெரிதினு
ம் பெருந்துயராம்; ஆகலின்முன்னவத்தையேயுயர்வானது சமு
சாரமேயிருக்குகவெனநன்ஞான அநர்த்தகவழக்காம்என்னும்
பாபதிமுதலியவற்றில்வெளிப்படையாக்கப்பட்டபிம்பப்பிரதி
பிம்பபாவத்தாலாயஅசங்கரங்கொண்டுநிர்விவாதமாகியசங்கை
க்கிரந்தத்தானே ஸ்ரீமத்பாடியக்காரர் முக்தனுக்குஈசுரபாவ அ
டைவெளிப்படையாக்கியுள்ளார். சாதனஅத்தியாயத்தினு
ம்''கனவிற் சிருட்டி கழறப்பட்டுளது'' என்னுமதிகரணத்தில்
கனுவுலகிற்குப்பொய்ம்மையைப்புலப்படுத்தியபோழ்துஆண்டு
பொய்ம்மை வாய்ந்த கனவுலகில் ஜீவனுக்குக்கர்த்திருத்த
கைமையைக்கடாவித் ''திகழீச்சுரருடைத்தியானத்தானோ''
இகழ்மறைபட்டதிங்கவராலிவற்குப், புகழுறுபந்தம் புகழுறு
முத்தி'' என்னுஞ்சூத்திரத்தானே ஜீவனுச்கு ஈசுர அபின்னத்
தன்மையுண்மையின் சத்திய சங்கற்பத்தன்மை முதலியவை
யிருந்தபோதினும் அவித்தையின்மூடத்தான் மறைபட்டன
என அவனுக்குக்கனுவுலகில் சிருட்டிக்குந்தன்மை சம்பவியா
தாம்என்பதாகக்கூறிக்கொண்டு ஸ்ரீசூத்திரக்காரர்,அவைமீண்டு
ம். மறைபட்டனவாய் முயல்பவனும் அபின்னமாய்த்தி
யானஞ்செய்பவனும், இருளை யிரித்தவனும், ஈசுரப்பிரசாத
த்தானே சித்தனும் ஆகியஎவனோஒருஜீவனுக்கே,திமிரக்காற்
றிரஸ்கரிக்கப்பட்ட நயனவாற்றல் ஔஷத வீரியத்தானே
ஆவிர்ப்பவிப்பதேபோலும் ஆவிர்ப்பவிக்கும்; இயற்கையானே
எல்லா ஜீவருக்குமில்லையாம் என வெளிப்படுத்தியுள்ளார். அச்
சூத்திரத்தின் கருத்தை வருணித்துக்கொண்டு ஸ்ரீமத் பாடியக்

காரரும் முக்தனுக்குக்கணுச்சிருஷ்டியாதியுபயோகியாயசத்திய சங்கற்பத்தன்மைமுதலியவற்றின் அபிவியக்தியங்கீகாரத்தானே பரமேசுரபாவ ஆபத்தியை வெளிப்படுத்தியுள்ளார். பலாத்தியாயத்திலும் " தன் வடிவத்தானே நிலை பெற்று நிற்பன்" என விடெபட்டவிஷயமாய சுருதியின்கண்ணே எவ்வடிவத்தானேநிலைபெற்றுநிற்பன்என்றியம்புமிச்சையென்பதையறிவானவாவிய வழி "பிராஹ்மமாகச்சைமினி யுபந்யாசாதிகனான்" என்னுஞ்சூத்திரத்தானே எப்பிரஹ்ம சம்பந்த ரூபம் பாவமற்ற தன்மைமுதல் சத்தியசங்கற்பத்வாதிவரை, சர்வஞ்ஞத்வசர்வேசுரத்வாதிகளும் அதனானே நிலைபெற்று நிற்றல்."எவ்வான்மாப்பாவமற்றதோ"என்பதாதியுபந்யாசத்தானே "முக்தன் பரத்திற் சிரித்து விளையாடி, மங்கைமாரோடேனும்வாகனங்களோடேனும்இரமித்தினிதிருப்பன்"என்பதாதினுஐசுவரிய ஞாபனத்தானும் என ஜைமினிமதமாம்."அறிவுதன்மாத்திரையதனானிருப்பன், உறுமதனுருவமுடைமையானே எனவே யவுடுலோமியியம்பும்." என்னும்பிற்சூத்திரத்தானே "இவ்வாறே மைத்திரேயீ! இவ்வான்மா உள்ளற்றது வெளியற்றது முற்றினும் பிரஞ்ஞான கனமேயாயது" என்பதாதி சுருதியினானே சைதன்யமாத்திரம் ஆன்ம சொரூபம்என அறியப்பெறுதலின் அதன் மாத்திரமாக நிலைபெற்று நிற்றல் என்னும் வேறுமதத்தையும்உபந்யசித்து' இங்ஙனமேனும்உபந்யாசத்தினின்றும் பூர்வபாவத்தான் அவிரோதம் பாதராயணர்" என்னுஞ்சித்தாந்தசூத்திரத்தானேவஸ்து திருஷ்டியாற் சைதன்யமாத்திரத்தன்மையிருந்தபோதினும்,மாயாமயமாயுபந்யாசாதியானேயறியப்பெற்றதாய் முன்மொழியப்பட்டகுணக்குழுவிற்குப்பத்தர் விவகாரதிருஷ்டியினானேசம்பவமிருத்தலின் இருசுருதிவிரோதமின்றும்என அவிரோதம்அறைந்து

ஸ்ரீ சூத்திரக்காரரும் இம்மூன்றுசூத்திரங்களைக்கூறியபொருட்பாமாய் வியாக்கியானித்து ஸ்ரீமத் பாடியக்காரரும் முக்தனுக்கீசுரபாவ அடைவைவெளிப்படையாய்க்கருதியுள்ளார். பாமநிபந்தன கர்த்தா முதலியவர்களும், சுருதியின் பொருளைவிரிக்கும்இச்சூத்திரக்குழுவும், ஸ்ரீமத்பகவான் பாடியக்காரரதுஉதாகரித்தவசனசமூகமுமவ்வாறே நிகழ்கின்றனசுருதியின்பொருள்விரிக்கும்இச்சூத்திரபாடியவசனசமுதாயத்திற்கு ஐசுவரியம் அஞ்ஞானத்தான் மறைபட்டதாய்த் தியானத்தானே நிகழாநிற்குமெனக்கூறியது, இத்தேகிக்குச் சூத்திரமியற்றினோர், இயாதோவதனையங்கீகரித்தே, கூறினர் கூறியவேறு இன்றானே" எனச்சங்க்ஷேப சாரீரகங்கூறியமுறையே அங்கீகரித்துரைக்கும் வாதத்தன்மையைப் புகல்வான் பொருத்தமன்றாம்; ஆகலின் முக்தர்கட்கு ஈசுரபாவ அடைவையின்றியமையாதங்கீகரிக்கவேண்டலின், இதனசம்பவமே பிரதிபிம்பேசுரவாதத்திற்றோடமாம். அதனைக்கூறியுள்ளார்கற்பதருக்காரர்:—"ஆயவிமுக்தரானடைவுறுந்தன்மை, மாயையின் பதிவிம்பத்திற்கின்றாம்" என்பதாம். இதனசம்பவமும் ஏகஜீவவாதபாரமார்த்திக ஜீவபேதவாதங்களிலுந்தோடமாம். சிலதுவைதிகளானே கூறப்படுகின்றதாவது:— பேதம்பாரமார்த்திகமாதலினானே முக்தியில் ஜீவனுக்கீசுரபாவமின்றேனும் ஆண்டுமீசுரரைப்போலவே தனியாகப்பாவமற்றதன்மையாதி குணஞ்சம்பவித்தலின் அவிரோதமாம் என; அது துச்சமாம், அவ்வாறாயின் ஜீவனுக்குப்பாவமற்ற தன்மைமுதலியவை உள்வாமென்றவைக்குப் பிரஹ்மலிங்கத்வமின்றெனச் சங்கைபரிகாரவாபமிலாமையின், "உத்தரத்தானெனின் ஆவிர்ப்பூதசொரூபமே" என்னுஞ்சூத்திரவிரோதத்தான், "பிராஹ்மத்தாற் சைமினி" யென்னுஞ்சூத்திரத்தில் ஜீவனிடத்திருக்கும் பாவமற்ற

தன்மைமுதலியவற்றின் உபந்யாசாதிகளினின்றும் என்பதா ளாதி சப்தார்த்தத்தன்மையானே மற்றையர்க்குமங்கீகாரமா கிய "சிரித்து விளையாடிபிரமித்தல்" என்பதாதி சுருதி கூறிய தாஞ்சிரிப்பு முதலியவற்றிற்கும்பிராஹ்மகத்தன்மை நிர்த்தே சவிரோதத்தாலும் பேதமாயின் அக்குணங்கட்குச்சத்தியத் தன்மையிருத்தலின் "அறிவுதன்மாத்திரையான்" என்னுஞ் சூத்திரத்திற்கூறிய முக்த ஜீவர்களினது சைதன்யமாத்திரத்த ன்மைக்கு "இங்ஙனமாயினும்" எனச்சித்தாந்த சூத்திரத்தில் அங்கீகாரவிரோதம் வருதலினானும். "அநுபவித்தாவிர்ப்பா வம்" என்னும் அதிகரண விரோதத்தானும். ஆண்டே "தன் வடிவானே நிலைபெற்றிருப்பன்" என்னுஞ்சுருதியில் இடையி ல் வந்த ஏதேனுமொரு வடிவத்தான் நிலைபெறுதலைக் கூறப் படவில்லை; தன்னென்னுஞ் சப்தம் வீணாதலின். எவ்விடை யில் வந்துற்ற வுருவத்தானேசுயம் நிலைபெறுதலையடைவனே அதற்குத்தன்னதாந்தன்மை சாற்றமுடியாமையின். ஆகலின் ஆன்மாவைக்கூறும் என்னென்னும் சப்த உபாதானத்தான்நித் தியசித்தமாகிய தன் வடிவத்தானே நிலைபெற்றிருத்தல் விளம் பும் வேட்கையாம்; வேறொரு தருமத்தானே யின்றுமெனவி வத்தை செய்யப்பட்டுளது. மேலும் இப்பாவமற்ற தன்மை முதலியவை ஜீவனுக்கு முக்தியில் வரவுடையதூமாயின் "அ னுபவித்தாவிர்ப்பாவம்" எனமுக்தியில் வரவுடையுருவ நிடே தத்தானும், "பரன பின்னத்தியானத்தானே மறைபட்டது" "உத்தரத்தாலெனின்ஆவிர்ப்பூதசொரூபமோ" எனப் பாவமற் ற தன்மை முதலியவற்றிற்குப் பந்தமுக்திகளில் மறைப்புந்தி றப்புமறைதலானும், விரோதமாமென நித்தியசித்தமெனநிக ழ்ததத்தக்கது, தகவே பந்தத்திற்கும்பொய்ம்மை யகற்றமுடி யாதாம். நித்தியசித்தமாகிய பாவமற்ற தன்மையோ எப்போ

தும் பாவமற்ற தன்மையாம். உண்மையாக எப்போதும்
பாவமற்றதில் பாவ சம்பந்தமேனும், பாவசம்பந்த மூல
கர்த்திருத்வ போக்த்ருத்வ சம்பந்தமேனும் பாரமார்த்திக
மாகச் சம்பவியாதாம் இவ்வாறாகவே ஜீவனுக்கு ஈசுர அபேத
மும் நீக்க முடியாததாம்; சுருதியினுற் போதிக்கப்பெற்ற
அதனபேத விரோதிபந்தத்திற்குச் சத்தியத்தன்மையின்மை
யின்; மாறாயினே, சம்சாரியின்பால் நித்தியசித்தசத்திய சங்க
ற்ப மறைப்பின் கூற்றுக்கூடாமையானும் என்க. ஜீவனுக்குச்
சமுசாரத்தசையில் தொடர்ந்து நிற்கும் ஒருசிறிதர்த்தகோசர
சத்தியசங்கற்பமறைப்பொன்றுளதெனை மற்றையாரானும் அங்
ஙீகரிக்கப்படுவதுமின்றாம்; மற்றேறு, ஈசுரது நித்தியசித்தமா
கிய நிரதிசயசத்திய சங்கற்பத்தன்மையே ஜீவனுக்குச்சமுசா
ர தசையில் ஈசுர அபேத அபிவியக்தியிலாமையின் தன்னை
தாக ஒளிரப்பெறுததாய் அவன் பொருட்டு மறைபட்டது என
ன்பதாகவே பொருந்தத்தக்கதாம் எனச்சுற்றிச்சுற்றிச்சங்கச்
சாவடியில் விடிந்ததென்னும் கதையாம். அற்றேல், பாவமற்
றதன்மை, பாவ அபாவமன்றாம்; மற்றேறு, பாபலேசமாகிய
கர்மாசரணத்திலும்பாவஉற்பத்திப்பிரதிபந்தகசக்தியுற்றிருக்
குந் தகைமையாம் என அதற்கு நித்தியசித்தத்தன்மையுண்
மையானே பந்தத்திற்கு மித்தியாத்தன்மைப் பிரசங்க மின்
றாம்; இவ்வாறு சத்திய சங்கற்பத்தன்மையும் சத்திரூபமாகச்
சாற்றத்தக்கதாம் என ஈசுர அபேதப் பிரசங்கமுமின்றாமெ
னின்? அற்றன்றாம், இங்ஙன்சப்தார்த்த கற்பனையின் கண்ணா
னவையின்மையின். பாவம் பயப்படைத் தடைப்படுத்து மாற்
றல் சம்சாரரூபச் சுழற்சித்தசையில் பாவம் பயவாமற்பொரு
ட்டுக் கற்பிக்கத்தக்கதன்றாம்; அக்கால் அதனுதயமிட்ட மாத
வின். வித்தையுதயமுதலியவையோ வித்தையின் மகிமையி

னுனே பற்றற்றமை "அதனைக் கண்டுழிபின்முன்னகங்கள், பற்றற்றழிவன வதனைப்பகர்தலின்" என்னுஞ்சூத்திரத்தானே காண்பிக்கப்பட்டதாம். அதனுனே முக்தியின் கண்ணும் பற்றற்றமை பொருந்தா நிற்கும் எனச் சக்தி கற்பனை வீணேயாம். ஆகலின் உதாகரிக்கப்பட்ட சுருதி சூத்திர அனுசாரிகளானே முக்த ஜீவர்கட்குச் சர்வ முக்திவரை உண்மையாகச் சைதன்யமாத்திரத்வ அவிரோதிபாய பத்த புருட அவித்தையாலாக்கப்பட்ட தடையற்ற ஐசுவரிய அதனனுகுணகலாப விசிஷ்ட நிரதிசய ஆனந்த விளக்கச் சம்பத்தாகிய, சர்வான்மகமாகப்பரமேசுரபாவஅடைவு ஆதரிக்கத்தக்கதாமெனத் துணியப்பெறும். சுபம். சுபம். சுபம்.

அருஞ்சுத்தாகம முடிபினையயைறச் செந்தமிழிற்
றருஞ்சித்தாந்தலேசத்தினைத் தடையறக் கொடுநீ
யிருஞ்சித்தாபகமகிழ்தர வெளியனேற்கருள்வாய்
விரிஞ்சித்தேவசீர் வீரமாதவ சரண்சரணே.

## சித்தாந்த லேச சங்கிரகம்.

## முற்றிற்று.

Printed at The "Odsit" Press, Choolai Madras. - 1917.